திருவில்லிபுத்தூர்

# அருள்மிகு ஆண்டாள் கோயில்
# திருவிழாச் சிறப்புக்கள்

*(Salient Features of Festivals of Arulmigu Andal Kovil at Srivilliputhur.)*



டாக்டர். ஐ. இராமராசா

# திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாச் சிறப்புக்கள்

*(Salient Features of Festivals of Arulmigu Andal Kovil at Srivilliputhur.)*



டாக்டர். ஐ. இராமராசா, எம்.ஏ , எம்.ஃபில்., பிஎச்.டி.,
முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி),
சிவகாசி - 626 124

அமுதா சங்கரி பதிப்பகம்,
6/142 அருள் அய்யனார் இல்லம்,
சிவானந்தம் நகர்,
சிவகாசி - 626123.

"THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS "



| | | | |
|---|---|---|---|
| 1. | Title of the book | : | Srivilliputhur Arulmigu Andal kovil Thiruvizha Cirappukkal |
| 2. | Author | : | Dr. I. Ramaraja, M.A., M.Phil., Ph D., H.O.D of Tamil (P G.) Ayya Nadar Janaki Ammal College (Autonomous), Sivakasi – 626 124. |
| 3. | Publisher | : | Thirumathi R. Samuthirakkani. |
| 4. | Language | : | Tamil |
| 5. | Edition | : | First |
| 6. | Date of Publication | : | 26 .11.1994 |
| 7. | Paper used | : | 14.4 Kg. Cream Wove |
| 8. | Size of the book | : | Demy 1 x 8 |
| 9. | Printing type used | : | 10 Point |
| 10. | Number of Pages | : | xiii + 158 |
| 11. | Number of copies | : | 1000 |
| 12. | Typesetting | : | Maran Typographics 116 H4, P.K.S. Arumugam Road, Sivakasi – 626 189. |
| 13. | Printers | : | Yessaar Offset Printers, 1E, Velayutham Road, Sivakasi – 626 123. |
| 14. | Binding | : | Pulp Board |
| 15. | Subject | : | Temple Festivals |
| 16. | Price | : | Rs. 24.75 |

வெளியீடு : அமுதா சங்கரி பதிப்பகம்,
6/142 அருள் அய்யனார் இல்லம்,
சிவானந்தம் நகர்,
சிவகாசி - 626 123.
காமராசர் மாவட்டம், தமிழ்நாடு.

இப்புத்தகம் திருமலை திருப்பதி அறநிலையம் அளிக்கும் நூலாசிரியர் ஊக்குவிப்புத் திட்டத்தின் பொருளுதவியுடன் வெளியிடப்பட்டுள்ளது.

# உள்ளுறை

டாக்டர். ஐ. இராமராசா.
முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள்
கல்லூரி (தன்னாட்சி),
சிவகாசி - 626 124.



# நன்றியுரை

மதுரை, தியாகராசர் கல்லூரியில், 'திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்கள்' என்ற தலைப்பில் ஆய்வு செய்ய இசைவளித்த மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கு முதற்கண் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

'திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாச் சிறப்புக்கள்' (Salient Features of Festivals of Arulmigu Andal Kovil at Srivilliputhur) என்ற இந்நூல், சிறந்த முறையில் உருவாக, ஆர்வத்துடன் நெறிப்படுத்திய டாக்டர். ஆ. இராமகிருட்டிணன், வித்துவான் (தமிழ் & இந்தி), எம்.ஏ. (தமிழ்), ஏம்.ஏ. (ஆங்கிலம்), பிஎச்.டி. (தமிழ்த்துறை, தியாகராசர் கல்லூரி, மதுரை) அவர்களுக்கு எனது நெஞ்சுநிறை நன்றியினை உரிமையாக்குகின்றேன்.

இந்நூல் விரைந்து வெளிவந்திட அனுமதி வழங்கிய சிவகாசி, அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி)யின் தன்னிகரில் மாட்சிமிகு ஆட்சிக் குழுவினர் அனைவர்க்கும், எனது இதய நன்றி. குறிப்பாகச் சிற்சில நற்சொற்களாலேயே என்னை ஊக்கப்படுத்தி, கேட்டவுடன் மனமகிழ்ந்து ஏற்றதொரு 'வாழ்த்துரை' நல்கி, நான் எனது கல்விப்பணியில் மென்மேலும் முயன்றுழைத்து வெற்றிபெற்று உயர்ந்திட, வெள்ளத்தனைய உள்ளன்பு காட்டித் தோன்றிய துணையாய்,மனித தெய்வமாய் உதவிநிற்கும் எங்கள் கல்லூரித் தாளாளராம் தன்ஃபிகரில் அரிமா அ. வைரப்பிரகாசம் அவர்களுக்கு எனது இதயநன்றி என்றென்றும் உரியதாகும்.

அன்பால் அரவணைத்து, நற்பண்பால் பாராட்டி, ஆன்ற அறிவுரைகள் நல்கி, எனது கல்வித்துறை வளர்ச்சிக்கு நல்லதொரு வழிகாட்டியாய் இலங்கி, வாஞ்சையுடன் இந்நூ(லு)க்குப் பெ(ரு)ந்தமான ஓர் 'அணிந்துரை' வழங்கியுள்ள உழைப்பால் முன்னேறிச் 'சிறந்த முதல்வர்' விருதுபெற்று, இமயமென உயர்ந்து நிற்கும் எமது கல்லூரி முதல்வர்

டாக்டர். அ. பவுன்ராசா, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி. அவர்களுக்கு எனது இதயம் கனிந்த நன்றி.

எனது அரிய முயற்சிகளுக்கெல்லாம் உறுதுணையாய் நின்று, இந்நூலுக்கு நல்லதொரு 'பாராட்டுரை' அளித்துச் சிறப்பித்த 'அஞ்சாக்'கின் இளநிலைத் தமிழ்த்துறைத் தலைவர் திரு. சி. முருகன், எம்.ஏ., எம்.ஃபில், அவர்களுக்கும் உள்ளன்புடன் எனக்கு உறுதுணையாய் இருந்துவரும் 'அஞ்சாக்' முதுகலைத் தமிழ்த்துறை விரிவுரையாளர்களாம் திரு.க. செயராசு, எம். ஏ., எம்.ஃபில். அவர்களுக்கும், டாக்டர். சு. அழகேசன், எம்.ஏ., பிஎச்.டி. அவர்களுக்கும், மன மகிழ்வுடன் உதவிகள் பலசெய்து, என் உன்னத நண்பராய்த் திகழும் 'அஞ்சாக்' நூலகர் திரு. தி. காசிராஜன், எம்.ஏ., எம்.எல்.எம்.எஸ். அவர்களுக்கும், இந்நூல் நன்முறையில் வெளியீடாக ஒல்லும் வகையெல்லாம் உதவிய நல்லுள்ளத்தார் அனைவர்க்கும் எனது உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலுக்குத் தேவையான பற்பல நுட்பமான செய்திகளைப் பக்தகோடிகள் படித்துப் பயனுறும் வண்ணம் சொல்லியருளிய திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் வேதப்பிரான் பட்டர் திரு. கோவிந்தராஜ ஐயங்கார், அவரின் அருந்தவப் புதல்வர் திரு. கோ. விஷ்ணு சித்தன் பி.எஸ்சி. (Central Bank of India, Sivakasi), அர்ச்சகர் திரு. எம். வெங்கட்ராம பட்டர், அரையர் திரு. ஸ்ரீநிவாச ரெங்காச்சாரியார், மணியம் திரு.எஸ். கண்ணன் ஐயங்கார், கோயில் நிர்வாகி திரு. இ. தேனையா எம்.ஏ., பி.எல். ஆகிய அனைவர்க்கும் எனது மனமார்ந்த நன்றி.

இந்நூல் இனிதே அச்சேற தோன்றாத் துணையாய் நின்று, திருமலை திருப்பதி அறநிலைய சமய நூல் வெளியீட்டுஆசிரியர் ஊக்குவிப்பு நிதியினைப் பெற உதவிய திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவரும் பேராசிரியருமான டாக்டர். பொன். சௌரிராஜன் அவர்களுக்கும், தோன்றிய துணையாய் நின்று, இந்நிதியினைப் பெறுதற்கான விண்ணப்ப இதழினை உடனனுப்பி வைத்து, நல்லாற்றுப் படுத்திய திருச்சி, பாரதிதாசன் பல்கலைக் கழகத் தமிழியல்துறைப் பேராசிரியர் டாக்டர். அரு. மருததுரை அவர்களுக்கும் எனது நன்றி என்றும் உரியதாம்.

திருமலை-திருப்பதி தேவஸ்தான நிதியுதவியுடன் உருவாகும் சமயநூல்கள் அனைத்தும் சிறந்த முறையில்

வெளியாகத் தேவையான உதவித் தொகையினை அதிகரித்து அமைத்த அனைவர்க்கும் நன்றி. விண்ணப்பித்த குறுகிய கால எல்லைக்குள் இந்நிதியுதவியினைப் பெற்றிட, வேகத்தோடும் விவேகத்தோடும் செயல்பட்ட திருமலை திருப்பதி அறநிலைய நிர்வாக அதிகாரி (Executive officer) அவர்களுக்கும், உடனுக்குடன் மடல் அனுப்பி, முறைப்படி நான் ஆற்ற வேண்டிய கடமைகளை அறிவித்து, ஆர்வத்துடன் உதவிநிற்கும் தேவஸ்தான சமயநூல் வெளியீட்டுப் பிரிவு ஆசிரியர் (Editor) திரு. K.சுப்பாராவ், எம்.ஏ. அவர்களுக்கும், தேவஸ்தான நிதிநிலைத் தணிக்கை அதிகாரி (Audit Officer) அவர்களுக்கும், திருமலை - திருப்பதி தேவஸ்தான மக்கள் தொடர்பு அதிகாரி (Public Relation Officer) அவர்களுக்கும், எனது நெஞ்சுநிறை நன்றி என்றென்றும் உரியதாம்.

தெய்வத்திருவிழாச் சிறப்புரைக்கும் இச் சீரிய நூலினைச் செவ்வனே அச்சிட்டு, உரிய காலத்தே வெளியீடாக்கிடப் பெருமுயற்சியினை மேற்கொண்ட சிவகாசி, மாறன் டைப்போகிராஃபிக்ஸ், எஸ்ஸார் ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர்கள், அலுவலர்கள் அனைவர்க்கும் எவ்வளவு நன்றி பாராட்டினாலும் தகும்; மிக்க நன்றி.

பக்தர்கள் அனைவரும் படித்துப் பயன்பெறும் வண்ணம், என்றென்றும் எம்மைக் காத்தருளும் எல்லாம் வல்ல திருப்பதி அருள்மிகு ஏழுமலையானது இணையடிகள் தொழுதேத்தி, அவரருளால் உருவான இச்சமய நூலை அவருக்கே காணிக்கையாக்கி மகிழ்கின்றோம். இறையடியவர்களாம் பக்தர்களின் நல்லாதரவை நாடுகின்றோம்.

சிவகாசி, அன்பன்,
26.11.94. ஐ. இராமராசா.

அரிமா. அ. வைரப்பிரகாசம்,
*தாளாளர்,*
*அய்ய நாடார் ஜானகி அம்மாள்*
*கல்லூரி (தன்னாட்சி),*
*சிவகாசி - 626 124.*
*காமராசர் மாவட்டம்,*
*தமிழ்நாடு.*



## வாழ்த்துரை

*எங்கள் அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி) முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர். ஐ. இராமராசா அவர்கள், திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயிலில் நடைபெறும் வழிபாட்டு முறைகள் மற்றும் திருவிழா நிகழ்ச்சிகளைத் தொகுத்து, 'திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள்கோயில் திருவிழாச் சிறப்புக்கள்' என்ற தலைப்பில் ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். இஃது ஆன்மீகத்திற்கும் தமிழுக்கும் சிறந்த தொண்டாகும். அவருடைய இந்த முயற்சியை வரவேற்பதுடன் அவர் இன்னும் பல நல்ல தமிழ் நூல்களைப் படைத்துத் தமிழன்னைக்கு அணி சேர்க்க எனது நல்வாழ்த்துக்கள்.*

*சிவகாசி,* <br>
*5.11.1994.*

*அ. வைரப்பிரகாசம்.* <br>
*தாளாளர்,*

டாக்டர், அ. பவுன்ராசா, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
முதல்வர்,
அய்ய நாடார் ஜானகி அம்மாள்
கல்லூரி (தன்னாட்சி),
சிவகாசி - 626 124.
காமராசர் மாவட்டம்,
தமிழ்நாடு.




## அணிந்துரை

குருவாயூரப்பனைத் தரிசித்துவிட்டு வந்த மூன்று நான்கு நாட்களுக்குள் விஜயதசமி நாளன்று (14.10.'94), எங்கள் கல்லூரி முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். ஐ. இராமராசா அவர்கள் எழுதிய 'திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாச் சிறப்புக்கள்' என்ற நூலை ஒரே மூச்சில் படித்துமுடிக்கப் பெருமாளின் கட்டளை கிட்டியது.

*கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்*
*சோதி மணிமாடம் தோன்றுமூர்- நீதியால்*
*நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்*

(ஆண்டாள் வாழித் திருநாமம்) என வேதப்பிரான் பட்டரால் சிறப்பித்துக் கூறப்படும் திருவில்லிபுத்தூரிலுள்ள சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாய் வாழ்ந்த ஆண்டாள் நாச்சியார் திருக்கோயில் அன்றுமட்டுமன்று, இன்றும் பெருமையுடைய திருப்பெருங்கோயில். தமிழக அரசின் இலச்சினையே இக்கோபுரம்; எனில், இக்கோயிலின் சிறப்பினைக் கூறவும் வேண்டுமோ ? இத்தகைய சிறப்புமிகு கோயிலில் ஆண்டு முழுவதும் கொண்டாடப்பெறும் திருவிழாக்களைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் இதன் ஆசிரியர் தொகுத்து அளித்துள்ளார். எம்.ஃபில். பட்ட ஆய்விற்காக இந்நூலாசிரியர் எடுத்துக்கொண்ட முயற்சி, இக்கோயில் திருவிழாக்களைப் பற்றிய நம்பகமான ஆவணமாக ஆயிற்று.

மானுட ஆண், பெண் இருவர்கொண்ட அழியாக் காதல் காவியங்கள் பல. ஆனால், இறைவனையே ஒரு வெறியோடு காதலித்த மானுடப் பெண்டிருள் நமக்கு நன்கு தெரிந்தவர்கள் இருவரே! அவர்கள் தென்னாட்டில் ஆண்டாளும் வடநாட்டில் மீராவும் ஆவர். ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஒருத்தி மகனாய் வளர்ந்த கண்ணனையே சதா நினைந்துருகி,

*ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்(று)*
*உன்னித்து எழுந்தவென் தடமுலைகள்*
*மானிட வர்க்கென்று பேச்சுப்படில்*
*வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!*

எனத் துணிந்து வாழ்ந்து, பெருமாளே வரவழைத்துத் தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொள்ளுமளவிற்குத் தீவிரமான பக்தி ஆண்டாளுடையது. அதனாலன்றோ பெரியாழ்வார், ஆண்டாள் வாழ்ந்த தனது இல்லத்தையே கோயிலாக்கி மகிழ்ந்தார். அர்ச்சிக்கப் பூ எறிதற்குப் பதிலாகக் கல்லெறிந்த சாக்கிய நாயனாரின் பக்தியும் எச்சிற்பட்ட ஊனை இறைவனுக்குப் படைத்த கண்ணப்ப நாயனாரின் பக்தியும் எப்படிச் சிவனுக்கு மிகவும் உவப்பானதாய் இருந்ததோ அப்படியே மாலுக்குரிய மாலைகளைச் சூடிக் கொடுத்த நாச்சியாரின் செயலைப் பெரியாழ்வார் அபச்சாரம் எனக் கருதினாலும், அரங்கனுக்கோ அதுவே சிறந்த ஆசார சீலமாகப் படுகின்றது. அதனால் தான் திருவில்லிபுத்தூரில் பெருமாள் தனக்கெனச் சந்நிதி இன்றி ஆண்டாளுடனேயே அமர்ந்திருக்கிறார். இத்தகைய வலுவான பக்தி செலுத்திய ஆண்டாள், பன்னிரு ஆழ்வார்களுள் மிகச்சிறந்த ஆழ்வாராகிறார்.

ஆண்டாளை முதலில் நமக்கு அறிமுகப் படுத்திய பின்பு, நூலாசிரியர் நாச்சியார் திருக்கோயிலின் அமைப்பினை விளக்குகிறார்; அதன் பின்னர் அக்கோயிலில் கடவுளர்க்கும், ஆழ்வார்கட்கும், ஆசாரியர்கட்கும் என்னென்ன விழாக்கள் எவ்வெவ்வாறு எடுக்கப் படுகின்றன என விளக்குகிறார்; விழாக்களின் பொதுஅமைப்பையும் கூறி, விழாக்களுடன் தொடர்புடைய அனைவரைப் பற்றியும் விவரிக்கிறார்.

ஆண்டாள் கோயில் திருவிழாக்களைப் பற்றி விடுபட்ட செய்திகள் எவையும் இல்லையென்று சொல்லுமளவிற்கு, இந்நூலாசிரியர் எல்லாச் செய்திகளையும் தொகுத் தளித்துள்ளார்; விழா நிகழ்ச்சிகளுள் ஒவ்வொன்றும் நமது வாழ்க்கையில் அன்றாடம் நிகழும் செயற்பாட்டுடன் தொடர்புபட்டிருப்பதை விளக்குகிறார்; கோயில் திருவிழாக்கள் வெறும் சமயச் சார்பானவையாக மட்டும் அமைந்துவிடாது, சுற்றியுள்ள சமுதாயத்தோடு எவ்வாறு பின்னிப் பிணைந்து கிடக்கின்றன என்பதையும் அவை திருவில்லிபுத்தூர் மக்களின் பொருளாதாரத்தில் பெருந்தாக்கத்தை எவ்வாறு ஏற்படுத்துகின்றன என்பதையும் விளக்குகிறார்; எல்லாவற்றிற்கும் மேலாக, உலகியல் அனுபவங்கள்

தெய்வத்தை அடைவதற்கான உபாயங்களுக்குத் தடையாக மாட்டா; உலக இன்ப அனுபவங்களைக் கொண்டே தெய்வநெறியில் நிற்க முடியுமென்பதை இக்கோயில் விழாக்கள் எவ்வாறு எடுத்துக் காட்டுகின்றன எனவும் விளக்குகிறார்.

திருப்பதி தேவஸ்தானத்தின் பொருளுதவியுடன் முனைவர் ஐ. இராமராசா அவர்கள் வெளியிடுகின்ற இந்நூல், அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்கள் பற்றிய ஒரு செய்திக் களஞ்சியமாக விளங்குகின்றது. அடிக்கடி இக்கோயிலுக்குச் செல்பவர்கள்கூட அறிந்திராத பல செய்திகள் இந்நூலின்கண் சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும், இந்நூல் திருவிழாக்களின் பொருளை உணர்ந்து ஈடுபாட்டுடன் பொதுமக்கள் கோயில் விழாக்களில் பங்குபெற உதவும். இந்நூல் வைணவத்திற்கும் தமிழுக்கும் ஒருசேரப் பெருந்தொண்டாற்றக் கூடியது, நூலாசிரியரை அவரது முயற்சிக்காகப் பாராட்டுவதுடன் தமிழ் மக்கள் அனைவர்க்கும் இந்நூல் பயன்பட வேண்டுகின்றேன்.

சிவகாசி,
15.10.1994.

இவண்,
அ. பவுன்ராசா.

பேராசிரியர். சி. முருகன், எம்.ஏ., எம்.ஃபில்.,
இளநிலைத் தமிழ்த்துறைத் தலைவர்
அய்ய நாடார் ஜானகி அம்மாள்
கல்லூரி (தன்னாட்சி),
சிவகாசி - 626 124.
காமராசர் மாவட்டம்,
தமிழ்நாடு.




## பாராட்டுரை

கெழுதகை நண்பர் டாக்டர். ஐ. இராமராசா, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்கள் சிவகாசி, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரியில் முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர். அன்னாரின் அரிய உழைப்பில் உருவான இந்நூல், பல்லாற்றானும் சிறந்து விளங்குகின்றது.

அகச்சமயங்கள் சைவமும் வைணவமும்; புறச் சமயங்கள் சமணமும் பௌத்தமும்; வெளிச்சமயங்கள் கிறித்துவமும், இசுலாமும். இந்து மதத்தின் இருகண்களுள் ஒன்றாகத் திகழும் வைணவ சமயத்தை வளர்த்த ஆண்டாள் அவதரித்த திருவில்லிபுத்தூரில் நடைபெறும் திருவிழாக்கள் பற்றிய செய்திகள் அனைத்தையும் தொகுத்தும், வகுத்தும், விரித்தும் கூறியுள்ளமை பாராட்டத்தக்கது. 1980-ஆடிப்பூரப் பெருந்திருவிழாவில் தொடங்கி, 1981 ஆனிப் பெரியாழ்வார் பெருந்திருவிழாவோடு முடிவடைவதாகிய ஓராண்டுக்காலத் திருவிழாச் செய்திகளும் சிறப்புகளும் இந்நூலின்கண் இடம்பெற்றுள்ளமை ஒரு முழுமையை அளிக்கிறது.

உலகைப் படைத்த இறைவனுக்கு மனிதன் படைத்த இடம் கோயில். அன்றுதொட்டு இன்றுவரை சமூகம், கலாச்சாரம், கல்வி ஆகியவற்றிற்குக் கோயில்கள் மையக் களங்களாகத் திகழ்கின்றமையை இந்நூலில் ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார்.

"பொதுமக்களுக்கொரு பல்கலைக் கழகமாக, அறநெறிக் கூடமாக, அன்பு எனும் நற்பண்பின் ஊற்றிடமாக, பொருளாதாரச் சுழற்சி மையமாக, துன்பம் நீக்கி இன்பம் நல்கும் நம்பிக்கைப் பிறப்பிடமாக, ஒற்றுமையுணர்த்தும் ஒளிவிளக்காக, வழிபாட்டு நிலையமாக, தமிழ் வளர்ச்சிக் கூடமாக, சமயநெறிச் சாலையாக, திக்கற்ற ஏழையரின் புகலிடமாக" (இந்நூல், ப. 132)அருள்மிகு ஆண்டாள் திருக்கோயில் அமைந்திருப்பதை ஆசிரியர் தெளிவாகக் காட்டியுள்ளார்.

திருவிழாக்கள் சமூக அடிப்படையில் ஆன்மீகத்தைப் பிணைக்கின்றன. பண்பாட்டின் நாற்றங்கால் திருவிழாக்கள் என்பர். 'கோதை பிறந்த ஊர், கோவிந்தன் வாழும் ஊரா'கிய திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்கள் பற்றிச் சுவைபட விளக்கமாக ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ளார்.

"பிறந்தநாள், மணந்தநாள், மறைந்த நாள் மூன்றுமே மன்பதையில் சிறப்பிடம் பெறுகின்றன. இக்கோயிலிலோ பிறப்பு இறப்பு அற்றவராகிய கடவுளர்க்கும் பெயர் இராசிக்கேற்பப் பிறந்த நாள் நட்சத்திரம் வகுத்துத் திருவிழா எடுக்கின்றனர்; மணநாள் குறித்து மணவிழாக் காண்கின்றனர்; வசந்தகாலம் கண்டு தேனிலவிற்கும் ஏற்பாடு செய்கின்றனர்; பகவத் குணங்களில் ஆழ்ந்துபட்ட ஆழ்வார்கட்கும், அவர்வழி நின்ற ஆசாரியர்கட்கும் இக்கோயிலில் பிறந்த நாள் விழாக்கள் அமைத்துள்ளனர்; நம்மாழ்வாருக்கு மட்டும் பிறந்த நாள் விழாவோடு மறைந்தநாள் நிகழ்ச்சியும் திருவிழாக்களாக்கப் பட்டுள்ளன" (இந்நூல் ப. 3) எனத் திருவிழாக்கள் ஏற்பாடு செய்யப் பெறுகின்ற சூழல், இவண் விளக்கப்பட்டுள்ளது. இது நூலாசிரியரின் அரிய முயற்சியைக் காட்டுவதுடன், அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்களின் சீர்மையையும், நூலாசிரியரின் சிந்தனைக் கூர்மையையும் புலப்படுத்துகின்றது.

மனிதனைப் பாதிக்கும் பொருளாதாரச் சிக்கல் திருவிழாக்களைப் பாதிக்கின்றது (இந்நூல், ப. 3) என்னும் ஆசிரியர் கூற்று, நம்மை ஆழமாகச் சிந்திக்க வைக்கின்றது.

வைணவ சம்பிரதாயத்தில் பயன்படுத்தப்படும் கலைச் சொற்களும் அவற்றிற்கான விளக்கங்களும் மிகவும் சிறப்பாகத் தொகுத்தளிக்கப் பட்டுள்ளமை பாராட்டத்தக்கது. இப்பகுதி, இந்நூலினைப் படிப்பவர்க்குப் பெரிதும் உதவக் கூடியது. ஆசிரியர் மேலும் பல நூல்கள் எழுதி, சமயத்தோடு தமிழையும், தமிழோடு சமயத்தையும் போற்றி வளர்த்திட எனது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்கள்.

சிவகாசி, அன்பன்,

12.10.94. சி. முருகன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்.

| | | |
|---|---|---|
| அ.சு. | – | அரையர் சுவாமி. |
| அ.ப. | – | அதே பக்கம். |
| அரு.சு. | – | அருச்சகர் சுவாமி. |
| ஆ.இ. | – | ஆண்டு இல்லை |
| இ.ப. | – | இரண்டாம் பதிப்பு. |
| உ.தே.ர.மா. | – | உபதேச ரத்தின மாலை |
| க.ஆ. | – | கள ஆய்வு. |
| க.க. | – | கலைக்களஞ்சியம். |
| கோ.நி. | – | கோயில் நிருவாகம். |
| சொ.பொ. | – | சொற்பொழிவு. |
| த.பா. | – | தனிப்பாடல். |
| த.வ.க. | – | தமிழ் வளர்ச்சிக் கழகம் |
| தி.தெ.சை.சி.நூ.ப.க. | – | திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| தி.ப.எ. | – | திருப்பள்ளியெழுச்சி. |
| தி.பி. | – | திவ்வியப் பிரபந்தம். |
| தி.மொ. | – | திருமொழி. |
| தி.வா.மொ. | – | திருவாய்மொழி. |
| தொ. | – | தொகுதி. |
| தொகு. | – | தொகுப்பு. |
| நாச்.தி.மொ. | – | நாச்சியார் திருமொழி. |
| நா.தி.பி. | – | நாலாயிர திவ்வியப் பிரபந்தம். |
| ப. | – | பக்கம். |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர். |
| பக். | – | பக்கங்கள். |
| பா. | – | பாடல். |
| பு.பொ.வெ.மா. | – | புறப்பொருள் வெண்பா மாலை. |
| பெ.தி.மொ. | – | பெரிய திருமொழி. |
| பெரி.தி.மொ. | – | பெரியாழ்வார் திருமொழி |
| பெரு.தி.மொ. | – | பெருமாள் திருமொழி. |
| ம.சு. | – | மணியம் சுவாமி. |
| மு.நூ. | | முன்னர் காட்டிய நூல் |
| வி.உ. | | விற்பனை உரிமை. |
| வே.பி.ப. | | வேதப்பிரான் பட்டர். |
| ஸ்ரீவில். | | ஸ்ரீவில்லிபுத்தூர் |
| (எண்) | | கள ஆய்வில் பேட்டி தந்தவரின் வயது |

# 1. முன்னுரை

## கோயிலும் தெய்வமும் :

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" [1] என்பது உலகநாதரது அருள்வாக்கு. நாம் இறைவனை வழிபட அமைந்த இடமே கோயில். எனவே, இறைவன் எழுந்தருளியிருக்கும் இடமே கோயிலென்றாகின்றது. "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" [2] என்பார் ஔவை. இயற்கையே கடவுள் என்று எண்ணி நம்முன்னோர் வழிபட்டனர். இவ்வகையில் நீர், நிலம், நெருப்பு, நிலவு, ஞாயிறு, வான், வளி, ஒளி என்ற இன்ன பலவற்றை இறையுருவாய்-இறைவனாய்-ஏற்றிப் போற்றித் தொழுதனர் தமிழர். இதற்குத் திங்களையும், ஞாயிற்றையும், மழையையும், மண்ணையும் போற்றியே தமது காப்பியத்தைத் தொடங்கிய இளங்கோ அடிகள் சான்றாவார்.

ஐந்திணை ஒழுகலாறு வகுத்த காலத்து, குறிஞ்சிக்குக் குமரனையும், முல்லைக்கு மாலையும், மருதத்திற்கு இந்திரனையும், நெய்தலுக்கு வருணனையும், பாலைக்குக் கொற்றவையையும் அவ்வந் நிலத் தெய்வங்களாய்க் கொண்ட தமிழர், காலப்போக்கில் மதக் கடவுளரை மதிக்கத் தலைப்பட்டனர். இவ்வகையில், சைவ சமயத்தினர் சிவனையும், வைணவ மதத்தினர் விட்ணுவையும் முழுமுதற் கடவுளராய்க் கண்டனர்.தொடக்க காலத்தில் ஆற்றங்கரைகளிலும் அணிமலர்ச் சோலைகளிலும், மரத்தடி நிழலிலும் தெய்வவுரு சமைத்து வழிபட்ட தமிழர், காலப்போக்கில், மலைக்குகைகளிலும் கட்டடங்களிலும் கடவுளரை எழுந்தருளச் செய்தனர். தற்போது, தமிழகத்தில் மட்டும் மொத்தம் 52,000 கோயில்கள் உள்ளன.[3] இடைக்காலத்தில்தான், மக்களின் உடலமைப்பைப் போல் சுற்றுமதில், பெருங்கோபுரம், வாயில், பலிபீடம், கொடிக்கம்பம், பிராகாரங்கள், மகாமண்டபம், அருத்த மண்டபம், கருவறை ஆகியவை ஆகம முறைப்படி அமைக்கப்பட்ட கோயில்கள் கட்டப்பட்டன. இவை உள்ளக்கோயில் அமைந்துள்ள முறையை உணர்த்துவதாக உள்ளன.[4] இம்முறையில், வைகானச ஆகமப்படி உருவாக்கப் பட்டதே திருவில்லிபுத்தூரில் அமைந்த அருள்மிகு நாச்சியார் (ஆண்டாள்) திருக்கோயில் என்றறிகிறோம்.

## திருவில்லிபுத்தூரும் திருக்கோயில்களும் :

மாலின் ஆணைப்படி, 'வில்லி' என்ற வேடனால் புதுப்பிக்கப்பட்டதெனப் புராணங்கள் புகலும் திருவில்லி புத்தூர், மதுரை- தென்காசிப் பேருந்து நெடுஞ்சாலையில், விருதுநகர்-செங்கோட்டைப் புகைவண்டிப்பாதையில் அமைந்த நகரமாகும். இந்நகராட்சியின் பரப்பு: 5.718 ச.கி.மீ. இதன் மக்கள்தொகை 62,615. இம்மக்களுள் பெரும்பாலோர் நெசவினையே தலைமைத் தொழிலாகக் கொண்டு, வாழ்கின்றனர். வைணவத் திருத்தலங்கள் நூற்றெட்டனுள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள் பதினெட்டாகும். அவற்றுள் இரட்டை யாழ்வார்களாம் பெரியாழ்வாரும் கோதைநாச்சியாரும் அவதரித்த புண்ணிய தலமாகவும், அவ்விரு ஆழ்வார்களின் பாடல்கள் பெற்ற திவ்விய தேசமாகவும் இத்திருவில்லிபுத்தூர் அமைந்துள்ளது.'திரு' என்ற அடைமொழியால் பெருமைப் படுத்தப்படும் இவ்வில்லிபுத்தூருக்கு விரிவான வரலாற்றுப் பின்புலம் ஒன்றுண்டு.

இந்நகரில், இறைவனைப் பாடிக்களித்த பாமாலையோடு, தான் சூடிக்களைந்த பூமாலைகளையும் அரங்கற்குச் சூட்டிய பெருமைக்குரிய 'ஆண்டாள்' எனப்படும் 'கோதை' நாச்சியாருக்குத் திருக்கோயிலொன்றுள்ளது. குழந்தை ஆண்டாளை எடுத்து வளர்க்கும் பேறுபெற்ற பெரியாழ்வார் திருமாளிகையே அக்கோயிலாயிற்று.[5]

இக்கோயிலை ஒட்டினாற்போல் வடகிழக்கே பழம் பெருங்கோயிலாம் வடபத்ரசயனர்- பெரிய பெருமாள் ஆலயம் எனப்படும் 'கீழக்கோயில்' உள்ளது. இங்கிருந்து அரைக்கல் தூரம் தள்ளி, புகைவண்டி நிலையம் செல்லும் பாதையில் கிருட்டிணன் கோயிலுள்ளது; சுமார் மூன்றுகல்தொலைவில், ஆதிசேசனே ஒரு மலை வடிவமாய்த் தோற்றமளிக்க, திருவேங்கடமுடையான் நின்று காட்சி கொடுக்கும் தென்திருப்பதி எனப்படும் திருமலை - திருவண்ணாமலை - கோயிலுள்ளது; சுமார் ஒன்பது கல் தூரத்தில், கள்ளழகரே காட்டழகராக உபயநாச்சியாரோடு காட்சிதரும் காட்டழகர் கோயிலுள்ளது. இவை, ஆண்டாள் கோயிலின் நிருவாகத்திற்குட்பட்டனவாம்.

## கோயில் திருவிழாக்கள் :

ஆதிமக்கள் ஒன்றுசேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்கிலிருந்துதான், 'விழாக்கள்' தோன்றின. சமயச் சார்புடன் புராண இதிகாசங்களை அடிநிலையாக உடைய விழாக்கள் கோயில்திருவிழாக்களாகக் கொண்டாடப்பட்டன.

> *ஆலயங்களிலுள்ள மூலமூர்த்திகளுக்குப் பத்துப்பன்னிரண்டு நாட்கள் மிகச் சிறப்பாகப் பூசைகள் நடத்தி. அங்குள்ள உற்சவ மூர்த்திகளைப் பலவித வாகனங்களில் அலங்கரித்து எழுந்தருளச் செய்து. கோயிற் பிராகாரங்களிலும். வீதிகளிலும். மண்டபங்களிலும் நடத்தும் விழாக்களையே திருவிழாக்கள் என்பர்.*[6]

இவ்வண்ணமே நடைபெறும் ஆண்டாள் கோயில் திருவிழாக்களின் ஒரு பகுதியாக, இத்தலமேன்மை, கோயிற் சிறப்பு, ஆண்டவர் அடியவர் வரலாறு ஆகியவற்றைப் புராணமாகப் படிக்கின்றனர்.

பிறந்தநாள், மணந்தநாள், மறைந்த நாள், மூன்றுமே மன்பதையில் சிறப்பிடம் பெறுகின்றன. இக்கோயிலிலோ பிறப்பு இறப்பற்றவராகிய கடவுளர்க்கும் பெயர் இராசிக்கேற்பப் பிறந்தநாள் நட்சத்திரம் வகுத்துத் திருவிழா எடுக்கின்றனர்; மணநாள் குறித்து மணவிழாக் காண்கின்றனர்; வசந்தகாலங்கண்டு தேனிலவிற்கு ஏற்பாடு செய்கின்றனர். பகவத் குணங்களில் ஆழ்ந்துபட்ட ஆழ்வார்கட்கும், அவர்களின் வழிநின்ற ஆசாரியர்கட்கும் இக்கோயிலில் பிறந்த நாள் விழாக்கள் அமைத்துள்ளனர். நம்மாழ்வாருக்கு மட்டும் பிறந்தநாள் விழாவோடு மறைந்தநாள் நிகழ்ச்சியும், மறுபடி அவதரித்த நிகழ்ச்சியும் திருவிழாவாக்கப்பட்டுள்ளன.

ஏனைய கோயில்களைப் போன்றே இக்கோயிலிலும் கோள்களின் சுழற்சியால் ஏற்படும் பருவகால மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டு, திருவிழாக்கள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. இக்கோயில் திருவிழாக்களின் பொலிவும் நலிவும் இப்பகுதி மக்களின் பொருளாதார ஏற்ற இறக்கத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. கோயில் நிலக் குத்தகைத் தொகையும், கோயிற்கடைகளின் வாடகைப்பணமும், உண்டியலில் விழும் காணிக்கைப் பணமும், நன்கொடையாளர்களின் மனவளமும் மிகுங்கால், இக்கோயில் திருவிழாக்கள் பொலிவுறும். பருவமழை பொய்த்து

மக்களிடையே பொருளாதாரச்சீர்குலைவு ஏற்பட்டால், கோயிலுக்கும், கோயில் திருவிழாக்களுக்கும் வருகைதரும் மக்களின் எண்ணிக்கை குறையும்; கோயில் நிலக் குத்தகைத் தொகையும், கோயிற்கடைகளிலிருந்து கிடைக்கும் குத்தகைப் பணமும், வாடகைப் பணமும் ஒழுங்காக வசூலாகா; காணிக்கைப் பணமோ கைநிறைய விழாது; நன்கொடையாளரின் கொடைவளம் குறையும்; அமுதுபடி, அன்னதானம், திருத்துழாய் - மலர் போன்றவைகளின் கட்டளைதாரர்களின் சேவை குறைவுறும். இந்நிலையில், சிறப்பாக எடுக்கப்படவேண்டிய திருவிழாக்களில் சில, இக்கோயிலில் எளிமையாக நடத்தப்பெறும்; சில நிறுத்தப் பெறும். எனவே, மக்களிடையே காணப்படும் பொருளாதாரப் பாதிப்பு, அருட்கூடங்களாம் இக்கோயில்போன்ற பல ஆலயங்களின் அன்றாடப் பூசனையைக்கூடப் பாதிக்கும் வல்லமை உடையதறிகின்றோம்.

## ஆய்வின் அடிப்படைঃ

திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்களை முடிந்த அளவு நேரில் கண்டறிந்தும், கோயில் பணிபுரிவோர், பொதுமக்கள் ஆகியோரில் சிலரிடம் கேட்டறிந்தும் கிடைத்த தகவல்களைத் தொகுத்தும் முறைப்படுத்திப் பகுத்தும் பலருமறியக்கொடுப்பதே இவ்வாய்வுக்கட்டுரையின் அடிப்படையாம். திருவில்லி புத்தூரின் வரலாற்றுப் பின்புலத்தை அறிவிப்பதும், ஆண்டாளை யாரென்று அறிமுகப்படுத்துவதும், இவ்வாலய அமைப்பு, திருவிழாக்கள் எடுக்க எவ்வாறு வாய்ப்பாக அமைந்துள்ளது என்பதை விளக்குவதும் இத்தலைப்பின் கீழ், தேவையாதல் காண்கிறோம். எனவே, இங்கு ஆண்டாள் பற்றிய அறிமுகம் எழுத்து மூலச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்ட 'இருக்கை' ஆய்வாகவும், எஞ்சியவை 'கள' ஆய்வாகவும் அமைகின்றன.

## ஆய்வின் தன்மைঃ

தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு கோயிலையே மையமாகக் கொண்டு சுழல்வதால், இவ்வாய்வு நிகழாய்வின் பாற்பட்டதறியலாம்.'தலவரலாறு' என்னும் கோயில் வெளியீட்டு நூல், கோயிலமைப்பினையும் சிறப்பினையும் விவரிக்கின்றது; திருவிழாக்களைச் சுருக்கியே சொல்லுகின்றது. எனவே, இக்கோயில் திருவிழாக்களைப்பற்றிய விரிவான-விளக்கமான-முழுமையான செய்திகள் எழுத்து வடிவமாக்கப்படுதல் இன்றியமையாததாகின்றது.

*ஒருசில நம்பிக்கைகளை ஆய்விற்கு அப்பாற்பட்டதாக வைத்து, அதற்குமேல் ஆய்வு செய்வதுதான், சமயத்துறையில் இயன்ற ஒன்று.*[7]

வைணவ சமயத்தைச் சார்ந்த ஆண்டாள் கோயில் திருவிழாக்களைப் பற்றியதே இவ்வாய்வாதலால் இந்நெறிமுறை இங்கே பேணப்படுகின்றது.

இங்கு, இக்கோயிற் பணிபுரிவோர்,பொதுமக்கள் ஆகியோரில் சிலரையும், கோயில் நிருவாகிகளையும் பேட்டி காண்பதும், கிடைத்த தகவல்கள் உண்மையானவைகளா என்றறிய, இக்கோயில் திருவிழாக்கள் பலவற்றை நேரில் கண்டு உற்றுநோக்குவதும் ஆய்வு உத்திகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

## ஆய்வின் நோக்கம்:

அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்கள், எவ்வெப் பின்னணியில் உருவாக்கப்பட்டன? எவ்வெவ்வாறு கொண்டாடப்படுகின்றன? என்பனவற்றை விளக்குவதும், இத்திருவிழாக்களோடு மக்கள் கொண்டுள்ள தொடர்பினைக் கண்டறிந்து கூறுவதும் இவ்வாய்வின் தலையாய நோக்கங்களெனலாம். பொதுமக்களில் பலர், காரியமான திருவிழாக்கள் பற்றிய காரணங்களையும் சிறப்புக்களையும் அறியாது, இயந்திரம்போல் சென்று, திருவிழாக்களைக் கண்டு திரும்புகின்றனர். கடவுள் தொடர்பான சமயச் சடங்குகளோடு கூடிய திருவிழாக்கள், மக்களின் வாழ்வியலோடு மிகுந்த தொடர்புடையன என்பதைக் கண்டறிவதும் இவ்வாய்வின் நோக்கமாதல் காணலாம்.

## ஆய்வின் எல்லை:

நில எல்லையைப் பொருத்தவரை, தமிழ்நாடு-காமராசர் மாவட்டத்திலுள்ள- பாண்டிய நாட்டுத் திவ்விய தேசங்களுள் ஒன்றான திருவில்லிபுத்தூர் அருள்மிகு நாச்சியார் (ஆண்டாள்) கோயில் திருவிழாக்களைப்பற்றியதே இவ்வாய்வு எனலாம்.இக்கோயிலோடும் இக்கோயில் நிருவாகத்தோடும் நெருங்கிய தொடர்புடைய காரணத்தால் வடபத்ர சயனர் கோயில், கிருட்டிணன் கோயில், காட்டழகர் கோயில் திருவண்ணாமலைக் கோயில் ஆகிய கோயிற்றிருவிழாக்களும் இங்கு விவரிக்கப்பெறுகின்றன. பக்கத்து ஊரான திருத்தங்கல்- அப்பனைப் பொருத்தவரை, ஆடிப்பூரத் திருவிழா ஐந்தாம்

திருநாளன்று பெரியாழ்வாருக்கு மங்களா சாசனம் செய்வ தற்கும், ஏனைய நான்கு பெருமாள்களோடு சேர்ந்து பஞ்ச கருட சேவை சாதிப்பதற்கும் நாச்சியார் கோயிலுக்கு அவர் வந்து திரும்பும் நிகழ்ச்சிகள் இக்கட்டுரையில் இடம் பெறுகின்றன. இத்தோடு, மதுரை – அழகருக்கும், திருப்பதி வெங்கடேசுவரருக்கும் ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலைகளைக் கொண்டு சென்று சூட்டுகின்ற நிகழ்ச்சிகளும் அவர்களின் மாலை, பரிவட்டங்களை இங்குக் கொணர்ந்து ஆண்டாளுக்குச் சாற்றுகின்ற நிகழ்ச்சியும் இவ்வாய்வில் சுட்டிக் காட்டப் படுகின்றன. கோயிலில் குடிகொண்டிருக்கும் ஆண்டாளைப் பற்றிய ஓர் அறிமுகமும், திருவில்லிபுத்தூரின் வரலாற்றுப் பின்புலத்தோடுகூடிய கோயிலமைப்பும் இங்கு இடம் பெறுகின்றன.

கால எல்லையைப் பொருத்தவரை, 1980– ஆடிப்பூரப் பெருந்திருவிழாவில் தொடங்கி, 1981 –ஆனிப் பெரியாழ்வார் பெருந்திருவிழாவோடு முடிவடைவதாகிய ஓராண்டுக் காலத் திருவிழாக்களின் தொகுப்பாக இஃதமைகின்றது. ஆண்டாண்டுதோறும் நடைபெறும் திருவிழாக் கைங்கர்யங்களுக்கு நன்கொடை வழங்குவோரின் பட்டியலிலிருந்து பழையவர் சிலர்விடுபட்டுப் புதியவர்கள் சிலர் சேர்க்கப்படலாம் மண்டபதாரர்களில் சிலர் மாறுபடலாம்; வறட்சிக் காலத்தில் – குளம் வற்றிக் கிடக்கும் சூழலில் தெப்பத் திருவிழா போன்ற திருவிழாக்கள் சில விடுபடலாம். எனவே, மேற்கூறிய கால எல்லைக்குள் என்னென்ன திருவிழாக்கள் யார்யாரின் உபயத்துடன் நடைபெற்றன? என்பதை விளக்கக் கால எல்லை கணிக்கப்பட வேண்டியதொன்றாய் உள்ளது.

ஆய்வுப் பரப்பினைப் பொருத்தவரை, திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்களின் நடைமுறைகளையும், அவ்விழாக்களில் அடங்கியிருக்கும் தத்துவங்களையும், அவை மக்களுக்கு அளிக்கும் பயன்பாடுகளையும் விளக்கிடும் விளக்க ஆய்வாகவே இவ்வாய்வு விரிகின்றதெனலாம்.

## ஆய்வுப் பகுப்பு:

இவ் ஆய்வு, ஏழு பெரும் பகுதிகளாய்ப் பகுக்கப்பட்டுள்ளது. முதற் பகுதியான 'முன்னுரை', தலைப்பு விளக்கமாய்த் தொடங்கி, ஆய்வுநெறித் திட்டமான ஆய்வின் அடிப்படை, தன்மை, நோக்கம், எல்லை, பரப்பு, பகுப்பு ஆகியவற்றை விவரிப்பதாய் முடிகின்றது.

இரண்டாம் பகுதியான 'ஆண்டாள் ஓர் அறிமுகம்',திருவில்லிபுத்தூர் இரட்டையாழ்வாருள் மிகுதியான ஏற்றம் பெற்ற ஆண்டாளைப் பற்றிய பலரின் அறிமுகமாய் அமைகின்றது.

'கோயிலமைப்பில் கோதை கோயில்' என்ற மூன்றும் பகுதி, 'இரட்டைக் கோயில்களாம்' ஆண்டாள்–சயனர் சந்நிதிகள், திருவிழாக்கள் சிலவற்றைக் கோயில்களினுள்ளேயே நடத்துவதற்கேற்ற வண்ணம் அமைந்த பான்மையைத் தெரிவிக்கின்றது.

'பிறந்த நாள் திருவிழாக்கள்' என அமையும் நான்காம் பகுதியின் முதற்பிரிவு கடவுளர்களாம் பெரியபெருமாள், ரெங்கமன்னார், வெங்கடாசலபதி, (உற்சவமூர்த்தி–ஸ்ரீனிவாசன்) கிருட்டிணன், காட்டழகர் (உற்சவமூர்த்தி–சுந்தரராசன்) ஆகியோரின் பிறந்தநாள் திருவிழாக்களை வரிசையாக முற்பகுதியில் மொழிந்து, ஆழ்வார்கள் பன்னிருவரோடு கருடாழ்வாரின் பிறந்த நாள் திருவிழாக்களை நடுப்பகுதியில் நவின்று, ஆசாரியர்கள் மூவரின் பிறந்த நாள் விழாக்களைப் பிற்பகுதியில் சொல்கின்றது. இடைப்பகுதியில், கோயிலுக்குரிய ஆண்டாளுக்கு முதலாவதாகவும், தலத்திற்குரிய பெரியாழ்வாருக்கு இரண்டாவதாகவும், அவயவங்களாம் ஏனைய ஆழ்வார்கட்கெல்லாம் அவயவியாய் இலங்கி, நான்காவதாயிரமான 1,102 திருவாய் மொழிப்பாசுரங்கள் பாடிய நம்மாழ்வாருக்கு மூன்றுவதாகவும், பெரிய திருமொழி,திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என இரண்டாவதாயிரத்தில் 1,134 பாசுரங்களைப் பாடி, மிகுதியான எண்ணிக்கையில் பாசுரசேவை சாதித்த திருமங்கை ஆழ்வாருக்கு நான்காவதாகவும், இறைவனைத் துயிலெழுப்பும் பேறுபெற்ற 'திருப்பள்ளியெழுச்சிப்' பாசுரங்களைப் பாடிய சிறப்பினால் தொண்டரடிப்பொடியாழ்வாருக்கு ஐந்தாவ தாகவும், ஏனையோருக்கு அவரவர் அவதரித்த கால வரிசைப்படியும் பிறந்தநாள் திருவிழாக்கள் வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. இறுதியில் கருடாழ்வாரின் பிறந்தநாள் திருவிழா தனித்திருவிழாவாக விவரிக்கப் பட்டுள்ளது. ஆசாரியர்களைப் பொருத்தவரை, இக்கோயில் நிருவாகத்தினரால் நிகழ்த்தப்பெறும் இராமாநுசர் பிறந்தநாள் விழா முதலிலும், வேதாந்த தேசிகர் சபையினரால் எடுக்கப்படும் வேதாந்த தேசிகர் பிறந்தநாள் விழா இடையிலும், பக்தசன சபையினரால் கொண்டாடப் பெறும் மணவாள மாமுனிகளின் பிறந்தநாள் விழா முடிவிலும் இடம் பெற்றுள்ளன.

நான்காம் பகுதியின் இரண்டாம் பிரிவில் இடம் பெறும், 'ஏனைய திருவிழாக்களில்' 'வசந்த (கால)த் திருவிழாக்கள்' தொடங்கித் 'திருக்கலியாணத் திருவிழா' முடியவுள்ள திருவிழாக்கள் அனைத்தும் 'சித்திரை -பங்குனி' மாதங்களின் வரிசை முறையை அடியொற்றியே வருணிக்கப்பட்டுள்ளன.

'பெருவிழாக்களின் பொதுநிகழ்ச்சிகளை'ப் புகலும் ஐந்தாம் பகுதியில் அன்றுடப் பூசனையும், பலிசாதித்தலும், பெருவிழாவின் தொடக்க நிகழ்ச்சிகளும் முதலில் இடம்பெற, அடுத்து வருகின்ற 'கருடசேவை' முதல் 'உற்சவ சாந்தி' வரையுள்ள நிகழ்ச்சிகளனைத்துமே பெருந்திருவிழாக்களின் ஐந்தாம் நாளில் தொடங்கிப் பதின்மூன்றும் நாளோடு முடிவுறும் 'நாள் நிகழ்ச்சி' வரிசை முறைப்படி அமைந்ததாகின்றன.

'திருவிழாத் தொடர்புடையோர்' என்ற ஆறும் பகுதி, திருவிழாக்காலக் கொடைஞர், கோயிற் சொத்தின் குத்தகைதாரர், கோயில் திருப்பணி புரிவோர், பக்தர்கள், பொதுமக்கள் ஆகியோர் திருவிழாக்காலங்களில் ஆற்றும் செயல்கள் பற்றி அறிவிப்பனவாம்.

'முடிவுரை'யாம் ஏழாம் பகுதி, முற்கூறிய பகுதிகளின் முடிவான கருத்துக்களின் தொகுப்புரையாய்த் துலங்குகின்றது.

கள ஆய்வு பற்றிய அடிக்குறிப்பில் பேட்டி தந்தவரின் பெயர், வயது, தொழில், ஊர், பேட்டிநாள் ஆகியவை வரிசையாய் இடம் பெறுகின்றன.

இறுதியில் பின்னிணைப்புக்களும், பயன்பட்ட நூற்பட்டியலும், கலைச்சொல் விளக்க அகர வரிசையும் அமைந்துள்ளன.

அடிக்குறிப்புக்கள்:

1. உலகநாதர், உலகநீதி, 24.
2. ஔவை , கொன்றைவேந்தன், 2.
3. லேனா தமிழ்வாணன், கல்கண்டு (25.6.81), ப.5.
4. சுவாமி சித்பவானந்தர், 'கோயில்'; க.க.தொ. 4. ப.304.

5. கோ. விஷ்ணுசித்தன் (33) வங்கி அலுவலர் ஸ்ரீவில்.; க.ஆ. (24.10.80).

6. கே. ஆறுமுக நாவலர், இந்துமத இணைப்பு விளக்கம், பக். 143-144.

7. வா. செ. குழந்தைசாமி , 'பொதுஆராய்ச்சி நெறி முறைகள்'; ஆராய்ச்சி நெறிமுறைகள், பக். 1-2.

# 2. ஆண்டாள் - ஓர் அறிமுகம்

## சமயம்/மதம் - விளக்கம் :

மனித வாழ்விற்கு வழிகாட்டுவதே சமயம் எனலாம். மனித இனம், அறிவுத்திறன் பெறத் தொடங்கிய காலத்திலிருந்தே சமயமும் உடன்வளர்ந்து வந்ததாகத் தெரிகிறது.

> பேரின்பத்தை மக்கள் அனுபவிக்கப் பெரியோர்கள்
> இறைவன் அருளோடு வகுத்த வழியே மதமாகும்.
> உடம்பை வளர்ப்பதற்கு உணவுப் பொருளைச்
> சமைப்பதுபோல். இறைவனை அடைவதற்குரிய
> சாதனங்களைச் சமைப்பது அல்லது
> பரிபக்குவப்படுத்துவதுதான் சமயம்[1].

என்று ஆறுமுக நாவலர் விளக்குகிறார்.

தலைசிறந்த நூற்பெயரால் 'வேதாந்தம்' 'ஸ்மார்த்தம்' என்ற மதங்கள் பெயர்பெற, நிறுவியவர்களின் பெயரால் 'பௌத்தம் 'ஜைனம்' என்ற மதங்கள் பெயரேற்க, கடவுளரின் பெயர்களால் 'சைவ' மதமும் 'வைணவ' மதமும் பெயர் கொண்டன.

## இந்து சமயம்-இருபெருங் கிளைகள் :

'சிவம்' என்னும் செம்பொருளை விளக்குவது 'சைவம்' ஆகும். "எங்கும் நிறைந்தவர், இரட்சகர், யாவற்றையும் படைத்துக் காத்து வருபவர்" எனப்பொருள் கொண்ட 'விட்ணு'வைக் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் 'வைணவம்' எனப்படும்.

## திவ்வியப் பிரபந்தமும் ஆழ்வாராதிகளும் :

வைணவ மதம் 'வடகலை' 'தென்கலை'யென இரு வகைப்படும்: முக்தி நெறிக்கு வேதங்களை அடிப்படையாகக்

கொள்வது வடகலை; திவ்வியப்பிரபந்தங்களை அடிப்ப டையாகக் கொள்வது தென்கலை;. ஆழ்வாராதிகளின் வாக்குகளெல்லாம் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்கள்[2] எனப் பேசப்படும்.

> *திருமாலின் உயர்நலங்களில் ஆழ்ந்துள்ளோரால்*
> *திருவருட்பாக்களாகப் பாடப்பட்டமையாலும்*
> *தெய்வத்தொடர்புடைமையாலும் 'திவ்வியப்*
> *பிரபந்தம்' என்று சொல்லப்படுகின்றது.*
> *இப்பாக்களின் தொகை 3,776. இராமாநுச*
> *நூற்றந்தாதி 108 பாசுரங்களையும் சேர்த்து*
> *ஏறக்குறைய 4,000 பாக்கள் இருக்கும்*
> *நிலைமை பற்றி இப்பெயர் பெற்றது.*[3]

சிவனடியார்கள் 'நாயன்மார்கள்' என வழங்கப்பெற, நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களைப் பாடிய பெருமைக்கு உரியவர்கள் – இறைவனுடைய பகவத் குணங்களிலும் வடிவழகிலும் ஆழ்ந்து ஈடுபட்டோர்கள் பன்னிரு 'ஆழ்வார்கள்' எனப்பட்டனர். அவர்களின் பெயர்களைக் கால முறைமையின்படிக் கொண்டுள்ள,

> *பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை*
> *அய்யன் அருண்மாறன் சேரலர்கோன்-துய்யபட்ட*
> *நாதனன்பர் தாட்டூளி நற்பாண நற்கலியன்*
> *ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.*[4]

என்ற இவ்வெண்பா பதின்மராகத் தொகுத்துரைக்கும். இதனை அடியொற்றியே,

> *ஏழ்பாரு முய்த்திடவே இன்னருளால் இங்குதித்த*
> *ஆழ்வார் பதின்மரும் ......*[5]

என்று அண்ணங்கராசாரியாரும் அருளியுள்ளார். இப்பாடல்களில் மதுரகவியாழ்வாரும் ஆண்டாள் நாச்சியாரும் குறிப்பிடப்பட்டிலர்.

## இரட்டையாழ்வார்கள் :

மேற்குறித்த உபதேச ரத்தின மாலை வெண்பாவிலுள்ள 'மாறன்' என்ற நம்மாழ்வாரோடு, அவ்வாழ்வாரையே பாடி, இறைத்தொண்டர்க்கடியாராய் இலங்கிய 'மதுரகவியாழ்வார்' மறைமுகமாகச் சொல்லப்பட்டிருக்கிறார் எனக் கருதுவர். அதுபோலவே, அருள்மிகு பூதேவியின் அவதாரமென வைணவ அடியார்களால் எண்ணப்படும் 'ஆண்டாள் நாச்சியார்' 'பட்டநாத'னொடு கூறப்பட்டுள்ளதாய்க்

கொள்வர். எனவே, பெயரிணைப்போடு வாழ்வுப் பணிகளும் இறைப்பணிகளும் இணைந்தோராயுள்ள இவர்கள், ‘இரட்டையாழ்வார்கள்’ என இயம்பப்படுவது இயல்பானதே.

## ஆண்டாள் நாச்சியாரும் பெரியாழ்வாரும் :

பாண்டிய நாட்டுத் திருவில்லிபுத்தூர் நந்தவனத்தில், துளசி வனத்திடைப் பெரியாழ்வாரால் கண்டெடுக்கப்பட்டு, ‘கோதை’ யென்று பெயரிட்டு, வளர்க்கப்பட்ட பெண்மணியே ஆண்டாளாவாள், ‘விட்ணுசித்தர்’ என்ற இயற்பெயருடைய பெரியாழ்வார்.

*திருவில்லிபுத்தூரில் அந்தணர் வருணத்தில், வேயர் குடியில், ஆனி மாதத்தில், சோதி (சுவாதி) நட்சத்திரத்தில் அவதரித்தவர்[6].*

## கோதை - பெயர் விளக்கம் :

*கோதா என்பது வாக்கை உதவுபவள் என்னும் பொருள் படுவதாம். தம்குழந்தை எம்பெருமான் விசயத்தில் வாக்கைச் செலவிடப்போகிறாள் என்று நினைத்தே, அதற்கிசைந்த ‘கோதை’ என்ற பெயரிட்டார் பெரியாழ்வார் எனத் திவ்ய சூரி சரிதம் கூறும்.[7]*

வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்தும் பூமாலைகளுக்கு உரிய மலர்களை அளிக்கும் நந்தவனத்தில் அவதரித்த காரணத்தினாலோ, தமிழணங்கின் குழலில் சூடுவதற்குரிய பாமாலையாலாகிய கோதைகளை இனிப்பாடித் தருவாள் என்பதை முன்னாக அறிந்ததாலோ என்னவோ அப்பொற்பாவைக்குக் ‘கோதை’ என்று திருப்பெயரிட்டுள்ளனர் என்பர்.

## கோதையின் வேறு பெயர்கள்

*பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்டதால், ஆழ்வார் திருமகளார் என்றும், தாம் சூடிக்களைந்த மாலையினை இறைவனுக்கு அணிவித்து வந்ததால், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் என்றும். பிரபந்தங்கள் மூலமாக உலக மக்களை உய்வித்து அடிமைகொண்டவராகக் கருதப்படுவதால், ஆண்டாள் என்றும் அழைக்கப்பட்டார்.[8]*

*கோதை ஆண்டாள், தமிழை ஆண்டாள்[9]*

என்கிறார் கண்ணதாசன்.

இளம் பருவத்தே இறைவன்பால் காதல் மிகக் கொண்டு கனிந்துருகிப் பாமாலை பாடியதால்'பிஞ்சாய்ப் பழுத்தவள்' என்பர். 'பிஞ்சாய்ப் பழுத்த வண்ணமுத நற்கனியினை' என்பார் ஆண்டாள் பிள்ளைத் தமிழாசிரியர். பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்டவராயினும் ஆண்டாளை ஆழ்வார்கள் எல்லோருடைய திருமகளாராகக் கருதுதல் முன்னையோர் மரபு. இதனை 'அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்' என்ற உபதேச ரத்தினமாலைச் செய்யுளால் அறியலாம். இவ்வாண்டாளை 'மாறன் (நம்மாழ்வார்) திருமகளார்' என்று ஆண்டாள் பிள்ளைத் தமிழ் ஆசிரியர் பலவிடங்களில் கூறுகின்றார்.[10]

## ஆண்டாள் - பெயர்க் காரணம் :

கோதைக்குக் 'குருபரம்பரைக் கதையில்' கூறப்பெறும் 'சூடிக்கொடுத்தாள்' ,'ஆழ்வார்கள் வரலாறு' என்ற புத்தகத்தில் குறிப்பிடப்படும் 'ஆழ்வார் திருமகளார்', 'ஆண்டாள்'; 'ஆண்டாள் பிள்ளைத் தமிழில் வழங்கப்பெறும் 'பிஞ்சாய்ப் பழுத்தாள்' 'மாறன் மகளார்' என்ற பெயர்களில் ஒன்றுகூட வாழ்வியல் தொடர்புடைய திருவில்லிபுத்தூர் இரட்டையாழ்வார்களாம் பெரியாழ்வார்- ஆண்டாளின் படைப்புகளில் எந்தவோர் இடத்திலும் காணப்பெறவில்லை. 'விட்டுசித்தன் கோதை', 'பட்டர்பிரான் கோதை , 'குழற்கோதை' என்றுதாம் தன்னை அவருடைய பாடல்களில் குறித்துள்ளார். அவர்களின் வாழ்வியல் தொடர்புடைய நிகழ்ச்சியான 'சூடிக்கொடுத்த' செயல்கூட அவர்களின் பாடல்களிலில்லை; திருப்பாவை - தனியன்களில் மட்டுமே "பூமாலை சூடிக் கொடுத்தாள்" என்றும், 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி" என்றும் இடம் பெற்றுள்ளன. இக்காரணங்களால்,பெரியாழ்வாரின் கற்பனைப் பெண்ணே ஆண்டாள்,எனடி.கே.சி.,இராசாசி ஆகியோர் கருதுகிறார்கள்.[11]

## ஆட்கொண்ட ஆண்டாள்:

கோதை பற்றிய குருப்ரம்பரைக் கதை, திவ்வியசூரி சரிதம் முதலியவற்றை நன்கறிந்த பிற்காலத்தவரே அவருக்கு மேற்குறித்த சிறப்புப் பெயர்களைச் சூட்டியிருக்கலாம். தமது பாக்களில் பெரியாழ்வார், 'பட்டர்பிரான்' என்றும் 'விட்டுசித்தன்' என்றுமே தம்மைக் குறித்துள்ளார்.

*பட்டர்பிரான் சொன்ன மாலை பத்து*[12]

புதுவைக்கோன் விட்டுசித்தன்[13] என்பவை அவரின் பாடலடிகளாம். அவர் பிற்காலத்தில்தான்','ஏனைய ஆழ்வாரின் பெரியவர்'[14] என்ற பொருளுடன், பெருமையாகப்

'பெரியாழ்வார்' எனச் சிறப்பித்தழைக்கப்பட்டார். அதுபோலவே, பிற்காலத்தில் கோதைநாச்சியார் மேற்குறித்த காரணப் பெயர்களால் சிறப்பிக்கப்பட்டார் எனக்கோடல் தவறாகாது. அப்பெயர்களில், 'உலகமக்களை உய்வித்து அடிமை கொண்டவள்' என்ற காரணமாயமைந்த "ஆண்டாள்" என்ற பெயரே பெருவழக்குப் பெறலாயிற்று எனக் கருத இடமுள்ளது.

> *ஆண்டாளின் அருள்நெறி, பக்தியில் பழுத்திருந்த பெரியாழ்வாரையும் ஒரு புதிய வழிகாட்டி ஆட்கொண்டது. அதனால்தான், என்னை ஆண்டாள் இவள் என்று தம்மகளை வாயார - நெஞ்சாரப் புகழ்ந்தார் பெரியாழ்வார்*[15]

என்பார் பி.ஸ்ரீ.

> *ஆண்டாள் சார்ங்கம் என்னும்வில்லாண்ட எம்பெருமானைத் தன் கல்யாண குணங்களாலும், பாமாலை பூமாலையாலும், சேதனர்களைத் தன் கருணையினாலும். மற்றைய நாச்சியார்களைத் தன் பக்தியாலும் ஆண்டு, அதனால் ஸ்ரீஆண்டாள் என்று பெயர் பெற்றாள்*[16]

என்று கோயில் நிருவாக அதிகாரி, விழா அழைப்பிதழில் விவரித்துள்ளார்.

## ஆண்டான் - ஆண்டாள்:

கதை நிகழ்ச்சிகளைக் கருத்தில் கொண்டால், 'மன்னன் மாளிகை' என்ற பொருளும் கொண்ட'கோயிலில்' குடிகொண்டிருக்கும் ரங்கமன்னார் - திருவரங்க மன்னர் - (திருவரங்க) 'ஆண்டவன்'[17] "ஆண்டான்"[18] எனக் கொள்ள வாய்ப்புண்டு. அவ்ஆண்டானைக் காதலித்து, அவனுக்கே மனையாளாகத் துடித்து, அவனோடு ஐக்கியமானவளாகக் கோதையை எண்ணும் வைணவ பக்தர்கள் 'ஆண்டான் மனைவி ஆண்டாள்' என்ற அரும்பொருளில் கோதையை அழைத்திருத்தலும் கூடும் என எண்ண இடமுள்ளது. "ஸ்ரீ ஆண்டாளே ஆண்டான்" என்ற தலைப்பில் 'ஒருவர்'[19] இக்கோயிலில் சொற்பொழிவாற்றியது இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

> *பிறரை அடிமைகொண்டு ஆள்பவர் என்ற பொருளில் 'ஆள்வார்' என வழங்கி வந்தது. பின்பு 'ழகர' 'ளகர' வேற்றுமையின்றி 'ஆழ்வார்' எனத் திரிந்திருக்கலாம் என்பார் மு.இராகவையங்கார்.*[20]

குருபரம்பரை கூறும் கோதை வரலாறு :

*பெரியாழ்வாரால் அமைக்கப்பட்ட திருநந்தவனத்து, துளஸி வனத்திடையே கண்டெடுக்கப்பட்ட பெண்மகளான கோதை, திருமால்பால் காதல் மிக்குற்றுச் சூடிக் களைந்த மாலையைப் 'பகவான்' விரும்பி ஏற்ற நிலையால், 'சூடிக்கொடுத்தாள்' எனப்பட்டாள். அவளைத் தாமே கைப்பற்றிக் கொள்ளுதற்பொருட்டு, திருவரங்கப் பெருநகர்க்கு அழைத்துவர இறைவன் வேண்டவே, பெரியாழ்வார் அவ்வாறே செய்தார்.*[21]

திவ்யசூரி சரிதம் சுட்டும் கோதையின் திருமண வரலாறு :

*திருமால்பால் காதல்கொண்ட தம் மகள் கோதையைப் பகவானுக்கே பாணிக்கிரகணம் பண்ணிக் கொடுக்க எண்ணிய பெரியாழ்வார், வகுளாபரணராம் ஸ்ரீசடகோபரின் அநுமதியின்படி, குருகை நகரில் சுயம்வரம் கோட்டித்து, அர்ச்சாவதார எம்பெருமான்களிற் சிறந்த வரனுக்கே கொடுக்க முடிவு செய்தார். அம்முறைப்படி, திருவரங்கத்து அழகிய மணவாளனையே தேர்ந்த அவள் அவருடன் அரங்க நகர் செல்லும் பாதையில் இருவருமே திருமங்கை மன்னனால் வழிமறிக்கப்பட்டனர். அதனால், அவ்வாழ்வார் மந்திரோபதேசம் பெற்றார்.*[22]

தலமகாத்மியம் தரும் ஆண்டாள் வரலாறு:

*பசுங்கொண்டல் வண்ணனின் திருமார்புபோலத் திகழும் திருத்துழாய்ப்பாத்தியில் அவதரித்த குழவியை இறைவனின் பிரசாதமாக எடுத்தணைத்த ஆழ்வாரிடம் ஐந்து வயதுக் கன்னிகையாய் மாறிய அக்குழவி, 'யான் உமது மகள் ;இத்துளசி எனது தாய்' என்ற உண்மையுரைத்தது. இறைவனும் அச்செய்தியை வழிமொழிய அசரீரித்தார். ஆண்டவனருளால் சுரந்த தாய்ப்பாலருந்தி, ஆழ்வாரின் மனைவியாம் விரஜையிடம் அக்குழந்தை வளர்ந்து வந்தது.*[23]

தலவரலாறு சொல்லும் ஆண்டாள் அவதார வரலாறு:

*கருட அம்சரான விஷ்ணுசித்தருக்கு மகளாய்அவதரித்து, ஆன்மாக்களுக்கு உய்யுமுறை உணர்த்த விழைந்த, உயிர்களுக்கெல்லாம் அன்னையான பூதேவி, பரமனின் ஆணை பெற்றுத் துழாய்ச் செடிக்கீழ் அவதரித்தாள்.*[24]

எனத் தொடங்கி, ஆண்டாளின் அவதார வரலாறு விவரிக்கப்படுகிறது.

## கதைகளால் ஏற்படும் கருத்து முரண்கள்:

மேற்குறித்த ஆண்டாள் பற்றிய கதைச் செய்திகளால், ஆண்டவனுக்குரிய மாலையை அவள் தனது கூந்தலில் சூடிக்களைந்த நிகழ்ச்சியைப் பெரியாழ்வாரே நேரில் கண்டு வருந்திய நிலையைக் காண்கிறோம். ஆனால், ஆண்டவனுக்குச் சூட்டும் மாலையில் உரோமம் ஒன்றைக் கண்ட அருச்சகர்,

> *நான் சில நாட்களாகச் சந்தேகப்பட்டது இன்று மெய்யாயிற்று. வாடிப்போய் நிறம் குலைந்திருந்த மாலைகளைக் கண்டிருக்கிறேன். மாசிலா மணியாகிய நீர் தொடுத்த மாலைக்கும் மாசுகற்பித்துப் பேசலாமோ? அது அபச்சாரம் என்று கூசினேன். ரோமத்தையும் கண்டேன் கூறினேன். மன்னித்தருள வேண்டும் எனப் பெரியாழ்வாரிடம் கூறுவதாக அமைக்கிறார். பி.ஸ்ரீ.* [25]

பெரியாழ்வாரின் கனவில் தோன்றிய அரங்கநாதன், தாம் நேரிற் கைப்பற்றிக் கொள்ளுமாறு, பலவித வரிசையோடும் கோதையை அரங்கமாநகர்க்கு அழைத்து வருக என்று கூறி அவருக்கு ஆணையிட்டதாகக் குருபரம்பரை கூற, குருகை நகரில் (அர்ச்சவதார மூர்த்திகளின் குழாத்திடை) கோதைக்குச் சுயம்வரம் கோட்டித்ததாகத் திவ்யசூரி சரிதம் தெரிவிக்க,

> *ஆண்டாளை மணம் புரிவதற்கு அரங்க நகரிலிருந்து, அரங்கநகர் அப்பனைக் காற்றிலும் கடுகிய வேகத்துடன் வில்லிபுத்தூரில் கொண்டு வந்து சேர்த்த பெருமகனல்லவா கருடாழ்வார். அந்தக் கைங்கர்யத்தின் நினைவாக அரங்கமன்னர் அவரைத் தன்னருகிலேயே வைத்துக் கொண்டார் போலும் என மொழிவார் சுப்பு ரெட்டியார்.* [26]

## ஆண்டாளின் பக்திநிலை:

> *ஆண்பாலரான ஆழ்வார்களும் தம்மை நாயகியராகவும் திருமாலை நாயகனாகவும் கொண்டு பாடிப் போந்தனரேனும், அவர்கள் கொண்ட நாயகி நாயக பாவம் அநுகாரமே யாதலின் இயற்கையானது அன்று என்றும், அதனால் அன்னோர் திருமாலிடஞ் செலுத்திய அன்பு மேட்டுமடைநீர் போன்ற தென்றும், ஒன்றையும் அநுகரியாமல் பெண்பாலராய்ப் பிறந்து,*

*அழகிய மணவாளனையே தம் நாயகனாக வரித்துக்*
*கொண்டு, அவனிடம் உள்ளுருகிச் செலுத்தும்*
*ஆண்டாளது காதற்பெரு வெள்ளம் பள்ளமடைநீர்*
*போன்றதென்றும் பெரியோர்கள் எழுதியுள்ளனர்.* [27]

இஃது ஆண்டாளின் பக்தி மேன்மையை அவனிக்கு உணர்த்துகின்றது.

*ஆண்டாளுடைய பக்தி, இந்த மண்ணை*
*இறைவனுடைய விளையாட்டுத் தலமாகக் கண்டது.*
*இதனை, ஆண்டாள் நந்தகோபால இடைச்சியாகத்*
*தன்னைப் பாவித்துக் கொண்டாள். அப்பாவனையின்*
*முதிர்ச்சியினால், கண்ணனோடு இடையறாத தொடர்பு*
*கொண்ட கோபியாக மாறினாள். இந்த உலகம்*
*அவளுக்கு இறைவன் நடமாடுகின்ற*
*பிருந்தாவனமாயிற்று. இங்குள்ள இன்பங்கள் அவனை*
*மறைக்கின்ற இடர்ப்பாடுகளாகத் திரியாமல்,*
*அவனோடு கூடியிருந்துபெறும் இன்பமாக நின்றன.* [28.]

என்று ஸ்ரீனிவாசராகவன் செப்புகின்றார்.

ஆண்டாளுடைய அனுபவங்களும் கண்ணனைப் பிரத்தியட்சமாகக் காண்பதுபோல அமைந்திருப்பதாக நாச்சியார் திருமொழி தெரிவிக்கிறது. வரண்டு அயர்ந்த பாலையைச் சோலையாக்கும் மழைவளம் போல வருகிறானும், கண்ணன். ஆண்டாளின் இதயதாபம் தீர, அவன் அவளோடு பேசுகிறான். அவனுடைய பேச்சும் செய்கைகளும் கோபியர் குழுவில் ஒரு கோபியாகக் கலந்து கொண்டிருக்கும் இவளை மையலேற்றி மயக்குகின்றன. அதற்கு அந்த மாயனுடைய முகம் மாயமந்திரம் போலக் காண்பது காரணமாயிருக்கலாமோ என்று பாடுகிறாள்.[29]

*காதலைப் பரம எதிரியாக மாற்றிக்கொள்ளும்*
*ரசவாதத்தின் இரகசியத்தை உலகிலேயே*
*ஈடுபட்டிருப்பவர்களும் கண்டுகொள்ள முடியும்*
*என்ற உண்மையை ஆண்டாள் வாக்கு*
*புலனாக்குகிறது.*[30]

இவ்வாறு ஆண்டாளுடைய பக்திப் பெருக்கைப் பலரும் பலவாறாகப் பகர்வதைக் காண்கிறோம்.

*ஆண்டாள் அணிந்த மேலாடையையும்.*
*திருக்குழலிலே சூட்டி. அதனால் வாசனை யூட்டப்பட்ட*
*மாலையையும் தலையில் அணிந்து அரங்கன் அழகு*
*பெறுகிறார்.*[31]

என்று ஆண்டாளின் பக்திப் பெருமையைக் 'கோதா ஸ்துதி' என்ற வடமொழிச் சுலோகமாக்கிக் காட்டுகிறார், வேதாந்ததேசிகர்.

தன்னிகரில்லாத் தலைவனுகத் திருமாலைக் கருதி, அவர் கிருஷ்ணன் அவதாரத்தில் நிகழ்த்திய வீரதீரச் செயல்களைப் பெரியாழ்வார் சொல்லக் கேட்டும், கற்றும் அக்கண்ணன் மேல் ஈடுபாடு கொண்ட கன்னியாகவே ஆண்டாள் இங்குக் காட்டப் பெறுகின்றாள்.

## ஆண்டாளின் பாமாலையாம் பிரபந்தங்களின் பெருமை:

ஆண்டாள் பாடியன திருப்பாவை (முப்பது பாசுரங்கள்). நாச்சியார் திருமொழிகள் (பதினான்கு திருமொழிகள் -நூற்று நாற்பத்தி மூன்று பாசுரங்கள்) என்னும் இரு பிரபந்தங்களாம், இறைவனைக் காண வேண்டும்; கண்டு அவனுக்குகந்த அடிமை செய்ய வேண்டுமென்ற ஆர்வம் உள்ளடங்காமல் வழிந்த சொற்களே திருப்பாவையாகும். இதனை 'உபநிடத சாரம்' என்பர். இதனை, ஆண்டாளின் தனிவாழ்க்கையில் நிகழ்ந்தவொரு நிகழ்ச்சி பாட்டுருவம் பெற்று வெளிவந்ததாகவும் சிலர் கொள்வர். ஆண்டாள் பாடிய இரு பிரபந்தங்களுமே இறைவனை அடைய ஆண்டாள் மேற்கொண்ட பிரேம பக்தியினைக் காட்டுவன. கண்ணனைக் காதலித்து, அவனை அடையத் துடிக்கும் ஆண்டாள் என்னும் காதலியின் துடிப்பையே இவை உணர்த்துகின்றன. தான் ஒரு மானிடப் பெண் என்பதனையும் ஆண்டாள் அறிவாள்; தான் காதல் கொண்ட கண்ணன் ஒரு பெருந்தெய்வம் என்பதும் அவளறிந்த ஒன்றே. ஆயினும், தன்னை முற்றுக இறைவனிடத்தில் ஒப்புவித்து விட்ட நிலையில், 'மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்ற உறுதியோடு அவள் வாழ்ந்தாள். இவ்வுறுதி ஆண்டாள் பாடல்கள் அனைத்திலும் காணப்படுகிறது.

பிரபந்தம் இரண்டுமே கிருஷ்ணனுபவத்தையே பாடுகின்றன. கிருஷ்ணனுபவத்திற்குரிய உபாயமாகிய மார்கழி நோன்பில் - பாவை நோன்பில் தொடங்கி, அத்தெய்வ அனுபவத்தைப் பேசுவதோடு முடிகிறது, திருப்பாவை.

தைத்திங்கள் காமன் வழிபாட்டில் தொடங்கி, விருந்தா வனத்தில் கண்ணனைக் கண்ட அனுபவத்தைப் பேசுவதோடு முடிகிறது, நாச்சியார் திருமொழி.

*பெரியாழ்வார் விருந்தாவனக் கண்ணனைக்
குழந்தையாகக் கொண்டு பாடுகிறார். அவர் மகளோ
முற்ற முடிய அவன் காதலியாக நின்று அவனையே
பாடுகிறாள். கண்ணன் வாழ்ந்த காலத்திலோ
இடத்திலோ ஆண்டாள் வாழவில்லை யாயினும். அவள்
காதல் அவ்வெல்லைகளைத் தாண்டிச்
செல்கின்றது.ஆண்டாளின் பாவனை உலகு இவற்றை
வெல்லும் ஆற்றலுடையது. அவள் கண்ணனும் காலம்
இடம் கடந்தவன்தானே.*[32]

ஆண்டாளுடைய திருவுள்ளம் ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப் பாடியாகவும், அங்குள்ள பெண்களை இடைப் பெண்களாகவும், தன்னை அவர்களுள் ஒருத்தியாகவும், வடபெருங்கோவிலை ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், அங்குள்ளவனைக் கிருஷ்ணனாகவும் காண்கின்றது.

ஆண்டாளின் திருப்பாவை ஈற்றுப் பாடலொன்றும், ஏனைய பதினான்கு திருமொழிப் பாடல்களின் ஈற்றுப் பாடல்கள் பதினான்கும் பாப்பயனைப் பாடியோரே பகர்வதாக அமைந்துள்ளன. அவ்வனைத்து இறுதிப் பாடல்களிலும் பாடுபொருள், பாடியவருடன் தொடர்புடைய பட்டர்பிரான் - விட்டுசித்தன் என்ற பெயர், பாடிய கோதை என்ற பெயர், பாடலெண்ணிக்கை, படிப்பதன் பயன் என்ற முறைவைப்பு ஒரே சீராக இல்லை. இவற்றில் சில, பாடல் சிலவற்றில் முறை பிறழ்ந்துள்ளன அல்லது விடுபட்டுள்ளன.

நாச்சியார் திருமொழிகளில் 11 பாடல்கள் கொண்ட 6ஆம் திருமொழியின் ஈற்றுப்பாடல், "வேயர்புகழ் வில்லிபுத்தூர்க் கோன்கோதை சொல்தூய தமிழ்மாலை ஈரைந்தும்" என எண்ணிக்கை மாறுபாடு கூறுவது இவண் எண்ணத் தக்கது. பெரியாழ்வார் திருமொழிகளும் இவ்வகையில் விலக்கல்ல.

நூற்று நாற்பத்து மூன்று நாச்சியார் திருமொழிப் பாசுரங்களைப் பதினான்கு பதிகங்களாக (பப்பத்துப் பாடல்களாக)ப் பகுக்க வேண்டிய சூழலில், மிகுதியான மூன்று பாடல்களைத் தொகுத்தவிடம் அறியாது, பகுத்ததில் ஏற்பட்ட மாறுபாடே இஃதென்றறியலாம்.

## ஆண்டாள் - அவதாரமா ? மானுடமா ?:

சிலர் ஆண்டாளின் பிறப்பு, வளர்ப்புக் கதைகளைக் கருத்திற் கொண்டு, மலயத்துவசன் மகளான மதுரை மீனாட்சியுடன் அவளை ஒப்புக் காண்பர். உழுபடையால் நிலமுழுதபோது, சனகன் கண்டெடுத்த சீதை போன்று,

களைக்கொட்டால் துளசிக்குக் களையெடுத்தபோது, பெரியாழ்வாரால் கண்டெடுக்கப் பட்டவளே இக்கோதை என்ற காரண, காரிய ஒப்புமை கருதி, ஆண்டாளைப் பூதேவியின் அவதாரமென்பர் பலர். அவதாரமென்பது பெயர் மாற்றம் மட்டுமன்று; அத்தோடு கூடிய உருமாற்றமே எனலாம். அதனை,

> *இந்துமதத்தில் திரிமூர்த்திகளுள் காத்தற் கடவுளான விஷ்ணு, உயிர்கள் உய்வதற்காகக் கடைப்பிடிக்க வேண்டிய அறநெறியில் நடந்து காட்டும் பொருட்டுப் பல உயிர்களாகப் பிறப்பதே அவதாரம்.*[33]

என்று வரையறுப்பார் டி.எல்.வெங்கட ராமையர். இம்முறையில் பார்த்தால், அவதாரச் சிறப்பு திருமாலுக்கே உரியதாதல் அறிகிறோம். தசாவதார மூர்த்தியாம்,

> *திருமாலுக்கு அவரின் சக்தியாம் இலக்குமி, அவ்வவ் அவதாரங்கள் தோறும் தோன்றிய துணையாகியுள்ளாள். அவர் மாணியாக வந்தபோது இவள் கமலையானாள்; பரசுராமனான போது தரணியானாள்; இராமனான போது சீதையானாள்; கிருஷ்ணனான போது உருக்குமணியானாள்.*[34]

இவர்களின் வரிசையில், திருமாலின் பத்தவதாரத்தில் எந்தவோர் அவதாரத்திற்கும் அவள் (ஆண்டாள்) தாரமாய் வந்ததாகக் குறிப்பிடப் படவில்லை. முற்குறித்த முறைப்படி, பெயர்மாற்றம் பெற்ற பெண்மணிகளில் (திருமாலின் துணைவியர்களில்) எவருமே, ஆண்டாளைப்போல் பாப்புனைந்ததில்லை என்பதும் நினையத் தக்கதாம். திறனாய்தற்குரிய எழுத்துச் சான்றுகளாகப் பாசுரங்கள் பாடியுள்ள ஆண்டாள் தனது பாடலொன்றில்,

> *மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்.*[35]

என்று தனது மனிதப் பிறப்பைச் சுட்டிக் காட்டியுள்ளதும் இங்குக் கருதத்தக்கதாம்.

## ஆண்டாளின் காதல்நிலையும் மணநிலையும் :

மானுடப் பெண்ணான ஆண்டாள், கடவுள் மாட்டுக் காதல் கொண்டிருந்தாள் என்று கொள்ள இடமிருக்கிறது. ஒல்காப்புகழ்த் தொல்காப்பியத்திலேயே, மானிடப் பெண்கள் கடவுள்மாட்டுக் காதல் கொள்ளும் நிலை காட்டப் பட்டுள்ளது.

*காமப் பகுதி கடவுளும் வரையார்*
*ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்.*[36]

என்ற தொல்காப்பியரை வழிமொழிந்து,

*கடவுள் பக்கத்தும் ஏனோர் பக்கத்தும்*
*மடவரல் மகளிர் மகிழ்ந்த பக்கமும்.*[37]

என்பார், ஐயனாரிதனார்.

கடவுள்மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்த பக்கமும் கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கமும் என்ற இருதிறப் பெருந்திணைக் காதலினுள், ஆண்டாளின் காதல், இரண்டாம் நிலையில் அடங்குவ தாகலாம்.

*மல்லரை யட்டவன் பின்போய் மதுரைப்புறம்*
*புக்காள் கொலோ.*[38] (என்றும்)

*செங்கண் மால்தான் கொண்டு போனான்.*[39]

என்றும் தன் மகள் பற்றிப் பெரியாழ்வார் பேசுவதால், மணநிலையில் 'உடன் போக்காதல்' காண்கிறோம்.

## ஆண்டாள் – பெரியாழ்வார் பெற்ற பிள்ளையா? தத்துப் பிள்ளையா? :

"துளசியே தாய், பெரியாழ்வார் தந்தை" எனக் கூறுகிறது, குருபரம்பரைக் கதை. பொய்கை யாழ்வார், பூதத் தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் முறையே தாமரை, குருக்கத்தி, செவ்வல்லி ஆகிய மலர்களில் தோன்றியதை ஒப்புநோக்கி ஆண்டாளுக்குத் துளசியைத் தாயாக்கினார்கள் எனக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

பெரியாழ்வாருக்கு 'விரஜை' என்ற பெயருடைய மனைவி இருந்ததாகக் குருபரம்பரை கூறுவதால்,பெரியாழ்வார் இல்லறத்தார் என்பது தெளிவு.

*மக்கட் பெறாத மலடன் அல்லையேல் வாகண்டாய்.*[40]

என்று நிலவைக் கண்ணனோடு விளையாட அழைக்கும் முகமாக அவர், மலட்டு நிலையைப் பழிப்பது 'அவர் பிள்ளைப் பேறுடையவரே' என்பதை உறுதி செய்கின்றது.

*ஒருமகள் தன்னை உடையேன்.*[41]

என்ற அவர் பாடலடியே அதனை அரண் செய்தல் காண்கிறோம். அந்த ஒரு மகள்தான் 'கோதை' என்ற பெயர் கொண்ட ஆண்டாளா? என்பதே இங்கு எழுகின்ற வினா.

*பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!* [42]

என்கிறது, வாழ்த்துப் பாசுரம்.

*பட்டர்பிரான் கோதை.* [43]

என்று தன்னைக் குறிக்கின்றாள், ஆண்டாள்.

*பின்னைகொல்! நிலமா மகள்கொல்! திருமகள்கொல்!*
*நம்மகளாய்ப் பிறந்திட்டாள்.* [44]

என்று தன் மகளின் பெருமை பேசும் பெரியாழ்வார்,

*நல்லதோர் தாமரைப் பொய்கை நாள்மலர்*
*போல்பனி சோர*
*அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு அழுகழிந்தால்*
*ஒத்த தாலோ*
*இல்லம் வெறியோ டிற்றாலோ என்மகளை*
*எங்குங் காணேன்*
*மல்லரை யட்டவன் பின்போய் மதுரைப்புறம்*
*புக்காள் கொலோ.* [45]

என்று ஆண்டாளை இழந்த நிலையில் அரற்றுவது, 'அவரீன்ற அருந்தவப் புதல்வியே இக்கோதை எனும் ஆண்டாள்' என்று கொள்ள வழிவகை செய்கின்றது.

பெரியாழ்வாரின் குலக்கொடியாம் கோதை, "குலவிச்சை கல்லாமல் பாகம் படும்" என்ற பழமொழிக்கேற்ப, கண்ணனை மகனாகப் பாவித்துத் தாய் நிலையிலிருந்து பாடிய அவரை விஞ்சிய நிலையில், அக்கண்ணனைக் காதலனாகவே கருதி, கணவனாக அடைய வேண்டுமென்று ஆவல் கொண்டு, கொழுநனாக்கிக் கொண்டதாகக் கனவும் கண்டு, பாசுரங்கள் புனைந்ததோடு கடவுளோடு கலந்ததாகவும் எண்ணுவதற்கு அவ்விரட்டை யாழ்வார்களின் பாடல்களே சான்றாகின்றன. இதனை,

*ஜீவாத்மா, புருஷோத்தமனைக் காதலித்து அக்காதலில் இரண்டறக் கலப்பதே பேரின்பம் என்பதை அவள் பாடல்கள் அறிவிக்கின்றன.* [46]

என்ற பி.ஸ்ரீ. கூற்றால் தெளியலாம்.

## ஆண்டாளனைய பெண்டிரும் அடியவரும் :

மீவார் இளவரசி மீராபாயின் வாழ்வும் இறைப்பணியும் ஆண்டாளின் வாழ்வியலையும் இறைப்பணியையும் அடியொற்றி

அமைந்ததறிகிறோம். எனவே, மீராவை 'வடநாட்டு ஆண்டாள்' என்பர்.

> *புறவுலகில் கண்ணெதிரே வந்துபோகும் மனிதர்கள் நிழல் போலவும். மாயக் கண்ணனே நிஜம் போலவும் ஆண்டாளுக்கும் மீராவுக்கும் தோற்ற மளித்தார்கள். மீராவின் அன்புநெறியும் ஆண்டாளின் அன்புநெறியும் ஒரே பக்திக் காதலின் இரண்டு வடிவங்களே. அவை சாராம்சத்தில் ஆண்டவன் காட்டும் அருள் நெறிதான்.*[47]

என்பார் பி.ஸ்ரீ.

சிவனடியார்களில் சிறந்த பெண்ணடியாரான காரைக்காலம்மையார், உயரிய ஆணடியாரான கண்ணப்பர் ஆகியோரின் இறைப்பணிகளை இங்கு நாம் ஒப்பு நோக்கலாம். திருவரங்கனைக் கணவனுகை அடையச் சென்ற ஆண்டாள், பல்லக்கிலிருந்து இறங்கியபோது பெருஞ்சுமையொன்று தன்னிலிருந்து இறங்கியதாக அவருக்குத் தோன்றியதாகக் கதை கூறும்.

> *இந்த நிலைமை, காரைக்காலம்மையார் ஊனுடலை உதறித் தள்ளிவிட்டு, காரைக்கால் பேயாரான கதையை நினைவூட்டுகின்றது.*[48]

இறையடியை எய்துவதற்குக் காரைக்காலம்மையார் முயன்று வெற்றிபெற. ஆண்டாளோ இறையைத் துணையாக எய்த முயன்று இறைவனோடு இணைந்தே விட்டாள் எனலாம். மரண மடையாமல் உடம்புடனே அமர வாழ்வு அடைந்து விட்டாள்.

தான் சூடிக் களைந்த மாலைகளை அரங்கனுக்குச் சூடிடக் கொடுத்த ஆண்டாளின் பக்திக் காதல், தான் கடித்துச் சுவை காண்பதால் எச்சிலாக்கப் பட்ட கறியினைச் சிவனுக்குப் படைத்த கண்ணப்பரின் பக்திப் பெருக்கை ஒத்து விளங்குவ தறிகிறோம்.

இத்தகைய ஒப்பியல் நோக்கில், சைவ, வைணவப் பெருநூல்களை – பிரச்சார நூல்களைக் காணுங்கால், அக்காலச் சமயாச்சாரியார்கள் சமயக் காழ்ப்புடன் போட்டி போட்டுத் தத்தம் மதத்தினைத் தளராது வளர்த்திட அரும்பாடு பட்டமையும், அதனுல் தமிழன்னை செழிப்புற்றமையும் தெரியவரும்.

இதிகாசப் பெருநூலாம் கம்ப ராமாயணத்திற்கு நிகராகச் சைவப் பெருநூல் படைக்க முனைந்தமையின் விளைவே கந்த புராணம் எனக் காட்டுவர். இப்புராணத்தில் இடம் பெறும் பாத்திரங்களாம் செருக்கின் சிகரமான சூரபன்மன், முருகனின் புகழ்பாடும் அவனுடைய தம்பி சிங்கமுகன், தீயோள்அயோமுகி, தூதன் வீரபாகு ஆகியோர் முறையே இராவணனையும், வீடணனையும், சூர்ப்பனகையையும், அநுமனையும் நினைவுறுத்தல் அறியலாம்.

இம்முறையில் சைவத்திற்குக் காப்பியமில்லாக் குறைபோக்க எழுந்ததே சுந்தரரைத் தன்னிகரில்லாத் தலைவனாகக் கொண்ட பெரிய புராணம் என்று கூறுவர்.

'தாழ்ந்த குலத்தவரானாலும் தளரா இறைப்பக்தியால் முக்தி பெறலாம்' என்ற தத்துவக் கருத்தை மக்களிடையே பரப்பிட, சைவத்திற்கொரு நந்தனார் என்றால், வைணவத்திற்கு இருவராகத் திருப்பாணாழ்வாரையும் அவரை யொத்த நம்பாடுவாரையும் காணமுடிகிறது.

பெண்பாலாரைக் கவர்ந்து தத்தம் மதத்தில் ஈடுபாடு கொள்ளத் தூண்டுமுகமாக, சைவத்திற்கொரு காரைக்கால் அம்மையார் காட்டப்பட்டால், அவரினும் மேலாக அவதாரச் சிறப்போடு அமைபவரே ஆண்டாள் எனக்கொள்வது ஏற்புடைத் தாகலாம்.

அடிக்குறிப்புக்கள் :

1. கே.ஆறுமுக நாவலர்: இந்துமத இணைப்பு விளக்கம்., பக், 1-3.
2. பின்னிணைப்பு 1 ; நா.தி.பி.பாசுரங்களின் பட்டியல்.
3. கோ. பாலசுந்தர நாயகர்; 'நா.தி.பி'.; க.க ; தொ. 6., ப.222.
4. ஸ்ரீ மணவாள மாமுனிகள் ; உ.தே.ர.மா., பா.4.
5. ஸ்ரீ அண்ணங்க ராசாரியர்; 'ஆழ்வார்கள் வைபவம்' (தொகு) ; ' நா.தி.பி'., பின்னிணைப்பு., பீ.83.
6. கா.ர.கோவிந்தராச முதலியார்; ஆழ்வார்கள் வரலாறு - முதற்புத்தகம் ., ப.144.
7. மு.இராகவையங்கார்; ஆழ்வார்கள் காலநிலை., ப.107.

8. கா.ர.கோவிந்தராச முதலியார், மு.நூ., அ.ப.

9. கண்ணதாசன்; திரைப்பாடல் 'அண்ணன் ஓர் கோயில்.'

10. ஆ.பூவராகம் பிள்ளை ; 'ஆண்டாள் பிள்ளைத் தமிழ்' க.க., தொ. 1., ப. 363.

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய் -
பிஞ்சாய்ப்
பழுத்தாளை யாண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.
மணவாள மாமுனிகள் ; உ.தே.ர.மா., பா.24.

11. பி.ஸ்ரீ : ஆண்டாளும் மீராவும்., ப.7.

12. பெரியாழ்வார் ; நா.தி.பி. மூன்றும் பத்து, ஐந்தாம் தி.மொ., பா. 11.

13. பெரியாழ்வார் ; நா.தி.பி. ஐந்தாம் பத்து, மூன்றும் தி.மொ., பா. 10.

14. "மங்களா சாசனத்தில் மற்றுமுள்ள வாழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றி - பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றன்
பெரியாழ்வா ரென்னும் பெயர்".
மணவாள மாமுனிகள் ; உ.தே.ர.மா., பா. 18.

15. பி.ஸ்ரீ ; மு.நூ., ப. 64.

16. இ.தேவையா ; 'முன்னுரை- அருள்மிகு ஆண்டாள் மார்கழி எண்ணெய்க் காப்பு உற்சவம் – அழைப்பிதழ்., 1980.

17. "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே யென்னும் என்று பெரியாரும் பணித்தார்." என்று பரிமேலழகர் கூறுவர். —

ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை ; 'தமிழரசு நீதி வழங்கிய திறம்' உரைநடைத் திரட்டு., ப.46.

18. 'ஆண்டாள்' ; (ஆள் : ஆண்மை) என்பது உயிர்களை யெல்லாம் ஆளும் தன்மையை உடைய கடவுளைக் குறிக்கின்றது. – செந்தமிழ்ச் செல்வி., 2–127.

19. வி.எஸ். செல்லம் நாராயண ராஜா ; 'ஆண்டாளை ஆண்டான்' (சொ.பொ.) பங்குனி திருக்கலியாணத் திருவிழா அழைப்பிதழ்., இரவு மணி 6-7., 20.3.1981.

20. பு.ரா. புருஷோத்தம நாயுடு ; 'ஆழ்வார்கள்' க.க., தொ.1., ப. 454.

21. மு. இராகவையங்கார் ; மு. நூ., பக். 102-104.

22. மு. இராகவையங்கார் ; மேலது., பக். 105-107.

23. பொ.கா. ஷண்முக நாதன் ; ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்தல மகாத்மியம் ., பக். 19-20.

24. பொ.கா. ஷண்முக நாதன் ; ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்தல வரலாறு ., பக். 17-22.

25. பி.ஸ்ரீ ; மு.நூ ., பக். 2-3.

26. ந. சுப்பு ரெட்டியார் ; பாண்டி நாட்டுத் திருப்பதிகள்., பக். 137-138.

27. மு. இராகவையங்கார் ; மு.நூ., பக். 107-108.

28. அ. சீநிவாச ராகவன் ; 'மார்கழித் திங்கள்' இலக்கிய மலர்கள் ., ப. 111.

29. பி.ஸ்ரீ. ; மு.நூ., ப. 62.

30. பி.ஸ்ரீ. ; மேலது., ப. 66.

31. கோ. விஷ்ணு சித்தன் ; 'மதிப்புடைய சோலைக்கிளி' ஸ்ரீவைஷ்ணவ ஸபையின் பொன்விழா மலர் ; மூன்றும் பகுதி ., ப. 37.

32. ப. அருணாசலம் ; பக்தி இலக்கியம் ., பக். 303-304.

33. டி.எல். வெங்கட ராமையர் ; 'அவதாரம்'; க.க., தொ.1 ., ப. 227.

34. பு.ரா. புருஷோத்தம நாயுடு ; 'திருமகள்' ; க.க., தொ.6., ப. 19.

35. கோதை ; 'நாச்.தி.மொ'. முதல் தி.மொ. ; நா.தி.பி., பா. 5.

36. தொல்காப்பியம், பொருளதிகாரம்., 2;23.

37. ஐயனாரிதனார் ; பு.பொ.வெ.மா., வரி. 28-29 ; ப.196.

38. பெரியாழ்வார் ; மூன்றும் பத்து, எட்டாம் தி.மொ., நா.தி.பி., பா.1.

39. பெரியாழ்வார் ; மூன்றும் பத்து, எட்டாம் தி.மொ., நா.தி.பி., பா.4.

40. பெரியாழ்வார் ; முதற் பத்து, நான்காம் தி.மொ., பா.4.

41. பெரியாழ்வார் ; மூன்றும் பத்து, எட்டாம் தி.மொ., பா.4.

42. மணவாள மாமுனிகள் நியமித்தருளியது ; ஆண்டாள் வாழித் திருநாமம் ; நா.தி.பி., ப. 630.

43. கோதை, 'திருப்பாவை', மு.நூ., பா. 30.

44. கா.ர. கோவிந்தராச முதலியார் ; மு.நூ., பா. 147.

45. பெரியாழ்வார் ; மூன்றும் பத்து ; எட்டாம் தி.மொ ; மு.நூ., பா.1.

46. பி.ஸ்ரீ., மு.நூ., ப. 32.

47. பி.ஸ்ரீ ., மேலது., ப. 61.

48. பி.ஸ்ரீ., மேலது., ப. 32.

# 3.கோயிலமைப்பில் கோதை கோயில்

மல்லி நாட்டிலுள்ள 'வடவேச்வர புரம்' என்ற பழைய நகரத்தைப் புதுப்பித்த 'வில்லி'யின் நினைவாகவே 'வில்லிபுத்தூர்' எனப்பட்ட திருவில்லிபுத்தூர், 'புதுவை',[1] 'தென்புதுவை[2], 'புத்தூர்[3], 'வில்லிபுத்தூர்[4], 'வராக க்ஷேத்திரம்' என்றெல்லாம் அழைக்கப்பட்டது. இந்நகரில்தான், 'இரட்டைக் கோயில்களாம்' நாச்சியார் கோயிலும், வடபத்ர சயனர் கோயிலும் உள்ளன.[5] இவை, இவ்வாலயத்தின் இருபெரும் பகுதிகளாகவே கருதப் படுகின்றன. பெரியாழ்வாரால் அமைக்கப்பட்ட 'நந்தவனமே' இவற்றிற்கிடையில் உள்ளது. கோதையைக் குவலயத்திற் கீந்தது இந்நந்தவனத்துத் துளசிச் செடியே என்று 'குருபரம்பரை' கூறுகின்றது.

### யானை மஹால் :-

*தமது திருமாளிகையையே கோதை கோயிலாக்கிய பெரியாழ்வார்தான், அதன் முதல் தருமகர்த்தா என்கின்றனர். அவர் சார்பாகப் பெண்களிருவர் 'நெல்லளக்கும்' நிகழ்ச்சி, பழைய யானை மகாலுக்கு அருகேயுள்ள மண்டபத்தில் இன்றும் நடைபெறுகின்றது. பெருந்திருவிழாக்களின் ஏழாம் திருநாள் நிகழ்ச்சிகளில் ஒன்றாக இஃதிடம் பெறுகின்றது. (இந்நூல், பக். 116–117).*

### சிங்கம்மாள் குறடு :

*நாச்சியார் கோயிலின் சுதை வேலைப்பாட்டருமையுடன் கூடிய முகப்பையுடைய கொட்டகைபோல் கல்லாலே கட்டப்பட்ட பந்தல் மண்டபத்தின் முன்பு, இந்நாற்கால் மண்டபம் உள்ளது. திருவிழாக் காலங்களில் தெய்வத் திருப்பணியாக உபயமண்டபம் நடத்த விரும்புவோர், சொந்த மண்டபம் இல்லாத சூழலில், இதனையே பயன் படுத்துகின்றனர். இங்கு எழுந்தருளுகின்ற கடவுளர்க்குத் திருமஞ்சனமும், அலங்காரமும், திருவாராதனையும், நைவேத்தியமும் மண்டபதாரரின் உபயத்தால் செய்யப் படுகின்றன. கைம்மாறாக, அந்தந்தக் கடவுளின் மாலை, பரிவட்ட, சடாரி சாற்றும் மரியாதை உபயதாரருக்கு அளிக்கப் படுகின்றது. இறுதியில், உபயதாரர் சார்பில் கூடியுள்ளோருக்கு இறைவனுக்குப் படைக்கப்பட்ட நைவேத்தியப் பொருட்கள் வழங்கப் பெறுகின்றன. இதனைக் 'குழுவழங்கல்' (கோஷ்டி விநியோகம்) என்கின்றனர்.*

### முன் மண்டபம் :

*பந்தல் மண்டபத்தின் தென்புறம் பற்பல கடைகள் உள்ளன. வடபுறம் வேதாந்த தேசிகரின் சந்நிதியை நடுவணாகக் கொண்டு, கிழக்கில் வானமாமலை ஜீயர் மடமும், மேற்கில் மணவாள மாமுனிகள் சந்நிதியும் உள்ளன. இவற்றின் வாயில்கள் தவிர்த்து, ஏனைய இடங்களில் கடைகள் இடம் பெற்றுள்ளன. இக்கடைகட்கு இடையிலுள்ள இடமே 'முன்மண்டபம்' எனப்படும். இங்குத்தான் பங்குனி – ஆண்டாள்–மன்னர் திருக்கலியாணத்தின்போது மாலை மாற்றுதல் நடைபெறுகின்றது.*

திருக்கலியாண மண்டபம் :

*முன்பந்தல் மண்டபத்தைத் தாண்டிய நிலையில் குறுக்கிடும் ஒரு சிறுவீதியைக் கடந்து கோயிலின் முன்பகுதி உள்ளது. கோயில் அலுவலகத்திற்கும் புதிய யானை கட்டும் மண்டபத்திற்கும் இடையிலமைந்த அப்பகுதி திருக்கலியாண மண்டபமாகும். பங்குனித் திங்கள் - ஆண்டாள் - மன்னார் திருக்கலியாணத்தின் 'திருப்பூட்டும்' நிகழ்ச்சி இங்குத்தான் நடைபெறுகின்றது.*

*புரட்டாசி - நவராத்திரிக் கொலு மண்டபமாகவும் தற்போது இது பயன்படுத்தப் படுகின்றது.*

கருங்கல் - பளிங்கு மண்டபம் :

*வெளிச்சுற்றின் (பிராகாரம்) தென்மேற்கு மூலையில், கருங்கல் பணியாலான இக்குறடு உள்ளது. முன்னாளில், இதுவே, புரட்டாசி - நவராத்திரிக் கொலுமண்டபமாகப் பயன்படுத்தப் பட்டது. தற்போது, மார்கழி - நீராட்டத் திருவிழாவின் முடிவில், மணவாள மாமுனிகளுக்காக நடத்திக் காட்டப் பெறுகின்ற 'ஊஞ்சல் விழா' மண்டபமாக இஃது உதவுகின்றது.*

பரமபத வாசல் (சொர்க்க வாசல்) :

*வெளிச்சுற்றின் வடபக்கத்தில் தைல அறைக்கும் உபரி மடைப் பள்ளிக்கும் இடையிலிருப்பது சொர்க்க வாசல். வடக்கு மாட வீதியில், இவ்வாசலுக்கு எதிரே ஒரு மண்டபமும் உண்டு. இம்மண்டபத்தில் பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், உடையவர், வேதாந்த தேசிகர் முதலானோர் தெற்கு நோக்கி எழுந்தருளிக் காத்திருக்க, பரமபத வாசலின் உட்புறமிருந்து வடக்குநோக்கிய வண்ணம் பெரிய பெருமாள் எழுந்தருளியிருக்க, மார்கழி மாதத்து வைகுண்ட ஏகாதசியன்று காலை 7.15 மணியளவில் 'குலசேகரன்' என்ற அருளிப்பாடோடு, மாலை,பரிவட்ட, சடாரி மரியாதை பெற்ற ஜீயர்ஐயர் அவர்களால் இச்சொர்க்க வாசல் கதவு திறக்கப் படுகின்றது. பெருமாளுக்குக் கற்பூரமானவுடன், முழுக்கதவும் திறக்கப்பட, ஆழ்வார்களும், ஆசாரியர்களும் பெருமாளைப் பார்த்தவண்ணம் பின்னோக்கி எழுந்தருளு கின்றனர். இதனை, 'எதிர்கொண்டு சேவித்தல்' என்கின்றனர். பின்னர் பெரிய பெருமாளும், ஆண்டாள் - மன்னாரும் அப்பரமபத வாசல் வழியாக வடக்கு மாடவீதி எழுந்தருளுகின்றனர்.*

*அறிதுயில் கொண்டுள்ள பெருமாள் வைகுண்ட ஏகாதசியன்றுதான் கண்ணைத் திறக்கிறாராம். அவரின் கடைக்கண் அருள்மழையை அடியவர்கள் பெறவே அன்று வைகுண்ட வாசல் திறக்கப் படுகின்றது.* [6]

## ஏகாதசி மண்டபம் :

வெளிச்சுற்றின் வடகிழக்கு மூலையில், கண்ணாடி அறையோடு அமைந்திருப்பதே இம்மண்டபமாகும். ஆவணி – கிருட்டிணன் பிறந்த நாளன்று (கிருஷ்ண ஜெயந்தி), ருக்மணி சத்ய பாமாவுடன் சேர்த்தியாய் எழுந்தருளுகின்ற கிருட்டிணன், இம்மண்டபத்தில்தான் 'சயன சேவை' சாதிக்கின்றார்.

## சுக்கிரவாரக் குறடு :

மாதவிப் பந்தலைத் தாண்டிய மணிமண்டபத்திற்கு அடுத்துள்ளது, பொன்மயமான சுக்கிரவாரக் குறடு. அதன் முன்தூண்களில் இதை நிறுவிய திருமலை நாயக்கர் தம்பதியர் உருவங்கள் இருக்கின்றன. இக்குறட்டு ஊஞ்சலில், வெள்ளிக் கிழமைதோறும் ஆண்டாள், மன்னாருடன் அமர்ந்து ஆடுகின்றாள்.பெரியாழ்வார் தாம் நேரில் கண்ட காட்சியை நாமும் கண்டு களித்தற்காக ஏற்படுத்தியதே இவ்வூஞ்சல். இவ்வூஞ்சல் திருவிழாவிற்கான குறட்டினைப் பிற்காலப் பெருந்தகையாளர் பொன்மயமாக்கி, அழகுக்குஅழகு சேர்த்திருக்கின்றனர். இக்குறட்டுக்கு வடக்கிலுள்ள திருமஞ்சனக் குறட்டில் நீராடிய பின்பே ஊஞ்சலுக்கு வருகின்றனர். ஐப்பசி–தீபாவளித் திருநாளன்று, அனைத்து சுவாமிகளுக்கும், ஆழ்வாராசாரியர்கட்கும் எண்ணெய்க் காப்பு வழங்குதலும் இங்குத்தான் நடைபெறுகின்றது.

## திருப்பூர மண்டபம் :

ஆண்டாள் பிறந்த நட்சத்திரமான திருஆடிப்பூர நாளில் மட்டுமின்றி, மாதந்தோறும் வருகின்ற பூர நட்சத்திர நாளெல்லாம், ஆண்டாள் மட்டும், அவள் பிறந்த தலமான இம்மண்டபத்திற்கு எழுந்தருளி, திருமஞ்சனமாகி, அலங்காரம் பூண்டு, ஆராதனை பெற்றுத் திரும்புகிறாள். பெருந்திருவிழாக்கள் தோறும்'மிருத் ஸங்கிரஹணம்' எனப்படும் 'மண்ணெடுத்தல்' நிகழ்ச்சி இங்கேயே நடைபெறுகின்றது. ஐப்பசி–திருப்பூரத் திருநாளில் மட்டும் இங்கு ஆண்டாள்–மன்னாரின் ஊஞ்சல் திருவிழா நடைபெறுகின்றது.

## கோபுரம் :

சயனர் சந்நிதியின் முன்புள்ள 196 அடி உயரமுள்ள கோபுரம், தென்னிந்தியாவிலுள்ள மிக உயர்ந்த கோபுரங்களுள் ஒன்றாகும். இதற்கிணையாக மேருசிகரமேயன்றி, வேறு உபமானம் கூறமுடியாது என்று,

*இருக்கோதுமந் தணர்சூழ் புதுவாபுரி யெங்கள்பிரான்*
*மருக்கோதை வாழும்வட பெருங்கோயில் மணிவண்ணனூர்*
*திருக்கோபுரத் துக்கிணையம் பொன்மேருச் சிகரமென்றே*
*பருக்கோதலா மன்றிவேறு பமானப் பணிப்பில்லை.*

என்ற பாடலில் கம்பர் குறிப்பிட்டுள்ளார். இப்பாடல், கோபுரத்தின் கீழ், உட்புறத்தில் கல்வெட்டாக்கப் பட்டுள்ளது காணலாம்.

## பெரியாழ்வார் சந்நிதி :

கோபுர வாசலைத் தாண்டியதும், வடபுறத்தில், தெற்குநோக்கி, சிறிய பிராகாரம், மகாமண்டபம், அருத்த மண்டபம், கருப்பக் கிரகத்தோடு கூடிய இச்சந்நிதி உள்ளது. மகாமண்டபத்தின் மேல்புறம் நித்திய திருமஞ்சனக் குறடும், தங்க சிம்மாசனமும் இருக்கின்றன. புரட்டாசி – பெரியபெருமாள் பெருந்திருவிழாவின் ஆறும்நாள் நிகழ்ச்சிகளின் ஒரு பகுதியாக, ஆண்டாள் – மன்னார் திருக்கலியாணத் திருவிழா, திண்டுக்கல் நாயுடு ஒருவரின் உபயமாக இச்சந்நிதியில் நடத்தப் பெறுகின்றது.

## இராப்பத்து மண்டபம் :

நம்மாழ்வார், உடையவர் சந்நிதிகளுக்கு எதிரில் பக்கத்தில் ஒரு சிறுமண்டபம் உள்ளது. வீதியுலாவிற்கான அலங்காரம் பூணுதற்கான சுவாமிகளின் புறப்பாடு மண்டபமாக இது பயன்படுகின்றது. இதற்கு மேற்கே வில்லிபுத்தூரார் குறடும் வெளிச்சுற்றும் உள்ளன. இக்குறட்டில்தான், வீதிவலம் சென்று திரும்பிய பெருமாளுக்குத் திருவந்திக் காப்புச் செய்யப் படுகின்றது. இவ்வெளிச் சுற்றின் வடபுறத்தே 'இராப்பத்து மண்டபம்' உள்ளது. மார்கழி அத்யயன காலத்து இராப்பத்து நிகழ்ச்சிகள் இங்கு அரையரால் அரங்கேற்றப் படுவதாலேயே இப்பெயரேற்றது.

## கோபால விலாசம் :

இரண்டு தட்டுக்களாய் உள்ள இக்கோயிலின் கீழ்த்தட்டில், எதிரே நரசிங்கப் பெருமாள் சந்நிதியுள்ளது. உட்சுற்றின் தென்பகுதியின் கீழக்கோடியில் மேல்தட்டுக்குப் போகப் படிகள் உள்ளன. அப்படிகள், 'கோபால விலாசம்' என்ற முன்மண்டபத்தை அடைகின்றன. இங்கு, சிறிய அத்யயன உற்சவம் எனப்படும் பகற்பத்துத் திருவிழா நடைபெறுவதால், இதனைப் 'பகற்பத்து மண்டபம்' என்றும் கூறுகின்றனர். ஐப்பசி மாதத்தில் பெரிய பெருமாளுக்காக நடத்தப்பெறும் ஊஞ்சல் திருவிழா இங்குத்தான் நடைபெறுகின்றது.

## விட்ட வாசல் :

பெருமாள்கோயில் விமானத்தைச் சுற்றிவர, விமானத்திலே, ஒரு சிறு விட்டவாசல் பிராகாரம் இருக்கின்றது. இச்சுற்றில் இறைவனின் திருமுடியையும் திருவடிகளையும் சேவிப்பதற்காகச் சிறிய திட்டி வாசல்கள் உள்ளன. இவை, மார்கழித் திருநாள் ஆரம்பத்திற்கு முதல்நாள் நடைபெறும் பிரியாவிடை'த் திருநாளன்று யாவரும் வழிபடத் திறந்து வைக்கப் படுகின்றன. இவை இக்கோயிலிலுள்ள சிறப்பமைப்பாகக் கருதப்படுகின்றன.

சேவார்த்திகளுக்கு ஏற்படும் குறைபாடுகளை நிருவாகியிடம் முறையிடக் கோருகின்ற அறிவிப்பொன்று கோயில் மதிற்சுவரில் காணப்படுகிறது .

## அடிக்குறிப்புக்கள் :

1. "பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவை". - நாச். தி.மொ. 1-10.
2. "தென் புதுவை" - பெரி.தி.மொ. 2-21.
3. "ஒளிபுத்தூர்" - பெரி.தி.மொ. 4-10.
4. "வேதவாய்த் தொழிலா ளர்கள்வாழ் வில்லி புத்தூர்". - நாச். தி.மொ. 2-10.
5. பின்னிணைப்பு 2: இரட்டைக் கோயில்கள் (வரைபடம்).

6. எஸ். நடராஜன் (நஜன்) ; தமிழர் பண்டிகைகளும் பண்பாடும். ப.75.

7. பின்னிணைப்பு 3 ; கோயில் நிருவாகி அறிவிப்பு.

# 4. கோயில் திருவிழாக்கள்

## 1. பிறந்தநாள் திருவிழாக்கள்.

### அ. கடவுளர்

பெரிய பெருமாள் :

ஏனைய பெருமாள்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டவே, கீழக்கோயில் வடபத்ர சயனரைப் 'பெரிய பெருமாள்' என்கின்றனர். இத்தலத்துப் பழம்பெருங் கோயிலில் பள்ளிகொண்ட பெருமையால் இப்பெயரேற்றார் என்றும் கொள்ளலாம். இவரின் பிறந்த திருநட்சத்திரமான புரட்டாசி - திருவோணத்தை முன்னிட்டு, அந்நாளில் கோரதப் பவனியுங் கொண்ட பத்துநாள் பெருவிழா எடுக்கின்றனர்.

பெருந்திருவிழாவாதலால், அங்கூரம் (தேங்காய்தொட்டு நியமனம் பெறுதல், மண்ணெடுத்தல், முளையிடுதல்), சேனை முதல்வர் புறப்பாடு, துவசா ரோகணம் ஆகியவை (இந்நூல், பக். 110-115) முறைப்படி நடந்தேறுகின்றன. தோளுக்கினியானில் அலங்காரமாகிய உற்சவ மூர்த்தியாம் பெருமாளுக்குத் 'திருவாராதனை' செய்து குழுவழங்கலுக்குப்பின் 'காப்புக் கட்டுதல்' நடைபெறுகின்றது. பின்னர், யாக சாலைக்கு எழுந்தருளிய பெருமாள் பூசனை முடித்து, திரு. கிருஷ்ணமாச் சாரியார் உபய மண்டபம் கண்டருள்கின்றார்.

ஏனைய ஒன்பது நாட்களும் இதுபோலவே காலை தோளுக்கினியானில் அலங்கார மாகின்ற பெருமாள், மண்டபம் கண்டருளி, வீதிவலம் வந்து மக்களுக்கு அருள்பாலித்தபின், கருவறை சேர்கின்றார். அலங்கார மாகின்ற வாகனமும், எழுந்தருளுகின்ற மண்டபமும், கொள்ளுகின்ற கோலமும் சிற்சில நாட்களில் மாறுபடுவதறிகின்றோம்.

| திரு நாள் | எழுந்தருளுவோர் | இரவு கொள்ளும் திருக்கோலம் | இரவு அலங்காரமாகும் வாகனம் | பகலில் எழுந்தருளும் மண்டபம். |
|---|---|---|---|---|
| 2. | பெருமாள் | ........................ | சந்திரப் பிரபை.............. | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 3. | பெருமாள் | ........................ | சிறிய திருவடி (அநுமார்).. | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 4. | பெருமாள் | ஆண்டாள் திருக்கோலம்......... | ஆதிசேசன் (பாம்பு).......... | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 5. | பெருமாள் | ........................ | பெரிய திருவடி (கருடன்) | |
| | பெரியாழ்வார் | ........................ | அன்னம்........................ | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 6. | பெருமாள் | ........................ | யானை.......................... | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 7. | பெருமாள் | ........................ | தோளுக்கினியான்............ | தெற்கு மாடத்தெரு திரு வி.கே. ஸ்ரீனிவாச ஆச்சாரியார் ரூ. 300 |
| 8. | பெருமாள் | ........................ | குதிரை.......................... | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 9. | பெருமாள் திருமகள் பூமகள் | ........................ | கோரதம் (பகல்).............. | கோயில் நிருவாகம் ரூ. 200 |
| 10. | பெருமாள் | ........................ | வெட்டிவேர்ச் சப்பரம்...... | பேயாழ்வார் சேரிட்டிஸ் திரு. திருவேங்கட ராமானுஜ பாகவதர் ரூ. 1000 |

ஆறும் திருநாளன்று, பெரியாழ்வார் சந்நிதியில் ஆண்டாள் – மன்னார் திருக்கலியாணத் திருவிழா, திண்டுக்கல்லைச் சேர்ந்த நாயுடு ஒருவரின் உபயத்தால் சிறப்பு நிகழ்ச்சியாக நடைபெறுகின்றது.

> *நடந்து முடிந்த பங்குனி - திருக்கலியாணத் திருவிழாவினைக் கண்டு களிக்க வாய்ப்பில்லாதோரும் இதுபோழ்து பார்த்து மகிழ வாய்ப்பேற்படுகின்றது. மணவாள மாமுனிகளுக்காக மார்கழி நீராட்டத் திருவிழா மறுபடி ஒருநாள் எடுக்கப்படுவதை இது நினைவு படுத்துகின்றது.*

ஏழாம் திருநாளன்று, பிற்பகல் 2–5 மணி வரை திருமகள் பூமகள் சேர்த்தியாய்ப் பெருமாள். சயனசேவை சாதிக்கின்றார். அச்சேவைக்குப் பின் சேர்த்தியாகவே பல்லக்கில் பவனியாகும் பெருமாள், நெல்லளவை கண்டருள்கின்றார்.

ஒன்பதாம் திருநாள் காலை கோரதப் பவனியோடு வேதாந்த தேசிகரின் பிறந்தநாள் விழாவில் அவருக்கு மங்களா சாசனம் செய்வதையும் பெருமாள் மேற்கொள்கின்றார். இரவு சந்தனத்தையும் மலரையும் பெருமாளுக்குச் சாத்துகின்ற 'சைத்யோ' உபச்சாரம் அழகர்கோயில் நம்பிகளின் உபயத்தால் நடைபெறுகின்றது.

பத்தாம் திருநாள் – சப்தா பரணம் (இந்நூல், ப. 122).
பதினோராம் திருநாள்–தீர்த்த வாரி (இந்நூல், பக். 124–125)
பன்னிரண்டாம் திருநாள்–உற்சவ சாந்தி (இந்நூல், ப.125)

## ரெங்க மன்னார் :

அருள்மிகு ஆண்டாள் சந்நிதிக் கருவறையில் ஆண்டாளோடு சேர்த்தியாய் எழுந்தருளியுள்ள ரெங்க மன்னாருக்கு, அவரின் பிறந்த நாள் திருநட்சத்திரமான சித்திரை – ரேவதியில் ஒருநாள் மட்டும் பிறந்தநாள் திருவிழா எடுக்கின்றனர். அன்றுகாலை இலட்சுமி நாராயணன் சந்நிதிக்கு அருகிலுள்ள ரேவதி மண்டபத்திற்குச் சேர்த்தியாய் எழுந்தருளுகின்ற மன்னார் – ஆண்டாளுக்கு அலங்காரத் திருமஞ்சனம் ஆகின்றது. அலங்காரத்திற்குப் பின் ஆராதனை நிகழ்த்தப் பெறுகின்றது ; வீதிவலம்வந்து திரும்பியதும் திருவந்திக் காப்புச் செய்யப் படுகின்றது.

> *மன்னாரின்றி ஆண்டாளுக்கு மட்டும் தனித்து இக்கோயிலில் சில விழாக்கள் எடுக்கப் படுகின்ற அதே*

*வேளையில். மன்னருக்கென்று தனித்து எடுக்கப்படுகின்ற இதுபோன்ற விழாவில்கூட ஆண்டாளும் இடம் பெறுகின்றார். இஃதொரு சிறப்பம்சமாகும்.*

வெங்கடாசலபதி :

அருள்மிகு ஆண்டாள் கோயிலைச் சேர்ந்த சிறிய கோயில்கள் ஒன்பதுள் இதுவும் ஒன்றாகும். இதைத் 'தென்திருப்பதி' என்றும் அழைக்கின்றனர். திருப்பதி வெங்கடாசலபதியே வேட்டைக்கு வந்ததாயும், பக்தர்களுக்கு அருள்பாலிக்க வேண்டி இம்மலையில் திருக்கோயில் கொண்டதாயும் புராணம் புகலுகின்றது.

*இத் 'திருமலை', அன்னை பார்வதி தேவியின் பதிப்புக்களான, உள்ளூர் மாரியம்மன், கம்மாப்பட்டி காளியம்மன் போன்றோரால் திரு அண்ணன் மலை என அழைக்கப் பட்டதால் 'திருவண்ணாமலை' என்றாயிற்றென்கின்றனர்.'*

இத்தலத்து மலைக்கோயிலில் குடிகொண்டிருக்கும் வெங்கடாசலபதிக்கும் உற்சவ மூர்த்தியாம் ஸ்ரீனிவாசனுக்கும், பெரிய பெருமாளுக்கேபோல் புரட்டாசி – திருவோணமே பிறந்த நட்சத்திரமாதலால், அந்நாளைச் சிறப்பிக்கும் முகமாக அம்மாதத்தையே பெருமைப் படுத்துகின்றனர். அதனால், அம்மாத ஐந்து சனிக் கிழமைகளிலும் 'சனி–வாரத் திருவிழா' எடுக்கின்றனர். அந்நாட்களில் ஏராளமான பக்தர்கள் இக்கோயிலுக்கு வந்து குழுமி, தேங்காயுடைத்து, வெற்றிலை, பாக்கு, பழம், சமர்ப்பித்து, அர்ச்சனை செய்து, வழிபாடியற்றிப் போகின்றனர்.

ஒவ்வொரு சனிக் கிழமையிலும், காலை 10 மணியளவில், ஆண்டாள் கோயிலிலிருந்து, உற்சவரான ஸ்ரீனிவாசன் தோளுக்கினியானில் அலங்காரமாகி, நண்பகல் 12 மணியளவில் திருமலை எழுந்தருளுகின்றார். அங்கு ரூ. 300 வரை செலவு பிடிக்கும் கோட்டப்புரம் சுப்பிரமணிய செட்டியார் உபய மண்டபம் நடக்கிறது. அங்கு, ஸ்ரீனிவாசனுக்குச் சிறப்புப் பூசனை செய்கிறார்கள்.

பிற்பகல் 4 மணியளவில், அவரைக் கருட வாகனத்தில் அலங்காரம் செய்து, மலையை ஒருதரம் சுற்றி வருவதாகிய 'கருடசேவை' நிகழ்ச்சி நடைபெறுகின்றது. பூசனைக்குப் பின் மாலை 6 மணியளவில் புறப்பாடாகின்ற அவர், இரவு 10 மணியளவில், ஆண்டாள் கோயில் எழுந்தருளுகின்றார்.

இவ்வாறே, ஏனைய நான்கு சனிக் கிழமைகளிலும் இந்நிகழ்ச்சிகள் ஒரே சீராக அமைகின்றன. மண்டபதாரரே மாறுபடுகின்றனர்.

2வது சனிவாரம் – திருவில்லிபுத்தூர் (ஊர்ப் பொது) 'பிள்ளைமார் மண்டபம்'-ரூ. 300/-

3வது சனிவாரம் – 'சோளபுர நாயக்கர் சேது மண்டபம்' ரூ. 400/-

4வது சனிவாரம் – இராசபாளையம் தேவர் ஒருவரின் குடும்ப டிரஸ்டு 'அவன்செயல் சாமியார் மண்டபம்' ரூ. 400/-

5வது சனிவாரம் – குடும்ப டிரஸ்டு 'பாரபட்டி நாயக்கர் மண்டபம்' ரூ. 300/-

ஐந்திலும் புரட்டாசி மூன்றும் சனி சிறப்பு மிக்கதாம். அன்று, நெல்லை, காமராசர், மதுரை மாவட்டங்களிலிருந்து ஏராளமான பக்தர்கள் இங்கு வந்து, சுவாமி தரிசனம் செய்வதோடு, சேவல், ஆடு, பசு, கன்று, காளை போன்ற உயிரினங்களையும், நெல், கம்பு, சோளம், பருத்தி, வற்றல் போன்ற பல்பண்டப் பொருட்களையும், நேர்த்திக் கடனைச் சமர்ப்பிக்கின்றனர். பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட பலரக உருப்படிகள், பாத்திரங்கள் பரிவட்டங்கள் ஆகியவற்றோடு மிகுதியான காணிக்கைப் பணமும் செலுத்துகின்றனர். அந்நாளில், இங்கு நடத்தப்பெறும் 'குருபூசை'யில், இன வேறுபாடின்றி அனைத்து மக்களும் கலந்துண்ணும் காட்சி, மனமகிழ் வூட்டுகிறது. மூடைக் கணக்கில் அரிசி கொணர்ந்து, சோறாக்கி, இறைவனுக்கு நைவேத்தியமாகப் படைத்தபின், அனைவரையும் சரிநிகர் சமானமாக்கிக் கலந்துண்ணச் செய்வதே இக்குருபூசையின் அரும்பெரும் பணியென்றறிகிறோம். நோன்பேற்று, விரதம் பூண்டிருப்போர், தோலிலான செருப்புக்களைக்கூடக் காணிக்கை யாக்குகின்றனர். பிள்ளை வேண்டி நோன்பு நோற்போர், சந்நிதிக் கருவறைக்குச் செல்லும் வழியின் இடப்புறத்தேயுள்ள ஒரு சிறுமரத்தின் கிளைகளில், சிறுதுணிகளாலான பிள்ளைத் தொட்டி விடுகின்றனர்.

> இந்நாட்களில், ஏறத்தாழ ரூ. 50,000/-க்கும் மேல் காணிக்கையாகக் கிட்டுகின்றது.[2]

### கிருட்டிணன் :

இரயிலடியிலிருந்து திருவில்லிபுத்தூர் செல்லும் பாதையின், தெற்குப் பகுதியிலுள்ள தனிக் குக்கிராமத்தில், இரண்டு பிராகாரங்கள், அருத்த மண்டபம், கருப்பக் கிரகம் ஆகியன கொண்டதாய் அமைந்துள்ள இக்கோயிற் கருவறையில், ருக்குமணி- சத்திய பாமா சேர்த்தியுடன் 'நவநீத கிருட்டிணன்' எழுந்தருளியிருக்கின்றார். இங்கு, கிருட்டிணனின் பிறந்த நாள் நட்சத்திரமான ஆவணி - ரோகிணியை ஒட்டிப் பத்துநாள் பெருந்திருவிழா எடுக்கின்றனர். ஏழாம் திருநாள் மட்டும் ஆண்டாள் கோயிலோடு தொடர்புடைய தாகின்றது. அந்நாளில், கிருட்டிணன், ருக்மணி – சத்ய பாமாவுடன் சேர்த்தியாகப் புறப்பாடாகி, ஆண்டாள் கோயில் ஏகாதசி மண்டபத்திற்கு எழுந்தருளிச் 'சயனசேவை' சாதிக்கின்றார்.

கிருட்டிணன் அவதார நாளான 'கிருஷ்ண ஜெயந்தி'யன்று இரவு, ஆண்டாள் கோயிலில் மாலை பரிவட்ட மரியாதை பெற்ற வேதப்பிரான் பட்டர், 'ஜயந்தி புராணம்' சேவிக்கிறார். பெருமாள் சந்நிதியிலும் புராணம் படிக்கின்றனர். நள்ளிரவில், கண்ணனுக்குத் திருமஞ்சனம் நடந்து, அலங்காரமாகி, ஆராதனை முடித்தவுடன், அப்பம், வடை, தேங்குழல், சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், நாவற்பழம், விளாம்பழம், சுக்கு, பால், பழம், வெற்றிலை, பாக்கு போன்றவை சிறப்புத் தளிகையாய்ப் படைக்கப் படுகின்றன, குழு வழங்கலுக்குப்பின் ஆண்டாளுக்கு நள்ளிரவுப் பூசனை நடக்கின்றது.

### உறியடித் திருவிழா :

இது, 'கிருஷ்ண ஜெயந்தி'க்கு மறுநாள் நடைபெறுகின்றது. காலையில் தோளுக்கினியானில் அலங்காரமாகி, ஆண்டாள் கோயில் எழுந்தருளிய 'தாண்டவக் கண்ணன்' குழந்தைகட்கு நல்லெண்ணெய், சுண்டல் வழங்கியபின், திரும்பிச் செல்கின்றார்.

இரவு, கண்ணன், ஆண்டாள் கோயில் எழுந்தருளி, புன்னைமர வர்கனத்தில் அலங்கார மாகின்றார். தோளுக்கினியானில் சேர்த்தியாக அலங்காரமாகிய ஆண்டாளும் மன்னாரும் கண்ணனுடன் புறப்பாடாகிப் பெரிய கோபுர வாசல் சேர்கின்றனர். தோளுக்கினியானில் அலங்காரமாகிய பெருமாளும் அங்கு வந்துசேர, அனைவருமே ரதவீதி பவனியாகின்றனர்.

கோயிலைச் சுற்றியுள்ள நான்கு வீதிகளிலும், மோர் நிறைந்த கலசந் தாங்கிய உறிகள், வீதிக்கொன்று வீதம் குறுக்குக் கழிகளில் கட்டித் தொங்கவிடப் பட்டிருக்கின்றன. கம்மாப் பட்டிக் கோனூர்களில் சிலர், அவற்றை அடித்து நொறுக்குவதைக் கண்டருள்கின்றனர். அதன்பின் அவர்கள், கோயிலின் முன்புறம் எழுந்தருள்கின்றனர்.

## வழுக்குமர மேறுதல் :

முறுக்கு, வடை, அப்பம், பணம் ஆகியவை கொண்ட முடிப்புக்களை உச்சியில் தாங்கிய மரத்தூண்களை, அடிமுதல் உச்சி வரை விளக்கெண்ணெய் தடவி ஊன்றி யிருக்கின்றூர்கள். அவ்வழுக்கு மரத்தின் மீதேறி, அம்முடிப்புக்களை எடுப்பதற்குக் கம்மாப் பட்டிக் கோனூர்களில் சிலர், போட்டியிட்டு முயலுகின்றனர். மரத்தின்மேல் ஏற முடியாத பட்சத்து, ஒருவர் தோள் மீது ஒருவர் என்றபடி ஏறி எடுக்கின்றனர். இவ்விரு நிகழ்ச்சிகளின்போதும், அவர்கள் ஆற்றுகின்ற வீர தீரச் செயல்களைக் கண்டு களித்த பொதுமக்கள், ஆரவாரித்து மகிழ்கின்றனர்.

*இடைச்சாதியாய் வளர்ந்த பாலப் பருவத்துக்*
*கண்ணனின் வெண்ணெய் திருடியுண்ட*
*நிகழ்ச்சியினை நினைவுகூர்தற் பொருட்டே,*
*இடைச்சாதியினர் மட்டுமே பங்கேற்கும்*
*இவ்விழாக்கள் அமைந்துள்ளன எனக்கொள்ளலாம்.*

இவ்வியத்தகு காட்சிகளைக் கண்டருளிய பின்னரே, கடவுளர், அவரவர் சந்நிதி சென்று சேர்கின்றனர்.

## காட்டழகர் :

மண்டூக மலைக்கருகில், பிராகாரம், மகாமண்டபம், அருத்த மண்டபம், கருப்பக் கிரகம் ஆகியன கொண்டு, ஒரு சிறுகுன்றின்மேல் அமைந்திருக்கும் இக்காட்டழகர் கோயிலில், திருமாலிருஞ்சோலை கள்ளழகரே காட்டழகராக உபய நாச்சியாரோடும் எழுந்தருளி யிருக்கின்றூர், என்கிறூர்கள். இவருக்கு வாரந்தோறும் புதன், சனிக் கிழமைகளில் மட்டுமே பூசனை நடக்கின்றது. இவர் பிறந்தது, புரட்டாசி விசாக நட்சத்திரமாகும். இப்பிறந்தநாளை யொட்டி அந்நாளிலில்லாது, ஐப்பசி மாதத்தில், இவருக்கு மூன்று தினங்கள் மாக்காப்பும், சந்தனக்காப்பும் சாத்தி வழிபடுகின்றனர்.

இக்கோயில் உற்சவ மூர்த்தியாம் சுந்தரராசன், திருவண்ணாமலைக் கோயில் உற்சவ மூர்த்தியாம் ஸ்ரீநிவாசப் பெருமாளோடு ஆண்டாள் கோயில் வெளிச்சுற்றின் வடமேற்கு மூலையிலுள்ள சிறுசந்நிதியில் எழுந்தருளியுள்ளார்.

*காட்டுத் தெய்வமான காட்டழகருக்குத் தோஷ நிவர்த்திக்காகவே வருடத்தில் சிலநாட்கள் மேற்கூறிய முறையில் பூசனை நடத்தப் படுகின்றது.*[3]

## ஆ. ஆழ்வார்கள்

ஆண்டாள் :

*ஆடிச் செவ்வாய் தேடிக்குளி;*
*அரைச்ச மஞ்சளைப் பூசிக்குளி.*

என்ற கிராம மக்களின் பழமொழி, பெண்டிர்க்குப் பெருஞ்சிறப்பினை நல்கும் ஆடித் திங்களின் பெருமையை அருமையாக அறிவிக்கின்றது. இத்தகு ஆடி மாதத்தின் சிறந்த நாளாகிய 'பூரம்' ஆண்டாளின் பிறந்த நாளாகும். இதனை,

*திருவாடிப் பூரத்தில் செகத்துதித்தாள் வாழியே.*[4]

என்ற பாடலடி பகரும்.

பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து அலமரும் ஆன்மாக்களைக் கரைசேர்க்கும் பெருமுயற்சியாகவே காத்தற் கடவுளாம் திருமாலின் பத்தவதாரங்களும் அமைகின்றன. இப்பெருமுயற்சியாலும் ஈடேறாத கலக மானிடப் பூச்சிகளைக் கடைத்தேற்றும் தொடர்முயற்சியாகவே, ஆண்டாளாக ஆடிப் பூரத்தில் பூதேவி அவதரித்தாள். இது கிணற்றில் விழுந்த குழந்தையை எடுக்கத் தானும் உடன்குதிக்கும் தாயின் நிலை போன்றதாகும். இத்தகு செயற்கருஞ் செயலால்தான், திருமகளிலும் நிலமகளே ஏற்றம் பெற்றவளாகின்றாள்.

*கோதை பிறந்தவூர்; கோவிந்தன் வாழுமூர்;*
*சோதி மணிமாடம் தோன்றுமூர்; -நீதியால்*
*நல்லபக்தர் வாழுமூர்; நான்மறைகள் ஓதுமூர்;*
*வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.*[5]

என்ற பல பெருமைகளுடன் விளங்குகின்ற திருவில்லி புத்தூரில், 'ஆடிப்பூரச் செவ்வாய்க் கிழமை'யில், திருத்துழாய்ச்

செடிகளுக்கிடையில், திருமகள் மணாளனை இறைவனுக்குப் பொங்கும் பரிவாலே பல்லாண்டிசைத்துப் பேறு பெற்ற பெரியாழ்வார் எடுத்து வளர்த்து ஏற்றம்பெறும் வண்ணம், நிலமகளே 'கோதை' என்ற திருநாமத்துடன் திருவவதாரம் செய்தார்.[6] அவருக்கு 'ஆண்டாள்' என்ற சிறப்புப் பெயரே, பிற்காலத்தில் நிலைபேறுடையதாயிற்று.

*அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்*
*பன்னு திருப்பாவை பல்பதியம்- இன்னிசையால்*

*பாடிக் கொடுத்தாள்நற்பாமாலைபூமாலை*

*சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.*[7] என்றும்

*சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே !* [8] என்றும்

திருப்பாவைத் தனியன்கள் செப்புவதால், இக்கோதை நாச்சியாருக்கு 'ஆண்டாள்' என்ற நாமத்தோடு, 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடி' என்ற பெயருமுண்டெனஅறிகிறோம். ஆண்டாளுக்குச் சூட்டிய மாலைகளையே நாடோறும் அரங்கற்குச் சூட்டுவதாகிய காலைப் பூசனை நிகழ்ச்சி, இக்கோயிலில் இன்றும் நடைபெறுகின்றது.

திருப்பாவை 30; நாச்சியார் திருமொழி 143 என 173 பாசுரங்கள் பாடிய பெருமைமிகு இவ்வாண்டாளுக்கு ஆடி 21 (5.8.80) தொடங்கி, ஆடி 29 (13.8.80) முடிய ஒன்பது நாள் திருவிழா எடுக்கின்றனர். இத்திருவிழாவின் முன்னிரண்டு, பின்மூன்று நாட்களிலும் திருவிழா நிகழ்ச்சிகள் உள்ளன. ஒன்பது திருநாட்களிலும் பிற்பகல் 5 மணியளவில் தொடங்கி நள்ளிரவுவரை பற்பல கலை நிகழ்ச்சிகள் நடத்தப் பெறுகின்றன.[9]

இத்திருவிழா, பிரமனாகிய படைத்தற் கடவுளால் ஏற்படுத்தப் பட்டது என்ற பொருளில் 'பிரமோற்சவம்' என்றும், பெரிய உயர்வான காரியங்கள் கொண்ட, 'மஹோத் சவம்' (மஹ: பெரிய; உத்: உயர்வான; ஸவ: சிருஷ்டி முதலான காரியங்கள்) என்றும் கூறப்படுகின்றது.[10]

கொடியேற்றத்துடன் தொடங்கிக் கொடியிறக்கத்துடன் முற்றுப்பெறும் இப்பெருந்திருவிழாவே, ஏனைய பிரமோற்ச வங்களிலும் மக்களிடையே சிறப்பினைப் பெற்றுள்ளது. இதனைக் கீழ்க்காணும் பட்டியலில் குறிக்கப்பட்டுள்ள 'சேவார்த்தி'களின் எண்ணிக்கை எடுத்துக் காட்டும்.

| எண் | முக்கிய திருவிழாக்கள் | மாதம் | சேவார்த்திகள் |
|---|---|---|---|
| 1. | ஆடித் திருவிழா-தேரோட்டம் | ஆடி | 30,000 |
| 2. | புரட்டாசி-சனிவார உற்சவம் | புரட்டாசி | 20,000 |
| 3. | எண்ணெய்க் காப்பு உற்சவம் | மார்கழி | 18,000 |
| 4. | பங்குனி-திருக்கலியாணம் | பங்குனி | 8,000 |

இத்திருவிழாவின் பொருட்டு, ஆண்டாள் சந்நிதி பந்தல் மண்டபத்திலிருந்து, சிங்கம்மாள் குறடு எனும் கோயில் முன்மண்டபத்தை நடுவணாக வைத்து, மாபெரும் கொட்டகை போடப்படுகின்றது. இரட்டையாகப் பிளந்த தென்னை மரக் கால்களை ஊன்றி அமைக்கப்பட்ட கொட்டகையின் உள்வாயில், மணிகளாலும் காகிதப் பூக்களாலும் கண்ணைக் கவரும் வண்ணம் செவ்வனே அழகுபடுத்தப் படுகிறது. மின்விளக்கலங்காரத்தால், மேலும் பொலிவு பெற்ற இக்கோதை கோயில், ஏறத்தாழ இந்திரபுரிபோல் கவினுற்றுத் திகழ்கின்றது. இவ்வலங்காரக் கொட்டகையில்தான், திருவிழாக் காலங்களில் மாலை வேளைகளில் சொற்பொழிவுகளும் இசை நிகழ்ச்சிகளும், கலைக் காட்சிகளும் நடைபெறுகின்றன. மேள, தாள, நாதஸ்வர இன்னிசை, பாட்டு, சங்கீதம் ஆகிய கச்சேரிகளையும், நாட்டிய நடன நிகழ்ச்சிகளையும், சொற்பொழிவுகளையும் நன்கொடையாளர் சிலர் கூட்டாகவோ, தனித்தோ ஏற்பாடு செய்கின்றனர். எஞ்சிய நிகழ்ச்சிகளைக் கோயில் நிருவாகம் ஏற்பாடு செய்கின்றது. திருவிழாக்கால மின்சாரச் செலவினையும், திரையரங்குகளில்'தேர்த்திருவிழா விளம்பர சிலேடு' காட்டுவதற்கான செலவினையும், திருவிழா அழைப்பிதழ், நிகழ்ச்சி நிரல் போன்ற பத்திரிகைகள் அச்சிடும் செலவினையும், கூடத் தெய்வத் திருப்பணி செய்ய விரும்பும் சில கொடைஞர்கள் ஏற்கின்றனர்.

அன்றாடப் பூசனை, பலிசாதித்தல் போன்ற வழக்கமான நடைமுறைகளுக்குப்பின் அங்கூரம், சேனைமுதல்வர் புறப்பாடு போன்ற பெருந்திருவிழாச் செயல்கள் நடந்தேற, அவற்றின் தொடர்ச்சியான கொடியேற்றம் முதல்திருநாளன்று காலை நடைபெறுகின்றது, (இந்நூல், பக். 112-115).

## முதல் திருநாள் :

நண்பகல் 12 மணி ஆராதனைக்குப்பின் பிற்பகல் 1 மணியளவில் தங்கத் தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற

ஆண்டாளும் மன்னரும் யாக சாலை சென்று, காப்புக் கட்டுதல் கண்டருளிய பின், 1.30 மணியளவில், சிங்கம்மாள் குறடு எனும் முதல்மண்டபம் சேர்கிறார்கள். திரு. ஏ. கிருஷ்ணசாமி அய்யங்கார் வகையறா; திரு. டி. சீனிவாச ராகவ ஐயங்கார், (வக்கீல் ; மதுரை) ஆகியோரின் உபய மண்டபம் நடைபெறுகிறது. ரூ. 1000/- செலவில் சுவாமிகளுக்கு அலங்காரத் திருமஞ்சனம், ஆராதனை நடந்து, குழுவழங்கலும் நடைபெறுகின்றது. அடுத்து, இரண்டாவது மண்டபம் எழுந்தருளுகின்றனர். அங்கு ரூ. 500/- வரை செலவு பிடிக்கும் நாங்குனேரி ஜீயர் (மடாதிபதி) சுவாமிகள் வானமாமலை உபய மண்டபம் நடக்கிறது. திருமஞ்சனம் – மலரலங்காரம்– தீபாராதனை நடைபெறுகின்றன. அரையரால் திருப்பல்லாண்டு இயல்தொடக்கமாக, பெரியாழ்வார் திருமொழி முதல்பத்தும், திருவாய்மொழி முதல்பத்தும் குழுவினரால் சேவையாகின்றன. இறுதியில் அரையரின் 'சாற்றுமுறை' நிகழ்கின்றது. இதனைச் 'சேவா காலம்' என்கின்றனர். பின்னர் துளசிச் சாற்றிலான தீர்த்தம் குழுவினர்க்கு வழங்கப் பெறுகின்றது. இதனைத் 'தீர்த்தக் கோஷ்டி' என்கின்றனர். நைவேத்தியம் குழுவழங்கல் (கோஷ்டி விநியோகம்) ஆனபின், ஆண்டாளும் மன்னரும் கருவறை எழுந்தருளுகின்றார்கள்.

இரவு 9.30 மணியளவில் ஆண்டாளும் மன்னரும் தங்கத் தோளுக்கினியானில் சேர்த்தியாக அலங்கார மாகின்றனர். மாட, கந்தாடை வீதிகளைக் கண்டருளியபின், பெருமாள் சந்நிதித் தெருவழியாகத் தெற்கு ரத வீதி போகுமிடத்தில் – கீழரத வீதி தெற்கு மூலையில், ஒருவரின் உபயத்தால் பனையோலைக் குருத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட 'பதினாறு வண்டிச் சப்பரம்' (16 சக்கரங்கள் கொண்ட சப்பர வடிவிலமைந்தது) என்ற திருத்தேருக்குச் சேர்த்தியாக எழுந்தருளுகின்றனர்; நான்கு ரத வீதிகளும் வலம் வருகின்றனர். இவ்வீதி வலத்தில், இயல்தொடக்கத்திற்குப்பின், முதல் திருவந்தாதியைக் குழுவினர் சேவிக்க, சந்நிதி வந்தடைந்ததும் 'சாற்றுமுறை' ஆகின்றது. கருவறைக்கு எழுந்தருளியதும் ஆண்டாள் மன்னருக்குத் திருவந்திக் காப்புச் செய்யப்படுகின்றது.

பிற்பகல் 5மணி தொடங்கி, சுவாமிகள் கருவறை வந்து சேரும் நள்ளிரவு வரை ஆண்டாள் கோயில் முன்மண்டபத்தில் பல்வேறு கலைநிகழ்ச்சிகள் நடந்துகொண்டிருக்கின்றன. இனி வருகின்ற ஏனைய எட்டுத் திருநாட்களிலும் இவ்வண்ணமே அனைத்து நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.

*பாசுரசேவையின் தொடக்கமாக 'இயல் தொடக்க'மும், முடிவாகச் 'சாற்றுமுறை'யும் அனைத்துத் திருநாட்களிலும் அரையரால் சேவிக்கப்படுகின்றன.*

## இரண்டாம் திருநாள் :

*நித்ய காலைப் பூசனை, பலிசாதித்தலுக்குப்பின், காலை 8.30 – மணிக்கு ஆண்டாளும் மன்னரும் தங்க, தந்தப் பல்லக்குகளில் தனித்தனியாக அலங்காரமாகி, திருமஞ்சனமில்லா ரூபாய் எழுபது வரை செலவு பிடிக்கும் திரு. வி.கே. ஸ்ரீனிவாசாசாரியார் விடாயாற்று மண்டபம் (2–8ஆம் திருநாள் முடிய இம்மண்டபம் உண்டு) எழுந்தருளி, மண்டபதாரர்க்கு மாலை, பரிவட்ட, சடாரி மரியாதையானவுடன், ஏனைய வீதிகளை வலம் வருகின்றார்கள். அது போழ்து, குழுவினரால் இரண்டாம் திருவந்தாதி சேவையாகின்றது. 11 மணியளவில் முதல்மண்டபம் எழுந்தருளுகின்றார்கள். நிலமானிய அக்தார் மாப்பிள்ளை அய்யங்கார் திரு. ஜி.. ஸ்ரீனிவாச அய்யங்கார் அவர்களிடமிருந்து அந்நிலங்களை அண்மையில் கரிசல்குளம் திரு. சுப்பையா (அரிசன்) அவர்களின் வகையறா நான்குபேர் விலைக்கு வாங்கியமையால், ரூ. 1000/- வரை செலவு செய்யும் இவர்களின் மண்டபப்படி நடைபெறுகின்றது. இது முடிய பிற்பகல் 4 மணி ஆகின்றது.*

*பின்னர் இரண்டாம் மண்டபம் எழுந்தருளுகின்றனர். மேல ரத வீதியிலுள்ள இம்மண்டபத்தை ரொக்க மானிய அக்தார் திரு. சுந்தர ராஜையங்கார் மறைவிற்குப்பின், வாரிசுப்படி, அவரின் மகன் திரு. நாராயண அய்யங்கார் ரூபாய் ஆயிரம் செலவில் நடத்துகின்றார். இவ்வுபயதாரர் தொடக்கத்தில், கோயிலுக்குக் கொடை செய்த ரொக்கப் பணத்திற்கு, அரசுக் கழிவாக (வட்டியாக)க் கோயில் நிருவாகம் மூலம், ஆண்டுதோறும் இவருக்கு ரொக்கப் பணம் தரப்படுகின்றது. அத்தோடு சிறிது பணம் சேர்த்துப்போட்டு இம்மண்டபச் செலவை ஏற்கிறார். இங்கு, பெரியாழ்வார் திருமொழி இரண்டாம் பத்து குழுவினரால் சேவையாகின்றது.*

*அங்கிருந்தபடியே, இரவு 9 மணியளவில் ஆண்டாள் சந்திர பிரபை வாகனத்திலும், மன்னர் சிங்க வாகனத்திலும் அலங்காரமாகி, சிறப்பு மேளதாள இசையுடன் நான்கு ரத வீதிகளும் வலம் வருகின்றார்கள். அதுபோழ்து, எஞ்சிய இரண்டாம் திருவந்தாதி சேவையாக, நள்ளிரவு 12 மணியளவில் கருவறை சேர்கின்றனர். எப்போதும்போல், திருவந்திக் காப்புச் செய்யப்பெறுகிறது.*

## மூன்றும் திருநாள் :

காலை நாட்பூசனை, பலிசாதிப்புக்குப்பின், 8.30 மணியளவில், ஆண்டாளும் மன்னரும் முறையே தங்க, தந்தப் பல்லக்குகளில் அலங்காரமாகின்றனர். விடாயாற்று மண்டபம் கண்டருளுகின்றனர். வீதிப்புறப்பாட்டில் மூன்றும் திருவந்தாதி சேவையாக, முதல் மண்டபமான விஞ்சிமூர் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் சொந்தச் சொத்து உபய மண்டபம் கண்டருள்கின்றனர். பெரியாழ்வார் திருமொழி மூன்றும் பத்தும், திருவாய்மொழி மூன்றும் பத்தும் சேவையாகின்றன. அடுத்து, பெரிய பெருமாள், கீழமாடவீதியில் நடத்தப்பெறும், தட்டாங்குளம் கோயில் நிலமனைத்திலும் முக்கால் பங்கு மானியமாகப் பெற்றுள்ள நாயக்கரொருவரும் கால்பங்கு பெற்றுள்ள செட்டியாரொருவரும் சேர்ந்து நடத்தும் விடாயாற்று மண்டபம் கண்டருளுகின்றனர். அடுத்து, இரண்டாம் மண்டபப்படியான, தேவஸ்தான பண்டிதர்கள் மண்டபப்படி எழுந்தருளுகிறார்கள்.

அங்கிருந்தபடியே, இரவு 10 மணியளவில், ஆண்டாள் பரங்கி நாற்காலி (தந்தக்குரிச்சி)யிலும், மன்னர் சிறியதிருவடி (ஆஞ்சநேயர்-அனுமார்) வாகனத்திலும் அலங்காரமாகி, எஞ்சியுள்ள மூன்றும் திருவந்தாதி சேவையுடன் நான்கு வீதிகளும் வலம்வந்து, மறுநாட்காலை 1 மணியளவில் சந்நிதி சேர்கின்றனர்.

## நான்காம் திருநாள் :

அன்றுடக் காலைப்பூசை, பலிசாதிப்பிற்குப்பின், 8.30மணிக்கு ஆண்டாளும் மன்னரும் தங்க, தந்தப் பல்லக்குகளில் அலங்காரமாகி, விடாயாற்று மண்டபம் கண்டு, முதல்மண்டபம் எழுந்தருளுகிறார்கள். அங்கு, தேவஸ்தான (கோயில்) தஸ்திக் (நிலப்பட்டாதாரர்கள்) மண்டபம் நடைபெறுகிறது. திரு. கோவிந்தசாமி நாயுடு, திரு. வைத்தியலிங்கத் தேவர், திரு. கருப்பையா (அரிசன்) ஆகிய மூவருமே தலைக்கு இவ்வளவு என வசூல் செய்து, ரூ. 500/-க்குக் குறையாத அளவு செலவு செய்து உபய மண்டபம் நடத்துகிறார்கள். பெரியாழ்வார் திருமொழி நான்காம் பத்தும், திருவாய்மொழி நான்காம் பத்தும் சேவையாகின்றன. நான்கு ரத வீதிகளும் சுற்றியபின், சிங்கம்மாள் புரம் தெருவிலுள்ள இரண்டாம் மண்டபம் வந்து சேருகின்றனர். கோயில் நிருவாகத்திடமிருந்து 20படி அரிசியினை அமுதுபடியாகப் பெற்ற அத்தெருவினர் ரூ. 1000/-வரை செலவு செய்து உபய மண்டபப்படி நடத்துகின்றனர்.

அங்கிருந்தபடியே, இரவு 8 மணியளவில் ஆண்டாள் சேஷ (பாம்பு) ஊர்தியிலும், மன்னர் கண்ணன் திருக்கோலத்துடன் கோவர்த்தன கிரியை ஏந்திய நிலையிலும் அலங்காரமாகி, இரவு 10 மணியளவில் புறப்பாடாகி, வீதி வலத்தில் நான்முகன் திருவந்தாதி சேவையாக, மறுநாட்காலை 2 மணியளவில் சந்நிதி வந்து சேர்கின்றனர்.

## ஐந்தாம் திருநாள் :

நித்திய காலைப்பூசனை, பலிசாதித்தலுக்குப்பின் 8.30 மணியளவில், மங்களா சாசனத்தின் பொருட்டு, பெரியாழ்வார் தோளுக்கினியானில் அலங்காரமாகி, சிங்கம்மாள் குறட்டுக்கு முன்னல் போடப்பட்ட கொட்டகைக்கு எழுந்தருளுகிறார். தலப்பெருமானான வடபெருங்கோயிலுடையாரும் தோளுக்கினியானில் அலங்காரமாகி அதே கொட்டகைக்கு வந்து சேர்கிறார். பட்டாச்சாரியார், சடாரி, மாலை, பரிவட்டம் முதலியவற்றைத் தாம்பாளத்தில் எழப்பண்ணிக்கொண்டு, பெரியாழ்வார் பக்கமாக வருகின்றார்; இறைவனின் பிரசாதமாக அம்மாலை, பரிவட்ட, சடாரியைப் பெரியாழ்வாருக்குச் சாற்றுகின்றார். அம்மரியாதையை ஏற்றுக்கொண்ட ஆழ்வார், சயனரை வலம் வருகிறார். அவ்வமயம் அரையர் 'திருப்பல்லாண்டு' பாசுரங்களைச் சேவிக்க, கற்பூரம் காட்டப் படுகின்றது. பெருமாளுக்குத் தேங்காயுடைத்து, வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பித்து, நைவேத்தியமான பின்னர், ஆழ்வாருக்கும் நைவேத்தியமாகின்றது; கற்பூரம் காட்டப் பெறுகின்றது. அதன் பின்னர், ஆண்டாள் சந்நிதிக்குச் சயனர் எழுந்தருளுகின்றார்.

இதுபோலவே, அடுத்தடுத்து ஸ்ரீநிவாசனும் சுந்தரராசனும் எழுந்தருளிவந்து, ஆழ்வாருக்கு 'மங்களா சாசனம்' செய்கிறார்கள்.

## மங்களா சாசனம் :

கருவறையிலிருந்து எழுந்தருளி வருகின்ற கடவுளர்கள், காத்திருந்த ஆழ்வார்களுக்கும் ஆசாரியர்களுக்கும் மங்களமான காட்சி தந்து, தம்முடைய மாலை, பரிவட்ட, சடாரிகளைப் பிரசாதமாகத் தந்தருளுகின்றனர். அம்மரியாதையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்ட அடியவர்கள், அக்கடவுளரை வலம்வந்து தொழுகின்றனர்; மங்களமாகத் தாம்பாடிய பாசுர சேவையாற்றுகின்றனர்.

இம்மங்களா சாசனத்தின் பொருட்டு, போக்குவரத்திற்காக ரூபாய் எழுநூற்றை ஆண்டாள்கோயில் நிருவாகத்திடமிருந்து பெற்றுக்கொண்ட 'திருத்தங்கல் அப்பன்', நான்காம் திருநாளன்று காலை 8 மணியளவில் கருவறையிலிருந்து புறப்பாடாகி, வருகின்ற வழிநெடுகிலும் பல்வேறு விடாயாற்று, உபய மண்டபங்கள் கண்டருளி, அன்றிரவு 8 மணியளவில் திருவில்லிபுத்தூர் சக்கரைக்குள மண்டபம் எழுந்தருளுகின்றார். இரவு முழுவதும் அங்குத் தங்கிய அப்பனை, காலை 10 மணியளவில், அழைத்துச் செல்வதற்காக, ஆண்டாள் கோயில் மேளதாள வாத்தியங்களோடும், யானை தாங்கிய பூச்சக்கரவானக் குடையோடும் கோயில் அலுவலர்கள் குழாத்துடன் நிருவாக அதிகாரி வருகின்றார். இராசாங்கத் திருக்கோலத்தோடு பல்லக்கில் புறப்பாடாகும் அப்பன், காலை 10.30 மணியளவில் ஆண்டாள் கோயில் முன்கொட்டகை எழுந்தருளுகிறார். அங்கு, ஆண்டாளுக்கும், பெரியாழ்வாருக்கும் 'மங்களா சாசனம்' செய்தபின், ஓய்வு பெறுதற்காக, வானமாமலை ஜீயர் சுவாமிகளின் விடாயாற்று மண்டபம் எழுந்தருளுகிறார். பகல் 11 மணிக்கு, கந்தாடைத் தெருவிலுள்ள ஸ்ரீரங்கம் கோயில் கந்தாடை வாதுல தேசிக அண்ணன் சுவாமிகள் மண்டபம் எழுந்தருளுகின்றார். அங்குத் 'திருப்பாவை' சேவையாகின்றது.

எப்போதும்போல் தங்க, தந்தப் பல்லக்குகளில் அலங்காரமாகிய ஆண்டாளும் மன்னரும் விடாயாற்று மண்டபம் கண்டருளி, முதல்மண்டபம் வந்து சேர்கிறார்கள். அங்கு, பத்து ஏக்கர் கோயில் நிலத்தை மானியமாகப் பெற்ற திரு. ஸ்ரீனிவாச பட்டர், திரு. கருப்பையாத் தேவர், திரு. சுப்புராம் நாயுடு ஆகியோர் ரூ. 1000/-க்குக் குறையாது செலவுசெய்யும் உபய மண்டபம் நடக்கிறது. அடுத்து, இரண்டாம் மண்டபமான ஊத்துமலை பரதேசி மண்டபம் எழுந்தருளுகின்றார்கள். அங்கு, திரு.எஸ்.டி. சோமசுந்தர பரதேசிகர் டிரஸ்ட் கட்டிட நன்கொடைத் தொகைக்கு அரசுக் கழிவாக (வட்டியாக)க் கிடைக்கும் ரூ. 2,700/-ல் ரூ. 1000/-க்குக் குறையாது செலவு செய்கின்றனர்.

பின்னர், கந்தாடை மண்டபம் எழுந்தருளிய இருவரும், பெரியாழ்வாருக்கு 'மங்களா சாசனம்' செய்கின்றார்கள். 'திருவிருத்தம்' சேவையாக, ஆண்டாள்-மன்னர், சிங்கம்மாள் குறட்டிற்கும், பெரியாழ்வார் ஆண்டாள் கோயிலுக்கும் எழுந்தருள்கின்றார்கள். இன்றைய நாட்பாட்டாகப் பெரியாழ்வார் திருமொழி ஐந்தாம் பத்தும் 'திருப்பாவை'யுடன் சேவையான பின்பே, ஆண்டாளும் மன்னரும் சந்நிதி எழுந்தருளுகின்றனர்.

பஞ்ச கருடசேவை :

ஐந்து கருட வாகனங்களில் தனித்தனியே ஐந்து பெருமாள்களும், பெரிய, சின்ன அன்ன வாகனங்களில் ஆண்டாளும் பெரியாழ்வாரும் அலங்காரமாகின்றனர். 'திருவிருத்த'இயலுடன் 'கருடசேவை' தொடங்கும் இவர்களின் திருமஞ்சன, மலரலங்காரச் செலவிற்காக, திருவில்லிபுத்தூர் திருமதி கே. சக்கரைத்தாயம்மாள், ரூ. 2000/-வரை உபயமாக்குகிறார். முதலில் ஆண்டாளும் மன்னரும் குடைவர வாசலுக்குள் எழுந்தருளுகின்றார்கள். அவர்களைப் பார்த்த-வண்ணம் வெளிப்புறமாகப் பெரியாழ்வார் எழுந்தருளுகிறார். அந்நிலையில், குடைவர வாசல் கதவு சாத்தித் திறக்கப் படுகின்றது. ஆண்டாளுக்கும் மன்னருக்கும் கற்பூரம் காட்டப் படுகின்றது. அதன் பின்னர், நிருவாக அதிகாரிக்கு அருச்சகர்கள் மலரும் துளசியும் கொடுத்தலாகிய மரியாதை செய்கின்றார்கள். பெரியகுடைகளுடன் மன்னர், ஆண்டாள், பெருமாள், ஸ்ரீநிவாசன், சுந்தரராசன், அப்பன் என்ற வரிசையில் ஒருவர்பின் ஒருவராக எழுந்தருள, எதிர்சேவித்த வண்ணம் பெரியாழ்வாரும் வீதிவலம் வருகின்றார். இக்காட்சி, கண்கொள்ளாக் கவின்மிகு காட்சியாய் அமைகின்றது. மக்கள், தேங்காயுடைத்து, வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பித்து, தொழுகை நடத்தி மகிழ்கின்றனர்.

மற்றுமொருமுறை, முன்போலவே பெரியாழ்வாருக்கு 'மங்களா சாசனம்' செய்து முடித்த பின்பே, சுவாமிகள் அவரவர்க்குரிய கருவறை சேர்கிறார்கள். ரூ. 500/- மதிப்புள்ள ஆண்டாளின் பட்டுப் புடவையையும், அவளின் மாலையையும் சன்மானமாகப் பெற்ற 'அப்பன்' மட்டும் பல்லக்கில் அலங்காரமாகி,

*தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்.*[12]

என்ற பூதத்தார் பாசுரத்தையும்,

*பேரானைக் குறுங்குடியெம் பெருமானை, திருத்தண்கா லூரானை.*[13]

போன்ற திருமங்கை யாழ்வாரின் பாசுரங்களையும் அரையரின் இசைச் சேவையாகப் பெற்று, 'பால போகம்' எனும் சிற்றுண்டியை முடித்த பிற்பாடு, காலை 9 மணியளவில் தன்னூர் நோக்கிப் புறப்பாடாகின்றார்.

*இங்கு, காலையில் நடைபெறும் மங்களா சாசனம் அனைத்துச் சுவாமிகளுக்கும் பெரியாழ்வார் நல்கும் வரவேற்பாகவும், இரவு மங்களா சாசனம் திருவிழா முடிவில் வழியனுப்ப விடைகொடுப்பதாகவும் அமைகின்றன எனக்கொள்ளலாம்.*

## ஆறும் திருநாள் :

*அன்றுடக் காலைப் பூசனை, பலிசாதிப்புக்குப் பின், 8.30 மணி அளவில், ஆண்டாளும் மன்னாரும் தங்க, தந்தப் பல்லக்குகளில் அலங்காரமாகி, விடாயாற்று மண்டபம் கண்டருள, 'திருவாசிரியம்', 'பெரிய திருவந்தாதி' சேவையுடன் முதல்மண்டபம் எழுந்தருளுகின்றார்கள். நிலமானிய அக்தார் திரு. ராமஸ்சுவாமி அய்யங்கார் வகையறுக்களிடமிருந்து ஓராண்டிற்குமுன் குட்டதட்டி கிராமத்திலுள்ள 12 ஏக்கர் நிலத்தையும் விலைக்கு வாங்கிய திரு.கருப்பையா அவர்களின் ஆயிரம் ரூபாய் செலவிலான குட்டதட்டி மண்டபப்படி அங்கு நடைபெறுகிறது. 'நாச்சியார் திருமொழி'யும் 'திருவாய்மொழி' ஆறும்பத்தும் சேவையாக, இரண்டாம் மண்டபம் எழுந்தருளுகின்றனர். இந்நாடகசாலைத் தெரு மண்டபத்தில் ரூ.1000/- வரை செலவு செய்யும் சொந்தப் பொறுப்பு உபயதாரரான திரு.டி.எஸ்.ஸ்ரீனிவாசய்யங்கார் வகையறு மண்டபம் நடைபெறுகின்றது.*

*பின்பு அங்கிருந்தபடியே, இரவு வாகனங்களான இருதண்டாயுதமுமில்லாமல் நான்குபேர் ஒரு கொம்பில் சுமப்பதான கனகதண்டியலில் ஆண்டாளும், யானை வாகனத்தில் மன்னாரும் பெரிய திருவந்தாதி சேவையுடன், நான்கு வீதிகளும் வலம் வந்து, கருவறை சேர்கின்றனர்.*

## ஏழாம் திருநாள் :

*அன்றுடக் காலைப்பூசனை, வெளிசாதிப்பிற்குப்பின், தங்கத் தோளுக்கினியானில் ஆண்டாளும் மன்னாரும் சேர்த்திப் புறப்பாடாகி, விடாயாற்று மண்டபம் கண்டருளி, 'சிறிய, பெரிய திருமடல்கள்' சேவையுடன் மாடவீதி, கந்தாடை வீதி வழியாக முதல்மண்டபம் எழுந்தருளுகின்றனர். அங்குக் கோயிற் செலவில் மண்டபப்படி முடித்து, சக்கரக்குள விடாயாற்று மண்டபம் கண்டருளியபின், மஞ்சப்பூத்தெரு, மேட்டுத் தெரு, கிருட்டிணன் கோயில் தெருக்களை வலம் வந்து, பிற்பகல் 2 மணியளவில் கிருட்டிணன் கோயில் சேர்கிறார்கள். இங்கு நிலமானியம் பெற்ற நாயக்கமார்களின், நல்லமார் திருமலாச்சாரியார் மண்டபப்படி நடைபெறுகின்றது.*

*அங்குள்ள சயன மண்டபத்திலேயே, மாலை 5*

மணியளவில் 'சயன சேவை' தொடங்குகிறார்கள். இதற்காக, ஆண்டாள் மடியில் மன்னார் சயனித்திருப்பதாக அலங்காரம் செய்கிறார்கள். இவர்களின் சேவையை இரவு 10 மணிவரை, பொதுமக்கள் கண்டு களிக்கிறார்கள். தேங்காயுடைத்து, வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பித்து, தூபதீபங்காட்டி, ஆராதனை செய்கின்றார்கள். இதனைப் 'பொதுஜன சேவை' என்கின்றனர்.

அங்கிருந்து, சேர்த்தியாக முன்போலவே அலங்காரமாகி மஞ்சள் நீராட்டுக் கண்டருளி, முளைப் பாலிகைக் கும்பம் வைத்துக் கடாட்சிப்பதாகிய 'சூர்ணைத் திருவிழா' முடித்து, இரவு சுமார் 10.15 மணியளவில் புறப்பாடாகி, 10.30 மணிக்கு மஞ்சப்பூத்தெரு நாயக்கர் விடாயாற்று மண்டபம் கண்டருளுகின்றனர்.

அங்கிருந்து, இரவு வாகனமாகிய கண்ணாடிச் சப்பரத்தில் இருவருமே சேர்த்தியாய் அலங்காரமாகி, 11 மணியளவில் முன்சீப் கோர்ட்டு முன்புள்ள தெற்கு ரத வீதி எழுந்தருள, 'திருச்சந்த விருத்த'மும் 'திருவாய்மொழி' ஏழாம்பத்தும் சேவையாகின்றன. கிளார்னட் இசையுடன் கூடிய மேளதாள முழக்கத்தோடு ஏனைய வீதிகளையும் வலம் வந்தபின், அதிகாலை 3 மணிவாக்கில், வடக்கு மாடவீதியிலுள்ள யானை மஹால் அடைகின்றனர். அங்கு நெல்லளவை கண்டபின் கருவறை சேர்கின்றனர்.

## எட்டாம் திருநாள் :

நித்ய காலைப்பூசனை, பலிசாதிப்பிற்குப்பின், வழக்கம்போல் தங்க, தந்தப் பல்லக்குகளில் ஆண்டாளும் மன்னாரும் அலங்காரமாகி விடாயாற்று மண்டபம் கண்டருளி, 'திருமடல்' சேவையுடன் முதல்மண்டபம் எழுந்தருளுகின்றனர். தேவ ஸ்தானம் வழங்கிய 40 படி அரிசியை அமுதுபடியாக ஏற்ற ஏழூர் நாயக்கர்கள், ரூ.1,000/- வரை ஊர்ப்பொதுவிலிருந்து உபயமாக்கிடும் மண்டபப்படி, அங்கு நடக்கிறது. சாயுங்காலம் 4 மணி அளவில் சக்கரக்குளத் தெருவிலுள்ள இரண்டாம் மண்டபம் எழுந்தருளுகின்றனர். அங்கு ரூ.1,000/- வரையில் செலவு செய்யும் பேயாழ்வார் சாரிட்டிஸ் தேவ ஸ்தான உபய மண்டபம் நடைபெறுகிறது. 'திருமாலை', 'திருப்பள்ளி யெழுச்சி', 'திருவாய்மொழி' எட்டாம்பத்து ஆகியன சேவையாகின்றன.

*அங்கிருந்து, உடுமலைப் பேட்டை ராஜலெக்ஷிமி ஸ்டோர் உரிமையாளரான திரு.யு.கே.திருவேங்கடம் அவர்களின் உபயத்தாலான மலர்ப்பல்லக்கு என்ற இரவு வாகனத்தில் ஆண்டாளும், குதிரை வாகனத்தில் மன்னரும் அலங்காரமாகி, 'பெரிய திருமொழி' சேவையுடன் நான்கு வீதிகளும் வலம் வந்து, வடக்குரத வீதியில் அழகு செண்டேறுகை-வையாளி சேவை நிகழ்த்தி, இரவு 12.30 -1.00 மணிக்குள் ரிஷப லக்கினத்தில் திருத்தேராகிய பெருந்தேரினைக் கடாட்சித்தபின் கருவறை சேர்கின்றூர்கள்.*

ஒன்பதாம் திருநாள்:- பெருந்தேர்த் திருவிழா(இந்நூல், பக். 110-115 ).

பத்தாம் திரு நாள் - முத்துக்குறி (இந்நூல், பக். 121-125 ).

*சப்தாபரணம் (இந்நூல், ப. 122) முடிந்தபின் அங்கிருந்து 'வெட்டிவேர்ச் சப்பரத்தில்' அலங்காரமாகிய ஆண்டாள் 'இராமாநுச நூற்றந்தாதி' இயலுடன் வீதிவலம் வந்து சந்நிதி சேர்ந்ததும், பரிசாரகர் இயல்சாற்றும், 'இராமாநுசமுடையார்' அருளிப்பாடுடன் குழுவழங்கலும் நடைபெற, கருவறை எழுந்தருளுகின்றூர்.*

பதினொன்றும் திருநாள் - தீர்த்த வாரி(இந்நூல், பக். 124-125 ).

பன்னிரண்டாம் திருநாள் - உற்சவ சாந்தி (இந்நூல், பக். 125 ).

பெரியாழ்வார்:

*பொங்கும் பரிவாலே இறைவனுக்குப் 'பல்லாண்டு' பாடி, ஏனைய ஆழ்வார்களின் பெரியவரான, பட்டர்பிரான், இப்பூமியில் வந்துதித்தது, நல்லானியில் சோதி நாளாகும். வில்லிபுத்தூரில், அந்தணர் வருணத்தில், முகுந்தபட்டருக்கும் பதுமவல்லிக்கும் இவர் அவதரித்தார். இவர் பிறந்தநாளைக் கொண்டாடும் முகமாகவே இப்பெருந்திருவிழா எடுக்கப்படுகின்றது.*

> *வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்*
> *தெய்வத்துள் வைக்கப் படும்.*

என்ற குறள் நெறியை உணர்த்தவே, கடவுளர்க்குப்போல் இவருக்கும் பெருந்திருவிழா எடுக்கின்றனர், எனலாம். இவ்வாழ்வார் 'திருப்பல்லாண்டு' 12; 'பெரியாழ்வார் திருமொழி' 437 எனப் பாசுரங்கள் பாடியவராவார்.

அங்கூரம் - மண்ணெடுத்தல் - முளையிடுதல் சேனைமுதல்வர் புறப்பாடு - கொடியேற்றுதல் முதலிய பெருந்திருவிழாச் செயல்கள் வழக்கம் போல் (இந்நூல், பக். 110–115) நடைபெறுகின்றன.

## முதல் திருநாள் :

தோளுக்கினியானில் அலங்காரமாகிய ஆழ்வார்முன், அவருடைய திருமொழி முதற்பத்தும், திருவாய்மொழி முதற்பத்தும் சேவையாக ரூ. 200/- வரை உபயமாகச் செலவு செய்யும் திரு. வி.கே. கிருஷ்ணமாச்சாரியார் மண்டபம் நடக்கிறது.

இரவு, தோளுக்கினியானில் அலங்காரமாகிய ஆழ்வார், இயல் குழுவினருடன் நான்கு வீதியும் வலம் வந்து சந்நிதி சேர்கிறார்.

ஏனைய ஒன்பது நாட்களும் காலை தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற ஆழ்வார், மண்டபங் கண்டருளி, வீதி வலம் வந்து, மக்களுக்கு அருள்பாலித்தபின், கருவறை சேர்கின்றார். அலங்காரமாகின்ற இரவு வாகனமும், எழுந்தருளும் மண்டபமும், கொள்ளுகின்ற கோலமும் சிற்சில நாட்களில் மாறுபடுவதறிகிறோம்.

| திரு நாள் | எழுந்தருளுவோர் | கொள்ளும் திருக்கோலம் | அலங்காரமாகும்-இரவு வாகனம் | நாட்பாட்டு (சேவையாகும் பாசுரங்கள்) | பகலில் எழுந்-தருளும் மண்டபம் |
|---|---|---|---|---|---|
| 2. | பெரியாழ்வார் | — | சந்திரப் பிரபை | பெரி.தி.மொ. 2ஆம் பத்து., தி.வா.மொ., 2ஆம் பத்து.,.......... | கோயில் நிருவாகம் |
| 3. | பெரியாழ்வார் | — | பரங்கி நாற்காலி (தந்தக் குரிச்சி) | பெரி.தி.மொ., 3ஆம் பத்து., தி.வா.மொ., 3ஆம் பத்து.,.......... | கோயில் நிருவாகம் |
| 4. | பெரியாழ்வார் | தாயான பெண்மை வடிவைக் காட்டும் ஆண்டாள் (இரவு) | ஆடும் பல்லக்கு .... | பெரி.தி.மொ., 4ஆம் பத்து., தி.வா.மொ. 4ஆம் பத்து.,.......... | கோயில் நிருவாகம் |
| 5. | பெரியாழ்வார் | — | அன்னம் | 'திருப்பாவை'.......... | |
| | பெருமாள் | — | கருடன் | தி.வா.மொ., 5ஆம் பத்து.,.......... | வானமாமலை ஜீயர் சுவாமிகள் |
| 5. | பெரியாழ்வார் | — | யானை | நாச்.தி.மொ., தி.வா.மொ., 6ஆம் பத்து.......... | கோயில் நிருவாகம் |
| 7. | பெரியாழ்வார் | தவழ்ந்த நிலையில் வெண்ணெய்த்தாழியை அணைத்தபடியுள்ள கண்ணன் (இரவு) | கனக தண்டியல் | நாச்.தி.மொ., தி.வா.மொ., 7ஆம் பத்து.,.......... | தெற்கு மாடத் தெரு திரு. வி.கே. ஸ்ரீனிவாசாச்சாரியார் |

அடுத்த பக்கம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| 8. | பெரியாழ்வார் | சங்கு சக்கரத்தோடு கூடிய பெரிய பெருமாள் (பகல்) | குதிரை ................ | திருமடல்-(வீதி) திருமாலை., தி.ப.எ., தி.வா.மொ., 8ஆம் பத்து.,........... | இராசபாளையம் சாலையிலுள்ள எல்லைக் கரை மண்டபம் (மூலக்கரை மண்டபம்) கோயில் நிருவாகம். |
| 9. | பெரியாழ்வார் | — | கோரதம் (காலை) .... | பெ.தி.மொ., 'அமல ஞதி பிரான்', தி.வா.மொ., 9ஆம் பத்து.,........... | கோயில் நிருவாகம். |
| 10. | பெரியாழ்வார் | — | தோளுக்கினியான் | எஞ்சிய தி.வா.மொ... | கோயில் நிருவாகம், |

சிறப்புச் செய்திகள் :

நான்காம் திருநாளன்று, இரவு, 'நல்லதோர் தாமரைப் பொய்கை' என்ற பெரியாழ்வாரின் பாசுரப்படி, ஆண்டாளை இழந்த நிலையில் அவரின் துயரந் தோய்ந்த நிலையை உருவில் கொணரும் வண்ணம், அவரை ஒரு தாயாக -பெண்மை- (ஆண்டாள்) வடிவாகவே அலங்காரம் செய்கின்றனர்.

ஐந்தாம் திருநாளன்று, அன்ன வாகனத்தில் எழுந்தருளும் ஆழ்வாரோடு, பெருமாள் கருட வாகனத்தில் எழுந்தருளி, 'கருடசேவை' செய்கின்றார்.

ஏழாம் திருநாளன்று, கும்பம் வைத்துக் கடாட்சிப்பதாகிய முளைப் பாலிகையைப் பெரியாழ்வாருக்குச் சாற்றும் 'சூர்ணத் திருவிழா' நடைபெறுகின்றது. அடுத்து, ஆழ்வார் 'நெல்லளவை' நிகழ்ச்சியைக் கண்டருள்கின்றார். இரவு கண்ணனின் பால லீலைகளைச் சிறப்பித்துப் பாடிய பெரியாழ்வாரின் பாசுர மேன்மைகளை மக்களுக்கு உணர்த்துமுகமாக, ஆழ்வாருக்குக் கண்ணன் திருக்கோலத்தை அலங்காரமாக்குகின்றனர்.

எட்டாம் திருநாளன்று, 'இறைநிலையை எய்தும் பக்குவத்தைப் பெற்றவர் ஆழ்வார்' என்பதைக் காட்டும்பொருட்டு, அவரைப் 'பெரிய பெருமாள்' கோலம் பூணச் செய்கின்றனர்.

அன்றிரவு ஏனைய கடவுளரைப் போலவே மேளதாள முழக்குடன் அவரை 'வையாளி' காணச் செய்கின்றனர்.

ஒன்பதாம் நாள் காலை கடவுளரைப் போலவே ஆழ்வார் 'கோரதப்பவனி'யாகின்றார். பத்தாம் திருநாள், ஆழ்வார் பிறந்தநாள் நட்சத்திரமாதலால், அன்று காலை அலங்காரத் திருமஞ்சனம், மலரலங்காரம், ஆராதனை ஆனபின், ஆண்டாள் - மன்னாரிடமும், பெரியபெருமாளிடம் 'மங்களா சாசனம்' பெறுகின்றார். இரவு தோளுக்கினியானில் புறப்பாடாகி வீதி வலம் வந்து, பிராகார வழியாகச் சந்நிதி எழுந்தருளுகின்றார். அருச்சகரின் ஆசீர்வாத சேவைக்குப்பின் தீர்த்தம் குழு வழங்கலாகின்றது; கொடி இறக்கப்படுகின்றது.

பதினோராம் நாள் :- காலை - சந்தபொடித் திருவிழா (இந்நூல், ப. 69).

- சப்தா பரணம் (இந்நூல், ப. 122)

முடிந்த பின், அங்கிருந்து 'வெட்டிவேர்ச் சப்பரத்தில் அலங்காரமாகிய பெருமாளும் ஆழ்வாரும் 'இராமாநுச நூற்றந்தாதி' இயலுடன் வீதிவலம் வந்து, சந்நிதி எழுந்தருளியதும், பரிசாரகர்கள் இயல்சாத்து சேவிக்கின்றனர். 'இராமாநுசமுடையார்' (எம்பெரு மானுர் அடியார் குழாம்) என்ற அருளிப்பாடுடன் குழு வழங்கலாகின்றது.

பன்னிரண்டாம் நாள் : தீர்த்த வாரி (இந்நூல்,பக். 124-125).

இத்திருவிழாவின்போது, ஆண்டாளிடம் ஆழ்வார் மங்களா சாசனம் பெறுவது,

> தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லாம் இனிது.[15]

என்ற குறள் நெறியைச் சுட்டுதல் காண்கிறோம்.

## ஆழ்வார்கள் பதின்மர் :

இப்பகுதியில் 'இரட்டையாழ்வார்கள்' தவிர்த்து எஞ்சிய ஆழ்வார்கள் பதின்மரின் பிறந்தநாள் திருவிழாக்கள் இடம் பெறுகின்றன.

பிறந்தநாளைக் கொண்டாடுவோர் அதனைப் பிறருக்கு அறிவித்து மகிழ்வதும், அதனை அறிந்த உற்றாரும், உறவினரும், பெரியோரும், நண்பர்களும் மனதார வாழ்த்தி, அவர்களுக்குப் 'பல்லாண்டு' பகர்வதும் இன்றைய நடைமுறையாம். பிறந்தநாளை அறியாதவர்களையும் அறிந்தும் கொண்டாட வழிவகை இல்லாதவர்களையும் மக்களிடையே நாம் காண இயலும். இவ்வுலகியலைத் தழுவி, நாம் வணங்கும் தெய்வங்கட்கும், அத்தெய்வங்கட்குத் தொண்டாற்றியே தெய்வநிலையுற்ற அடியவர்கட்கும் பிறந்தநாள் விழா எடுக்கின்றோம். தனது பிறந்தநாளைக் கொண்டாட வசதிவாய்ப்பற்றோரும் இவ்விழாக்களைக் கண்டு மகிழ்ந்து, மனநிறைவு எய்துவதறிகின்றோம்.

## நம்மாழ்வார் :

ஆழ்வார் திருநகரி என வழங்கும் திருக்குருகூரில், காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் அவதரித்த ஸ்ரீ சடகோபர் என்ற இவருக்கு மாறன், பராங்குசன், காரிமாறன், வைணவ குலபதி என்ற திருப்பெயர்களுமுண்டு. ஆழ்வார்களுள் தலைமையும், பெருமையும் உடையவராதலால், நம்மாழ்வார்' என்ற திருநாமம் இவருக்குச் சிறப்பாக

உரியதாயிற்று. திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய இவரின் திவ்வியப் பிரபந்தங்களைத் 'தமிழ்மறை' என்று கூறுவர். இவருடைய பிறந்தநாளை,

*சீராரும் வேதம் தமிழ்செய்த மெய்யனெழில்*
*குருகை நாதன் அவதரித்த ....... ஏரார்*
*வைகாசி விசாகம்.*

என்று உபதேசரத்தினமாலை கூறுகின்றது.

இந்நாளுக்கு முன்னுள்ள ஒன்பது நாட்களும் நம்மாழ்வாரின் சந்நிதியில் அரையரால் இயல்தொடக்கமான நாலாயிர திவ்வியப் பிரபந்தம் குழுவினரால் சேவிக்கப் படுகின்றது. பத்தாம் நாளான இவர் பிறந்தநாளில், இவர் காலைத் திருமஞ்சனத்திற்குப் பிறகு தோளுக்கினியானில் அலங்காரமாகி அன்றைய திவ்வியப் பிரபந்தச் சேவையோடு வீதி வலம் வருகின்றார். வாழைக்குளத் தெருவில் தேவ ஸதான மண்டபம் கண்டருளியபின், ஆண்டாள் கோயில் சேர்கின்றார். அங்கு ஆண்டாளும் மன்னாரும் ஆழ்வாருக்கு 'மங்களா சாசனம்' செய்கின்றனர். அடுத்து, சயனர் சந்நிதியில் பெருமாள் அவருக்கு 'மங்களா சாசனம்' செய்தருள்கின்றார்.

எஞ்சியுள்ள மூன்றாவதாயிரத் திவ்வியப் பாசுரங்களாம் இயற்பாக்கள் பதினோராம் நாள் சேவையாகின்றன.

*இக்கோயிலுக்கு உரியவரல்லாத நம்மாழ்வாருக்குப் பத்துநாள் திருவிழாக்கள் எடுக்கப் பெறுவதும் திவ்வியப் பிரபந்தம் முழுவதும் இத்திருநாட்களில் சேவிக்கப் பெறுவதும், 'அவயவங்களாம் ஏனைய ஆழ்வார்கட்கெல்லாம் இவர்தான் அவயவி' என்ற உண்மையை உணர்த்துவதற்கே எனலாம்.*

## திருமங்கை யாழ்வார் :

இவர், சோழமண்டலம் ஆலிநாட்டைச் சேர்ந்த திருக்குறையலூரிலே கள்ளர் குலத்தில் தோன்றியவராவார். இவர், ஆலி நாட்டிற்கும் திருமங்கை, குறையல் என்ற நகரங்கட்கும் அரசர். 'நீலன்' என்ற இயற்பெயர் கொண்ட இவருக்கு, 'நாலுகவிப் பெருமாள்', 'பரகாலர்', 'கலியன்' என்ற பிறநாமங்களும் உண்டு. இவருடைய துணைவியராய்க் 'குமுதவல்லி' என்பார் திகழ்ந்தார். பாகவதர்களை ஆராதிப்பதில் தமது செல்வமனைத்தையும் செலவிட்ட இப்பெரியார்,தொடர்ந்து ஆராதனை செய்தற்குப் பணமின்மையால் களவுத் தொழிலை மேற்கொண்டார். அதுபோழ்து, இறைவனால் மந்திர உபதேசம்

பெற்று, பணிகொள்ளப் பட்டார். 'திருமால்' கோயில் கொண்டுள்ள திவ்விய தேசங்களெல்லாம் சென்று வணங்கிப் பதிகங்கள் பல பாடினூர். இவர் அருளிச் செய்த பிரபந்தங்களான பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டகம், திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய, பெரிய திருமடல்கள் ஆகிய ஆறும் நம்மாழ்வார் பணித்த தமிழ்மறை நான்கிற்கும் ஆறுஅங்கங்கள் ஆமென்பர். இவரின் பிறந்த நன்னுளை,

> வாய்த்தபுகழ் மங்கையர் கோன்மா நிலத்தில்
> வந்துதித்த கார்த்திகையில் கார்த்திகை நாள்.

என்று உபதேச ரத்தின மாலை உரைக்கின்றது. அத்திருநாளையொட்டி, நம்மாழ்வாரைப் போன்றே பத்துநாட்கள் இவருக்கும் பிறந்தநாள் விழா எடுக்கின்றனர்.

## தொண்டரடிப்பொடி யாழ்வார்:

இவர், சோழநாட்டுத் 'திருமண்டங்குடி' எனும் ஊரில், அந்தணர் வருணத்தில் அவதரித்தார். 'விப்ர நாராயணர், என்ற இயற்பெயருடைய இவர், திருநந்தவனக் கைங்கர்யத்தை மேற்கொண்டு திருவரங்கத்தில் வாழ்ந்து வந்தார். 'தேவதேவி' என்ற ஒரு தேவதாசியினுல் மயக்குண்ட இவர், அரங்கநாதனருளால் விடுபட்டு உயர்வு பெற்றுர்.

> தொண்டர் சேவடிச் செழுஞ்சேறுஎன் சென்னிக்கு
> அணிவனே.

என்பதற்கு இலக்கணமாய்த் திகழ்ந்ததால், 'தொண்டரடிப்பொடி யாழ்வார்' என்ற திருநாமம் பெற்றுர். 105 ஆண்டுகள் வாழ்ந்த இவர், யமன் முதலானேர் தலையிலே அடியையிட்டு, ஸ்ரீவைணவர்கள் அடியிலே தலையையிட்டுப் போந்தவராம். 'திருமாலை'யும், இக்கோயிலில் மார்கழி மாதத்தில் இறைவனைத் துயிலெழுப்புதற்குச் சேவையாகின்ற சிறப்புமிகு 'திருப்பள்ளி யெழுச்சி'யும், இவரருளியனவாம். இவருக்கு, இவர் அவதரித்த மார்கழி 'கேட்டை' நட்சத்திர நாளன்று மட்டும் பிறந்தநாள் விழா எடுக்கின்றனர்.

அன்று காலை, திருமஞ்சனமாகி, தோளுக்கினியானில் அலங்காரமாகின்றுர். ஆராதனைக்குப்பின், ஆண்டாள் கோயிலுக்கு எழுந்தருளி, ஆண்டாள் மன்னுரிடம் 'மங்களா சாசன'மாகி, மாடவீதி, கந்தாடை வீதி சுற்றி வந்து, சயனர் சந்நிதியில் பெருமாளிடம் 'மங்களா சாசன'மாகின்றுர்.

அதன்பின்பே, இவர் தங்கியிருக்கும் பெரியாழ்வார் சந்நிதி சேர்கின்றார்.

## பொய்கையார்-பூதத்தார் - பேயார் :

'முதலாழ்வார் மூவர்' எனப்படும் இவர்கள் முறையே, காஞ்சியில் தாமரையிலும், மல்லையில் குருக்கத்தியிலும், மயிலாப்பூரில் செவ்வல்லியிலும் அவதரித்தவராவர். துறவறம் பூண்ட இவர்களில் பொய்கையார், பூமியாகிய தகழியில், கடல்நீரை நெய்யாகக் கொண்டு, சூரியனை விளக்காக ஏற்ற, பூதத்தார், அன்பாகிய தகழியில், ஆர்வத்தை நெய்யாகக் கொண்டு, சிந்தையாகிய திரியில் ஞான விளக்கேற்ற, அவ்வொளியில், 'திருமாலை'க் கண்ட பேயார், 'திருக்கண்டேன்' எனப் பாடலானார். இவர்களின் பாடற்றொகுதிகள் முறையே முதல், இரண்டாம், மூன்றும் திருவந்தாதிகள் எனப்பெயர் பெற்றன. முறையே 'ஐப்பசியில் ஓணம், அவிட்டம், சதயம்' இவற்றில் அவதரித்த இவர்கட்கு, அந்தந்த நாளில் மட்டும் தொண்டரடிப்பொடி ஆழ்வாரைப் போன்றே பிறந்தநாள் விழா கொண்டாடப் படுகின்றது.

## திருமழிசை யாழ்வார் :

தொண்டை நாட்டுத் 'திருமழிசை' என்ற ஊரில் அவதரித்த இவருக்குப் 'பத்தி சாரர்' என்ற பெயருமுண்டு, பல சமயங்களை ஆய்ந்து முடிவில், 'நாராயணனே பரம்பொருள்' என்று தெரிவித்தவர். அப்பரமனையே தியானித்துப் பலகாலம் திருவல்லிக்கேணி, கும்பகோணம் முதலிய தலங்களில் யோகத்திலிருந்தவர். அக்காலத்தே வியத்தகு நிகழ்ச்சிகள் பல நடந்தன என்பர். முதலாழ்வார்களே இவரைக் காணவந்த பெருமைமிக்கவர். கும்பகோண யோகத்தின்போது, நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் என்னுமிரு பிரபந்தங்களைப் பாடினார் என்பர்.

இவருக்கும் முன்னவரைப் போலவே, இவர் அவதாரஞ் செய்த தை-மகத்தில் மட்டும் பிறந்த நாள் விழாக் காண்கின்றனர்.

## மதுரகவியாழ்வார் :

இவர், திருக்குருகூர்க்கு அண்மையிலுள்ள 'திருக்கோளூரில் அந்தணர் குலத்தில் அவதரித்தவராவார். செவிக்கினிய செஞ்சொற் கவிபாட வல்லவரென்பதறிந்தே 'மதுரகவிகள்' எனப் பெயரிட்டனர்போலும். வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்து, அயோத்தியில் இருந்தவேளை, ஒருநாளிரவு தெற்கே தெரிந்த பேரொளியைக் கண்டு,

வியப்புற்று, நேரில் சென்று பார்க்க விரும்பித் திருக்குருகூரை அடைந்தார். அங்குத் திருப்புளியின் கீழ் எழுந்தருளி யிருந்த ஒளியாகிய நம்மாழ்வாரைக் கண்டார். அவர்நிலையை அறிய விரும்பி, "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவ, அவ்வாழ்வாரோ, "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்றிறுத்த விடையைக் கேட்டு, அவரையே ஆசாரியராகக் கொண்டார். ஆழ்வாரும் இவரை அடிமை கொள்ள அவர் சம்பந்தமாகக் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' எனப் பெயர்பெறும் பிரபந்தம் ஒன்று செய்தார். இவருக்கும், "சீராரும் சித்திரையில் சித்திரை" நட்சத்திரமான இவரின் பிறந்தநாளில் மட்டும் விழா எடுக்கின்றனர்.

## குலசேகராழ்வார் :

இவர், சேரநாட்டுத் திருவஞ்சைக் களத்தில், அரசர் குலத்தில் அவதரித்தார். பெருமாளாகிய இராமனின் இன்ப, துன்பங்களைத் தமது சுக, துக்கங்களாக நினைத்தவராதலின் 'பெருமாள்' என்ற பெயரும் இவருக்கு வழங்கலாயிற்று.

> நின்கோவிலின் வாயில். அடியாரும் வானவரும்
> அரம்பையரும்
> கிடந்தியங்கும். படியாய்க் கிடந்துவுன் பவளவாய்
> காண்பேனே.[16]

என்ற அவரின் வேண்டுதலின்படி, வைணவக் கோயிலனைத்தின் உள்வாயிற்படி, 'குலசேகரன்படி' என்று வழங்கப் பெறுகின்றது. இக்கோயிலில் 'குலசேகரன்' என்ற அருளிப்பாடுடனேயே சொர்க்க வாசல் திறக்கப் படுவதறிகின்றோம். பக்தியின் முதிர்ச்சியால், அரசு துறந்த இவர் அருளியதே 'பெருமாள் திருமொழி' ஆகும்.

நல்லவர்கள் கொண்டாடும் மாசிப் புனர்பூசமான இவரின் பிறந்தநாள் திருநட்சத்திரத்தன்று மட்டும் இவருக்குத் திருவிழாக் காண்கின்றனர்.

## திருப்பாணாழ்வார்:

இவர், சோழநாட்டு உறையூரிலே, பாணர் மரபில் தோன்றியவராவார். 'பாணர்' என்ற இயற்பெயருடைய இவர், தமது குலத்தாழ்ச்சி கருதி, திருவரங்கம் பெரிய கோயிலை மிதித்தற்கஞ்சிக் காவிரியின் இக்கரையிலே நின்றுகொண்டு, அரங்கனுள்ள திசைநோக்கி, யாழிசைத்துச் செஞ்சொற் கவிதைகளைப் பக்திப் பரவசத்தோடு மெய்மறந்து பாடி வருவாராதலின் 'பாண்பெருமாள்' எனப்பட்டார்.

இவரை, லோகசாரங்க முனிவரின் தோளிலேற்றி ஆற்றைக் கடந்து தம் பக்கம் கொணர்ந்த இறைவன், பாதாதி கேசமாகத் தம்மை அனுபவிக்க விடுத்து, அவ்வனுபவத்தை "அமல னுதி பிரான்" எனத் தொடங்கிப் பாடி உவகை யடையச் செய்தான். அவருடைய திருமேனியோடே அங்கீகரித்தருள, ஆழ்வாரும், அனைவரும் காண, அணியரங்கன் அடியிணைகளை அடைந்து விட்டார்.

இவருக்கும் இவர் அவதரித்த கார்த்திகை-உரோகிணி நாள் மட்டும் பிறந்தநாள் விழா எடுக்கின்றனர்.

கருடாழ்வார் :

பறவைகளுக்கு அரசன் என்று கருடனைப் புராணங்கள் புகலுகின்றன. மிகுந்த பலமுள்ள இவரைக் காசிப முனிவருக்கும் வினதைக்கும் பிறந்தவர் என்கின்றனர். இவர், திருமாலின் வேண்டுகோளை ஏற்று, அவருக்கு ஊர்தியாகவும் கொடியாகவும் அமைந்து, 'பெரிய திருவடி' எனப்படும் பேறு பெற்றார். விட்ணுவின் ஆணையை ஏற்று, பாற்கடலைக் கடைந்தபோது மந்திர மலையை ஏந்தி நின்றவர் இவரே என்கின்றனர்.

இத்தகு ஏற்றமுடைய இவரின் பிறந்தநாள் நட்சத்திரம் ஆடித் திங்கள் சுவாதியாகும். அந்நாளைக் கொண்டாடும் பொருட்டு, ஆண்டாள் சந்நிதி வடகிழக்கு மூலைக் கோயிலான கருடாழ்வார் கோயிலிலுள்ள மூலக் கருடாழ்வாருக்குச் சந்தனம் சார்த்தி, மலர்ச் சட்டையிட்டு அலங்காரம் செய்தபின், தேங்காய் விடல்கள் எறிந்து, தொழுகை நடத்துகின்றனர்.

பெற்ற அன்னையின் விடுதலைக்காக, விண்ணகம் சென்று, வானவரை வென்று, மண்ணகத்திற்கு வந்தபோது 'அமுத கலசங்கள்' கொணர்ந்ததை நினைவுகூரும் முகமாக, அரிசியை இடித்து எடுக்கப்பட்ட மாவோடு, வேகவைத்த பாசிப் பருப்பினையும், வெல்லம், முந்திரி, ஏலம் ஆகியவற்றைக் கலந்து செய்வதாகிய 'கொளுக்கட்டை' எனப்படும் 'அமிர்த கலசம்' அந்நாளில் அவருக்குப் படைக்கப் படுகின்றது. இறுதியில், தேங்காய்ச் சில்லுடன் அவ்வமிர்த கலசம் குழுவினர்க்கு வழங்கப் படுகின்றது.

## இ. ஆசாரியர்கள்

*இக்கோயில் திருவிழா நிகழ்ச்சிகளில் பங்கேற்பவர்களாக இராமாநுசர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் என்ற மூன்ருசாரியர்களே இலங்குகின்ருர்கள். எனவே, வர்கட்கு இக்கோயிலில் வெகு சிறப்பாகப் பத்துநாள் திருவிழாக்கள் எடுக்கின்ருர்கள்.*

இராமாநுசர் :

*1017ஆம் ஆண்டு தோன்றி 1137ஆம் ஆண்டு வரை வாழ்ந்த இவர், சென்னையை யடுத்த ஸ்ரீபெரும்புதூரில், ஆசூரி கேசவப் பெருமாளுக்கும் காந்திமதிக்கும் பிறந்தார். இவரிடம் இலட்சுமணனைப் போன்ற இலட்சணங்களைக் கண்டதால், 'இராமாநுசர்' எனப் பெயரிட்டனர். மணமான பின்பே துறவறம் ஏற்ற இவர், திருக்கோட்டியூர் நம்பியிடம் உபதேசம் பெற்ருர். அதை யாரிடமும் கூறக்கூடாது என்று கூறிய குருவின் ஆணையை மீறி, 'தான் நரகம் புகினும் குவலயத்தார் உய்வுற வேண்டும்' என்ற உயரிய நோக்கால், அதனை அனைவருக்கும் அறிவித்தார். முதலில் வெகுண்டு, பின்பு தெளிவுற்ற குரு, மகிழ்வுற்று இவருக்கு 'உடையவர்' என்ற பெயரீந்தார். பிரம சூத்திரங்களுக்குப் பாடியம் எழுதியதால், 'பாஷ்யகாரர்' எனப்பட்டார். இவர் இத்தலத்திற்கு எழுந்தருளியபோது, 'நூறுதடா அக்கார அடிசிலை, மாலிருஞ்சோலை மணாளருக்குப் படைத்த தன் 'அண்ணு' வருகிருர்' என்று ஆண்டாள், தன் அர்ச்சாவதார சமாதி கடந்து, ஏழடி முன்வந்து எதிர்கொண்டழைத்தாள்; எனவே, அதுமுதல் 'கோயிலண்ணன்' என்று கூறப் பட்டார். 'எம்பெருமானுர்', 'இளையாழ்வார்', 'திருப்பாவை ஜீயர்' என்ற பெயர்களும் இவருக்குண்டு. தீண்டாதோரையும் கோயிலுக்குள் புகவிட்டு, வைணவ சமய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட இவர், தலைமைக் கோயிலாம் ஸ்ரீரங்கம் பெரிய கோயிலின் வழிபாட்டு முறைகளை வகுத்துக் கொடுத்தவர். இவர் வகுத்த முறைகளைப் பின்பற்றியே நாடெங்கிலுமுள்ள வைணவக் கோயில்களில் வழிபாடுகள் நடைபெறுகின்றன. 'இராமானுசரின் பெருமை பெற்ற ஆணையானது மேல்மேலும் பெருகட்டும்' என்ற கவியை எல்லா ஆலயங்களிலும் சொல்லி வருவதே அவரின் சிறப்பினை அவனிக் குணர்த்தும். இவருக்கு வைணவத் தலங்கள்தோறும் கோயிலமைத்து வழிபடுகின்றனர்.*

"சித்திரையில் செய்ய திருவாதிரை" யான இவரின் பிறந்த நாளுக்கு முன்னென்பது நாட்கள் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களில் பெரும் பகுதி இவருடைய சந்நிதியிலேயே சேவையாகிட,

> *ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாட்களிலும்*
> *வாழ்வான நாள்.*

எனக்கொண்டு, நாற்றிசையும் கொண்டாடும் இவர் பிறந்த நாளன்று (பத்தாம்நாள்), இவருக்குத் திருமஞ்சனம் செய்து, நகையணி பூட்டி, பூமாலை சாற்றிப் பூசனை செய்தபின், நைவேத்தியம் படைக்கின்றனர். பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்களில் சிறப்பானவற்றைச் சேவித்து, திருவரங்கத் தமுதனுர் அருளிச் செய்த, 'இராமாநுச நூற்றந்தாதி' என்ற பிரபந்தத்தை அந்தணர்கள் முன்னுல் பாடிக் கொண்டே செல்ல, தோளுக்கினியானில் எழுந்தருளிய உடையவர், அதனைச் செவிமடுத்துக் கேட்டுக் கொண்டே பின்னுல் வருகின்ருர். இவ்வாறே வாழைக்குளத் தெரு சென்று, தேவ ஸ்தான மண்டபம் எழுந்தருளி, திருமஞ்சனம் முடித்து, ஆண்டாள் கோயில் சென்று, ஆண்டாள் மன்னுரிடம் 'மங்களா சாசனம்' ஆகி, சயனர் கோயில் சென்று திருமகள், பூமகளுடனிருக்கும் பெருமாளிடம் 'மங்களா சாசனம்' ஆகிக் கருவறை சேர்கின்ருர்.

## வேதாந்த தேசிகர் :

இவர், அனந்தசூரிக்கும் தோதாரம்பையாருக்கும் காஞ்சியின் ஒருபாகமான, 'துப்புல்' என்ற இடத்தில் அவதரித்தவர். தமிழுக்கு உயர்ந்த பெருமையளித்து, அது வடமொழிக்கு எவ்வகையிலும் தாழ்ந்ததில்லை என்றும், நா.தி.பி. வடமொழி வேதத்தைப் போன்ற ஒரு வேதமே என்றும் பல நூல்களால் நிலைநாட்டிய பெருமை இவருக்குண்டு; பிறமதத்தினர் ஏற்படுத்திய தடையுடைத்துக் கோயில்களில் பிரபந்த சேவா காலம் செய்வதைப் பாதுகாத்தவர்; இல்லறத்தவராய் நூறு வயதிற்கும் மேல் வாழ்ந்தவராவார். பொதுவாகத் 'தேசிகன்' என்ற சொல் 'ஆசாரியன்' எனும் பொருள்படுமாயினும், இவர் தோன்றிய பிறகு, இவருக்கேயுரிய சொல்லாக அஃது அமைந்துவிட்டது.

இவர் பிறந்த 'புரட்டாசி திருவோண'த்தைப் பத்தாவது நாளாகக் கொண்டு, இவருக்குப் பிறந்தநாள், இவரைப் பின்பற்றக்கூடிய வடகலை ஆதரவாளர்களான வேதாந்த தேசிகர் சபையினரால் கொண்டாடப் படுகின்றது. பத்தாம்

நாளாம் பிறந்த நாளன்று, தோளுக்கினியானில் அலங்கார மாகின்ற தேசிகர், ஆண்டாள்–மன்னாரிடமும் பெரிய பெருமாளிடமும் 'மங்களா சாசனம்' பெற்று மகிழ்கின்றார். இதற்காக இவரின் சபையினர் ஒருசிறு தொகையை 'மங்களா சாசனக் கட்டணமாக' ஆண்டாள்கோயில் நிருவாகத்துக்கு வழங்குகின்றனர்.

## மணவாள மாமுனிகள் :

நம்மாழ்வார், இராமாநுசர், மணவாள மாமுனிகள் ஆகிய மூவரையும் 'ஓம்' எனும் மந்திரத்திற்கு ஒப்பானவர்கள் என்பர். இதிலடங்கிய அகாரம் ஆழ்வாரையும், உகாரம் உடையவரையும், மகாரம் மணவாள மாமுனிகளையும் உறைபொருளாகக் கொண்டதென்பர். ஆழ்வார் திருநகரியில், தாசரண்ணரின் மகனாகத் தோன்றிய இவரின் பிள்ளைத் திருநாமம் அழகிய மணவாளன். இல்வாழ்வு ஏற்ற இவர், ஆசிரியராகவும் துறவியாகவும் விளங்கிய காலத்து இவரை மணவாள மாமுனிகள் என்றும், அழகிய மணவாள ஜீயர் என்றும், ஜீயர் என்றும் அழைத்தனர். இவருடைய எட்டுச் சீடர்களில் தலைசிறந்தவர் வானமாமலை ஜீயர். கோயில்களில் திவ்வியப் பிரபந்தங்களை ஓதும்போது, இவரியற்றிய சுலோகத்தோடு தொடங்கி, 'மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்ற வாசகத்தோடு முடிப்பதே இவரின் பெருமை யுணர்த்தும்.

கி.பி. 1370 ஐப்பசி திருமூல நாளில் இவர் அவதரித்ததை நினைவுகூரும் வண்ணம், பக்தஜன சபையினர் பத்துநாள் திருவிழா எடுக்கின்றனர். இத்திருநாட்களில் திவ்வியப் பிரபந்தம் முழுமையும் சேவையாகின்றன. காலை, மாலை இருவேளைகளிலும் பாசுர சேவை நடைபெறுகின்றது. அச்சேவைக்குப்பின், தீர்த்தப் பிரசாதம் சிறப்பாக வழங்கப் பெறுகின்றது. இதற்காகும் ஒவ்வொரு நாட்செலவையும் ஒவ்வொருவர் உபயமாக ஏற்கின்றனர்.

பிறந்தநாளாம் பத்தாம் திருநாளன்று, திருமஞ்சனமாகித் தோளுக்கினியானில் அலங்காரமாகிய முனிகள், ஆராதனைக்குப் பின், ஆண்டாள் – மன்னாரிடமும் பெரியபெருமாளிடமும் 'மங்களா சாசனம்' பெறுகின்றார். அப்பொழுது, அந்நாளைக்குரிய திவ்வியப் பிரபந்தச் சேவையோடு, அம்மாமுனிகளே அருளிச் செய்த 'உபதேச ரத்தின மாலை' முதலிய பிரபந்தப் பாட்டுக்களையும் சேவிக்கின்றனர். சேவைக்குப்பின் சிறப்பாக, புளியோதரையோடு புடலங்காய்க் கூட்டும், சருக்கரைப் பொங்கலோடு பாலும் நைவேத்தியமாகப்

படைக்கப்பட்டு, குழு வழங்கல் நடைபெறுகின்றது. காலை 10 மணியளவில் தொடங்கிய இந்நாள் நிகழ்ச்சி சாயுங்காலம் 4 மணியளவில் நிறைவுறுகின்றது.

> *கடவுள் அங்கிங்கெனுதபடி எங்கும் வியாபகமாய் நிற்பினும். ஆலயத் திருமேனியிலும் மெய்யடியார் திருவேடத்திலும் தயிரில் நெய்போல விளங்கி நிற்பர்; மற்றையிடங்களில் பாலில் நெய்போல விளங்காது நிற்பர்.* [17]

என்ற ஆறுமுக நாவலர் கருத்து, இங்குக் கடவுளர்க்கும், ஆழ்வார், ஆசாரியர்கட்கும் எடுக்கப்பெறும் திருவிழாக்களின் பொருத்தத்தை விளக்கி நிற்றல் காணலாம்.

## 2.ஏனைய திருவிழாக்கள்

### வசந்த (கால)த் திருவிழா :

வசந்தம் என்ருல் மகிழ்ச்சி என்று பொருள். இதனைப் புதுவாழ்வின் தொடக்கம் எனவும் புகலலாம். தளிர்கள் நிறைந்த மரங்கள்; மலர்கள் நிறைந்த தடாகம்; மனத்தை மயக்கும் மாலைப்பொழுது; மணங்கமழும் தண்காற்று ஆகிய மனங்கவர் சூழ்நிலையில் வசந்தம் பூத்தது என்பர். இவ்வசந்த காலமே சித்திரை வைகாசியோடு கூடிய 'இளவேனிற் காலம்' எனப்படும். சித்திரைத் தொடக்கத்திலேயே மன்மதனின் ஆட்சியோடு இவ்வசந்த காலம் ஆரம்பமாகின்றது. இது காதலர்கள் கூடிக்களிக்கும் காலமாக - பங்குனி மாதத்தில் திருக்கலியாணம் செய்துகொண்ட ஆண்டாள்- மன்னுருக்குத் தேனிலவுக் காலமாகத் திகழ்கின்றது எனலாம்.

### சித்திரை - வசந்தம் :

இஃது ஆண்டாள்- மன்னூர் சேர்த்தித் திருவிழாவாக அமைகின்றது. சித்திரை முழுநிலவு நாளோடு, இதன் பத்தாம் திருவிழா முற்றுப்பெறுகின்றது. முன் ஒன்பது நாட்கள் ஆண்டாள் - மன்னூர் புறப்பாடும், ஊர்வலமும், கருவறை சேர்வதும் ஒரே சீராக அமைகின்றன.

காலை 10 மணியளவில், ஆண்டாள் - மன்னுருக்குச் சேர்த்தியாய் 'ஏகாந்தத் திருமஞ்சனம்' நடைபெறுகிறது.

மாலை 5 மணியளவில், ஆண்டாள் - மன்னுரின் திருமேனி முழுவதும் சந்தனம் சாற்றுகின்றனர். பின்னர், வெள்ளாடை அணிவித்து மலரலங்காரம் செய்கின்றனர். ஆண்டாளுக்குச் சிறப்பாக மலர்க்கொண்டை யிடுகின்றனர். சேர்த்தியாகத் தோளுக்கினியானில் அலங்கார மாகின்ற

அவர்கள், அந்நணர்களின்சிறிய, பெரிய திருமடல் சேவையைச் செவிமடுத்த வண்ணம் சக்கரைக் குளத்தெரு சமீபமுள்ள திருத்தேர் வசந்த மண்டபமான நீராழி மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றனர். அம்மண்டபத்தை ஒருமுறை சுற்றிவந்து 'திருவந்திக்காப்பு' ஆனதும், உள்மண்டபத்துள் எழுந்தருளு கின்றனர். திருவாராதனைக்குப்பின், ஐந்து இளநீர்கள் படைக்கப் படுகின்றன. பொங்கலும், விடாய்ப்பருப்பும், பானகமும் குழுவினர்க்கு வழங்கப் படுகின்றன. பின்னர், மேளதாள வாத்திய முழக்கத்தோடு, அவ்வசந்த காலத்துப் பூத்த மலர்களை ஆண்டாள் – மன்னருக்கு அணிவித்து, திருவாராதனை செய்கின்றனர். இதற்காகும் ரூ. 500/- செலவினைப் பேயாழ்வார் சேரிட்டிஸ் ஸ்ரீவேங்கட ராமாநுச பாகவதரின் டிரஸ்டு சொத்தான கடைகளின் வருமானத்தில் உபயமாக ஏற்கின்றனர்.

சித்திரை முழுநிலவன்று, மதுரை அழகருக்கு ஆண்டாளின் மாலையைச் சூட்டுவதற்கு வசதியாக, சித்திரை எட்டாம் திருநாளன்றே இங்கிருந்து அம்மாலைகளை அனுப்பி வைக்கின்றனர்.

நாட்பூசனைக்குப்பின், காலையில் ஆண்டாளை நீராட்டி, அவருக்குப் புதுப்புடவை சமர்ப்பித்து, பெரிய மாலைகள் சூட்டி, சிறப்புப் பூசனைகள் செய்கின்றனர். கோயில் மணியமான திரு. கண்ணன் ஐயங்காரையும், பரிசாரகரான திரு. கிச்சப்ப ஐயங்காரையும் அன்புடன் அழைத்து வருகின்றனர். திவ்வியப் பிரபந்தப் பாடல்களைச் சேவித்து, துளசியை அடிகளிலிட்டு வணங்கி, ஆண்டாளிடம் உத்தரவு (ஆணை) பெறுவதாகிய 'விண்ணப்பம்' கேட்டு, ஆண்டாளுக்குச் சாற்றிய மாலை, பரிவட்டங்களைப் படிகளைந்து, புதுக்குடலையில் இடுகின்றனர். மேற்குறித்த இருவருக்கும் மாலை, பரிவட்டங் கட்டி, சடாரி சாற்றி உரிய மரியாதை வழங்குகின்றனர். அவர்களிடம் ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலைகளடங்கிய குடலையைக் கொடுக்கின்றனர். அதனைத் தலையில் சுமந்த வண்ணம் ஆண்டாளைச் சுற்றி வருதலாகிய மரியாதையை அவர்கள் செய்கின்றனர். தற்போது கோயில் யானை இன்மையால், அக்குடலையைத் தலையில் சுமந்தவாறே நான்கு வீதிகளும் வலம் வருகின்றனர். மாட்டு வண்டியில் வைத்து அழகர் சந்நிதிக்குக் கொண்டு செல்கின்றனர். மதுரை போகும் வழிநெடுகிலுமுள்ள மண்டபங்களில், அவ்வாண்டாள் மாலைக்குப் பூசனை நடைபெறுகின்றது.

தல்லா குளத்தில் குதிரை வாகனத்தில் அலங்காரமான அழகருக்கு, ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையைச்

சாற்றுகின்றனர் ; பரிவட்டத்தினைச் சுற்றி விடுகின்றனர் ; கற்பூரத் தீப ஆராதனை செய்கின்றனர். அதன் பின்னர்தான், அழகர் வையை யாற்றில் இறங்கி அடியவர்களுக்கு அருள் வழங்குகிறார். திருவரங்கத்து மன்னார் அழகராய்க் கோதையின் உள்ளம் கவர்ந்ததை,

> எழிலுடைய வம்மனையீர் என்னரங்கத் தின்னமுதர்
> குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
> எழுகமலப் பூவழகர் எம்மானார் என்னுடைய
> கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே.[18]

என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரமே உணர்த்துகின்றது.

அழகருடைய பிரசாதமாக, அவரின் மாலை பரிவட்டங்களைப் பெற்றுக் கொணர்ந்து, மணியம் வீட்டில் வைத்துப் பூசனை செய்து, குடைகள் தீவட்டிகளுடனும், மேளதாள வாத்திய இசையுடனும் எழுந்தருளப்பண்ணிக் கொணர்ந்து ஆண்டாளுக்குச் சாற்றுகின்றனர்.

அதன் பின்பு, ஆண்டாள், மன்னாருடன் வாழைக்குளத் தெரு தீர்த்த வாரி மண்டபம் சேர்கின்றார். அங்கு, அலங்காரக் கும்பங்கள் வைத்து, குழுமியுள்ளோரில் வேத பாராயணமுள்ள அனைவருமே, வேதமந்திரங்கள் ஓத, நீராட்டு நடைபெறுகின்றது. மலரலங்கார ஆராதனைக்குப்பின் 'திருப்பாவை', 'திருப்பல்லாண்டு' சேவையாகின்றன. அடுத்தும் இதேபோல் சேவை நடந்து, சிறிய, பெரிய திருமடல்கள் சேவையாகின்றன ; இளநீர் படைக்கப் படுகின்றது.

இரவு, வெட்டிவேர்ச் சப்பரத்தில் இருவருமே அலங்காரமாகி வீதிகண்டருளி, கருவறை சேர்கின்றனர்.

மேற்காட்டிய முறையிலேயே, திருப்பதி பெரிய கோயில் வெங்கடேசுவரருக்காக எடுக்கப்படும் புரட்டாசித் திருவிழாவின் ஐந்தாம் நாளில், அப்பெருமாளுக்குச் சூட்டுவதற்காக ஆண்டாள் மாலையும் பரிவட்டமும் மூடுசுமையூர்தி(Van)யில் அனுப்பி வைக்கப்படுகின்றன.

பத்தாம் திருநாளான சித்திரை முழுநிலவன்று, அன்றுடக் காலைப் பூசனைக்குப்பின், 7 மணியளவில் ஆண்டாள் பாம்பூர்தியிலும், மன்னார் குதிரை வாகனத்திலும் அலங்காரமாகி, வீதிவலம் வந்து, திருவண்ணாமலை செல்லும் வழியிலுள்ள ஆற்றில் மன்னார் மட்டும் இறங்கி, வையாளி

கண்டருளியபின், இருவருமே ஆற்றுப்பால மண்டபத்திற்கு வந்து சேர்கின்றனர்.[19] இன்றுமட்டும், இல்லத்துப் பிள்ளைமார்கள், ஆசாரியார், முத்தையா பிள்ளை, தங்கமுடியா பிள்ளை, சங்கர நாராயண செட்டியார், தேவாங்குச் செட்டியார்கள், ஒட்டம்பட்டி அழகர் ஆசாரி ஆகிய எழுவரின் விடாயாற்றுப் பூம்பந்தல்களைக் கண்டருளுகின்றனர்; இறுதியில் கருவறை சேர்கின்றனர்.

> *மதுரை அழகர் ஆற்றிலிறங்குவதை ஒத்ததே இந்நிகழ்ச்சியாகும். மதுரைநகர் சென்று. அத்திருவிழாவைக் காண இயலாதவர்கள் இத்திருவிழாவினைக் கண்டே மனநிறைவு எய்துகின்றனர் எனலாம்.*

குதிரையை நடைபயில விடுவதாய் அமையும் 'வையாளி கண்டருளுதல்' நிகழ்ச்சி, அந்நிகழ்ச்சிக்குரியவரைக் குதிரை வாகனத்தில் இருத்தித் தோளில் சுமந்து செல்லும் ஸ்ரீபாதந்தாங்கிகள், வேகமாய்க் கொண்டு செல்வதாய்—ஓடிக்காண்பிப்பதாய் முன்னர் அமைந்திருந்ததாம். தற்போது, இமுவை வண்டிகளே பயன்படுத்தப் படுவதால், அதனை வேகமாய் இழுத்துச் செல்வதாய் அமைகின்றது.

## வைகாசி - வசந்தம் :

"கோதா ஸ்துதித் திருவிழா" என்றும் இஃதழைக்கப்படுகிறது. அரையரின் சேவைக்காகவே 'அத்யயன உற்சவம்' அமைந்ததுபோல், வேதப்பிரான் பட்டரின் சேவைக்காகவே, இத்திருவிழா அமைந்ததெனலாம்.[20] ஆண்டாளின் பெருமையை வடமொழியில் 'கோதா ஸ்துதி' என்ற 29 சுலோகமாக்கியுள்ள வேதாந்த தேசிகரை நினைவுகூரும் வண்ணம், இத்திருநாட்களில் இச்சுலோகங்கள், இயல்தொடக்கம், குழுசேவை, சாற்றுமுறை என்ற முறையில் சேவையாகின்றன.

> *ஆண்டாள் அணிந்த மேலாடையையும், திருக்குழலிலே சூட்டி, அதனால் வாசனையூட்டப்பட்ட மாலையையும் தலையிலணிந்து, அரங்கன் அழகு பெறுகிறார்.*[21]

என்பது போன்ற கருத்துக்கள் அடங்கிய சுலோகங்கள் இக்கோதா ஸ்துதியின் மேன்மை யுணர்த்துகிறது.

வைகாசி முழுநிலா நாளோடு இதன் பத்தாம் நாள் திருவிழா முடிவடைகின்றது. முதல் ஒன்பதுநாள் நிகழ்ச்சிகளனைத்தும் சித்திரை வசந்தத் திருநாட்களின்

நிகழ்ச்சிகளைப் போலவே அமைகின்றன. இங்கு, நாடக சாலைத் தெருவிலுள்ள நீராழி மண்டபமான வசந்த மண்டபம் நடைபெறுகின்றது. இம்மண்டபத்தின் ஒன்பதுநாள் செலவினையும் டி.வி.எஸ். நிறுவனத்தினர் உபயமாக ஏற்கின்றனர். மூன்று துளி தீர்த்தத்தை மும்முறை தெளித்துப் பரிசாரகர் தருகின்ற ஆண்டாள் மரியாதையை ஏற்ற பெரியாழ்வார் வழிவந்தவர்களான வேதப்பிரான் பட்டர், குல்லா முதலிய அலங்காரங்களுடன் மாலை யணிந்து, பரிவட்டம் கட்டிய தோற்றத்தோடு கோதா ஸ்துதியின் முதல் சுலோகத்தை இயல் தொடக்கமாகச் சொல்ல, மேலுள்ளவற்றைக் குழுவினர் சேவிக்க, அவற்றைச் செவிமடுத்துக் கொண்டே ஆண்டாளும் மன்னரும் அம்மண்டபத்தைச் சுற்றியுள்ள வீதிகளில் வலம் வருகின்றனர். கடைசியாக, மண்டபத்தின் முன்வந்து நின்றதும், இறுதிச் சுலோகத்தையும் மங்கல வாழ்த்தையும் வேதப்பிரான் பட்டர் சாற்றுமுறை யாக்குகிறார்.

பத்தாம் நாளான வைகாசி முழுநிலாவன்று காலை, கும்பங்கள் வைத்து, வேத மந்திரங்கள் ஓதியபின், ஆண்டாள் - மன்னருக்குச் சேர்த்தித் திருமஞ்சனம் நடைபெறுகிறது. அலங்கார, ஆராதனைக்குப்பின் 'திருப்பல்லாண்டும்' 'திருப்பாவை'யும் சேவை யாகின்றன.

இரவு, தோளுக்கினியானில் அலங்காரமாகிய ஆண்டாள் - மன்னர், நீராழி மண்டபம் சேர்கின்றனர். அங்கு, மலையன் ஸ்ரீ இரங்கம்மாள் மண்டபம் நடைபெறுகிறது. இம்மண்டபச் செலவினை அவர்களின் சுவிகாரப் புதல்வர் ஏற்கின்றார். இங்குத் தயிர்ச் சாதம் (ததியன்னம்) படையலாகின்றது. வீடணன் உபயமாகப் பால்மாங்காய் அமுதாக்கப் படுகின்றது. இதற்குக் காரணமாக ஒரு கதை கூறப்படுகின்றது.

> இராமபிரான் தமது குலதனமாக ஸ்ரீரங்கநாதனை வீடணனுக்கு அளித்தார். அதனைப் பெற்ற அவர், இலங்கை செல்லும் வழியில், திருச்சிக்கு அருகேயுள்ள காவிரி யாற்றின் நடுவில் வைத்து விடவே, மறுபடி பெயர்க்க முடியவில்லை. வேறு வழியில்லாத நிலையில், தென்திசையாம் இலங்கை நோக்கிக் காட்சியளிக்கக் கேட்டுக் கொண்டார். [22]

'வ்வேண்டுகோளை அரங்கன் நிறைவேற்றியருளியதை,

> குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி.
> வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கிக்
> கடல்நிறக் கடவு ளெந்தை அரவணைத் துயிலுமா கண்டு. [23]

என்ற 'திருமாலை'ப் பாசுரம் தெளிவுறுத்தும். அன்றுமுதல் வீடணன் உபயமாக, அரங்கனுக்குப் 'பால் மாங்காய்' அமுது செய்விக்கப் படுகின்றதென்பர். அந்த அரங்கனே இங்கு ரெங்க மன்னாராக எழுந்தருளி யிருப்பதால், இங்கும் பால்மாங்காய் நைவேத்தியம் நடக்கின்றது.

> *மாங்காய், பலாக்காய், வாழைக்காய். தேங்காய் ஆகியவற்றை நறுக்கித் துண்டுகளாக்கிப் பாலோடு சேர்த்துச் சமைத்து,மிளகுப்பொடி கலந்து தயாரிக்கப் படுவதால் 'பால்மாங்காய்'.*[24]

எனப் பெயர் பெற்றது.

> *இவ்விளவேனிற் காலத்து மிகுதியாய்க் கிடைத்திடும் காய் வகைகளே இங்கு நைவேத்தியப் பொருள்களாகின்றன. இக்காலத்து வெயிற் கொடுமையை நீக்க மக்கள் விரும்பிச் சாப்பிடுகின்ற இளநீர். சுவாமிகட்குப் படையலாக. வெட்டிவேர்ச் சப்பரம் வாகனமாகின்றது.*

## கந்தபொடித் திருவிழா :

ஆனி பெரியாழ்வார் பிறந்தநாள் பெருந்திருவிழாவின் பத்தாம் திருநாள் காலையில், பெரியாழ்வார் மட்டும் தனித்து, தோளுக்கினியானில் அலங்காரமாகி, மாடவீதி மட்டும் சுற்றி வருகின்றார். அதுபோழ்து அவரின் பிரசாதமாக மணமிகுந்த பொடியான 'கந்தபொடி' மக்களுக்கு வழங்கப்படுகின்றது.

> *ஆழ்வாரின் பிறந்தநாளை இம்மங்களமான மணப்பொடியிந்து, மக்களுக்கு அறிவிக்கின்றனர் எனக் கொள்ளலாம். இத்தலத்துக்கு உரிய ஆழ்வார் என்ற முறையில் இவருக்கு மட்டுமே சிறப்பாக இத்திருவிழா மேற்கொள்ளப் படுகின்றது.*

## முப்பழத் திருவிழா :

ஆனி முழுநிலவன்று இத்திருவிழா எடுக்கப் படுகின்றது. 'முப்பழம்' எனச் சிறப்பிக்கப்படும் மா, பலா, வாழைப் பழங்களை நறுக்கித் துண்டுகளாக்கி, அத்தோடு தேங்காயைத் துருவிப் பூவாக்கி இட்டுக் கலந்த இம்முப்பழக் கலவையை ஆண்டாளுக்குப் படையலாக்கிய பின்னர், குழுவினர்க்கு வழங்குகின்றனர்.

> *அந்தந்த மாதத்தில் கிட்டும் உணவு வகைகளை, அந்தந்த மாதத்தில் இறைவனுக்குப் படைத்து, மக்கள் உண்ண விழைகின்றனர் என்பதையே இ:துணர்த்துகின்றது.*

திருப்பவித்திரத் திருவிழா :

'பவித்திரம்' என்றால் 'தூய்மை செய்தல்' என்று பொருள்படும். இத்திருவிழா ஆவணி வளர்பிறை (சுக்ல பட்ச) ஏகாதசியான 'திருப்பவித்திர ஏகாதசி'யில் தொடங்கித் தொடர்ந்து ஏழு நாட்கள் நடைபெறுகின்றது. திருவில்லிபுத்தூரின் தலைவரான 'பெரிய பெருமாளு'க்கெனச் சிறப்பாக நடத்தப்பெறும் திருவிழா இஃதென்கின்றனர். மஞ்சளில் தோய்க்கப்பட்ட கதர்நூல் மாலைகளை அணிந்து, மங்களத்துடன் தூய்மை துலங்கத் தோன்றுதலே இதன் குறிக்கோளெனலாம். இவ்வாறே, ஏழுநாட்களும் ஆண்டாள் - மன்னார் காட்சியளிக்கின்றனர்.

தூய்மை காக்கக் கடவுளர்கள் கொண்ட ஆர்வத்தினையே இது நமக்கு அறிவுறுத்துகின்றது.

திருப்பவித்திர ஏகாதசியன்று, மாலை நேரம், மஞ்சளில் தோய்த்த நூல் மாலைகளைக் கொண்ட தாம்பாளத்தைத் தலையில் சுமந்த வண்ணம், மேளதாள வாத்திய இசை முழங்க, வேதப்பிரான் பட்டர் திருமாளிகைக்கு வருகின்றனர். அங்கு, அம்மஞ்சள் நூல்மாலைகளை அவ்வேதப்பிரான் பட்டருக்குச் சூட்டுவதாகிய 'அரவண மரியாதை' நடக்கிறது. வேதப்பிரான் பட்டரால் அவரது திருமாளிகையில், அஷ்ட பர்வதமாகிய எட்டு மலைகளின்மேல் இட்டு, மஞ்சளில் தோய்த்து, மூன்று முடிச்சுகள் போட்டுக் கட்டி வைக்கப் பட்டிருக்கும் முப்பதுக்கும் மேற்பட்ட கதர்நூல் மாலைகளை எடுத்துக் கொண்டு, பெருமாள் சந்நிதி செல்கின்றனர். அங்குள்ள யாக சாலையில் 'ஹோமம்' வளர்த்து, தேன், பால், தயிர் முதலான பல பொருட்களால் நிரப்பப்பட்ட ஏழு அல்லது ஒன்பது (சப்த/நவ) குடத் தீர்த்தத்தால் பெருமாளுக்குக் 'குடமுழுக்கு'ச் செய்கின்றனர். வேதப்பிரான் பட்டரின் வீட்டிலிருந்து கொணர்ந்த 'திருப்பவித்திர' மாலைகளைப் பெருமாளுக்குச் சாற்றி ஆராதனை செய்கின்றனர்.

மாலை 5 மணியளவில் திருமகள் பூமகளுடன் சேர்த்தியாய்த் தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற பெருமாள், முதல் திருவந்தாதி இயல் தொடக்கத்துடன் மாட, கந்தாடை வீதிகளை வலம் வந்து, சாற்றுமுறைக்குப் பின் கருவறை சேர்கின்றார்.

இவ்வாறே ஏனைய ஆறுநாட்களும் மேற்குறித்த நிகழ்ச்சிகள் பிற்பகல் 2 மணியளவில் தொடங்கி நடைபெறுகின்றன. சேவையாகும் பாடல்களே நாடோறும் மாறுபடுகின்றன.

| திருநாள் | திருமஞ்சன, திருவாராதனையின் போது நடைபெறும் தி.வா.மொ. பாசுரசேவை | வீதிவல இயற்பா பாசுரசேவை |
|---|---|---|
| 2. | திருவாய்மொழி இரண்டாம் பத்து | இரண்டாம் திருவந்தாதி |
| 3. | திருவாய்மொழி மூன்றும் நான்காம் பத்து | மூன்றும் திருவந்தாதி |
| 4. | திருவாய்மொழி ஐந்தாம் ஆறும் பத்து | நான்முகன் திருவந்தாதி |
| 5. | திருவாய்மொழி ஏழாம் எட்டாம் பத்து | பெரிய திருவந்-தாதி திருவாசிரியம். |
| 6. | திருவாய்மொழி ஒன்பதாம் பத்து | திருவெழுக்கூற்-றிருக்கை: சிறிய, பெரிய திருமடல்கள் |
| 7. | திருவாய்மொழி பத்தாம் பத்து இராமாநுச நூற்றந்தாதி | திருவிருத்தம் |

ஏனைய திருநாட்களி லெல்லாம் கோயில் நிருவாகம் மண்டபப்படி நடத்த, ஆறும் திருநாள் மட்டும் வள்ளக் குளம் கிராமத்து 3 ஏக்கர் நிலத்தினை மானியமாகப் பெற்ற திரு. சுந்தரராச பட்டரும், நாச்சியார் பட்டி நாயக்கமார்களும் சேர்ந்து ரூ. 500/- செலவு பிடிப்பதான நிலப்பட்டாதாரர்கள் உபய மண்டபப்படி நடத்துகின்றனர்.

ஏழாம் திருநாள் மாலை, பெருமாளும் பெரியாழ்வாரும் தோளுக்கினியான்களில் அலங்காரமாகி, ஆண்டாள் சந்நிதி எழுந்தருளி, அங்கிருந்து கருட வாகனத்தில் பெருமாளும், அன்ன வாகனத்தில் ஆழ்வாரும் அலங்காரமாகி, 'திருவிருத்த' இயலுடன் மாடவீதி கந்தாடைவீதி எழுந்தருளுகின்றனர். சாற்று முறைக்குப்பின் திருவந்திக் காப்புச் செய்கின்றனர். அதன் பின்னர், பெருமாளுக்குச் சாற்றிய மாலையை ஆழ்வாருக்கும், ஆழ்வார் மாலையை வேதப்பிரான் பட்டருக்கும் அணிவித்து மரியாதை செய்கின்றனர். இறுதியில் இருவரும் தத்தம் கருவறை சேர்கின்றனர்.

## நவராத்திரித் திருவிழா :

புரட்டாசித் திங்கள் அமாவாசையை அடுத்த ஒன்பதுநாள் வளர்பிறை இரவுகளில், ஆண்டாளைப் பூமகள் அவதாரமாகக்

கொண்டு அலங்காரம் செய்து தொழுகின்ற விழாவாகவே இத்திருவிழா அமைகின்றது; பத்தாம் நாள் விசயதசமி விழாவாகக் கொண்டாடப் பெறுகின்றது. இத் திருவிழாச் செலவனைத்தையும் கோயில் நிருவாகமே ஏற்கின்றது.

மாலை 5 மணியளவில் ஆண்டாள் மட்டும் தோளுக்கினியானில் அலங்காரமாகி, மாடவீதி சுற்றி, சந்நிதி வருகின்றார். அரையரின் படியேத்து சேவைக்குப்பின் திருவந்திக் காப்பாகக் குடதீபமும், கற்பூர தீபமும் காட்டப் படுகின்றன. விடாய்ப்பருப்புப் படையலுக்குப் பின் குழுவழங் கலாகின்றது. அதன்பின்பே ஆண்டாள் கொலுமேடைக்கு எழுந்தருளுகின்றார். பரிசாரகர்கள் மடைப் பள்ளியிலிருந்து, மேளதாள இன்னிசைக் கருவிகள் முழங்க, சங்கு சக்கர தீவட்டி தூபம் கொண்டு வருகின்றனர். திரை திறந்து கற்பூர தீபம் காட்டுதலாகிய ஆராத்னை நிகழுகின்றது. அருச்சகருக்குச் சந்தனத்துடன் பாக்கு வெற்றிலை கொடுக்கப் படுகின்றன. இவ்வாறு மரியாதை பெற்ற அவர், மேடையிலமர்ந்து சங்கற்பமும் (உறுதிமொழி) புண்ணியா வாசனமும் (சுத்தி) செய்து, வெள்ளியிலான ஐந்து பாத்திரங்களில் படிக்கம் (தீர்த்தம்) எடுத்து, வெள்ளிக் கலப்பானை, தீபம், மணி முதலியவைகளுக்கு அருச்சனை செய்கின்றார். இப்பூசனை முடிந்தபின்னர், 'அர்க்கிய பாத்யம்' (ஆண்டாளுக்குக் கால் அலம்பத் தருகின்ற நீர்) சமர்ப்பிக்கப் படுகின்றது. தூபதீபம், குடதீபம், கற்பூர தீபம் காட்டிய கையோடு, குடை, சாமரம், கண்ணாடி, விசிறி, திருப்பாவாடை யெல்லாம் சமர்ப்பித்து, சோடச (16 வகை) உபச்சாரங்கள் செய்து, சிறப்புப் பூசனை நடைபெறுகின்றது. 'ருக், யசூர், சாம, அதர்வண' வேதங்களும், வைகானச சூத்திரங்களும், பாசுரங்களும் இசையுடன் சேவையாகிக் கொலு மேடையிலுள்ள ஆண்டாளுக்கு அஷ்டோத்திர (108 வகை) அருச்சனை செய்யப் படுகின்றது. வெண்பொங்கல், சுண்டல் நைவேத்தியத்தைத் 'தீர்த்தக் கிரமமாக' அரையர் சுவாமி, பெரியநம்பி சுவாமி, வேதப்பிரான் பட்டர் சுவாமி, மிஞ்சுமூர் தெற்குமாட நல்லார் ஜீயர் சுவாமி என வழங்குகின்றனர். சடாரி சாற்றுதல் எல்லோருக்குமுண்டு. அருச்சனையாகத் தேங்காயுடைத்து, பழம், பாக்கு, வெற்றிலை சமர்ப்பித்துப் பக்தர் குழாம் தொழுது மகிழ்கின்றது.

மாடவீதி சுற்றி வரும்போது, ஆண்டாளைப்போல் அலங்காரம் மேற்கொண்ட பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுமியர் இருவர் உடன் வருகின்றனர். மண்டபத்திற்கும்

கருவறைக்கும் எழுந்தருளுமுன், அரையர் இசையோடு படியேத்து சேவை செய்கின்றார். இரவு 9 மணியளவில் கருவறை சென்ற ஆண்டாள், மன்னருடன் சேர்த்தியானதும், வெங்கலக் கண்ணாடி முன்பாகக் கற்பூர தீபாராதனை காட்டப் பெறுகின்றது. திருவந்திக் காப்புச் செய்யும்போது, அருச்சகர் திருவடி பிடித்து விடுதலுமுண்டு. அவ்வேளை, திருச்சங்கொலி எழுப்பப் பெறுகின்றது. இதே மாதிரி ஏனைய எட்டு நாட்களும் திருவிழாச் செயல்கள் நடந்தேறுகின்றன.

> *செல்வத்திற்கு அதிதேவதை இலட்சுமி (திருமகள்) என்ற கருத்தில், பொருள் வளர்ச்சி நோக்குடைய விவசாயி, வியாபாரி, தொழிலாளி போன்ற அனைவருமே இத்திருவிழாவில் வழிபாடு நடத்துவதைக் காண்கின்றோம்.*

## விசய தசமி :

பத்தாம்நாள் விசய தசமியன்று, சாயுங்காலம் 4 மணி அளவில் மன்னார் மட்டும் தங்கக் குதிரை வாகனத்தில் அலங்காரமாகி, வடக்கே திருவண்ணாமலை செல்லும் பாதையில் ஒன்றரைக் கல்தூரம் சென்று, கோட்டப்புரம் சுப்பிரமணிய செட்டியார் மண்டபம் எழுந்தருளுகின்றார். அக்குதிரை மீதிருந்து கொண்டே அம்பு போடுகின்றார். நான்கு திசைகட்கும் பூசனை செய்து, புளியோதரை நைவேத்தியம் வழங்கப் பெறுகின்றது. இதற்காக மேற்படி மண்டபதாரரின் குடும்ப டிரஸ்டு ரூ. 1000/- வரை செலவு செய்கின்றது. பின்னர் மன்னார் கருவறை திரும்புகின்றார்.

> *ஆயுத பூசை தினமாதலால், மன்னார் அம்புபோடும் கலை பயிலுகின்றார்; அம்பாகிய ஆயுதத்தைப் பயன்படுத்திப் பார்க்கின்றார் என்று கொள்ளலாம். இறுதியில் வெற்றிப் பெருமிதத்தோடு மன்னார் ஆலயம் திரும்புவதாக இஃதமைகின்றது.*

## ஊஞ்சல் திருவிழா :

ஐப்பசி முழுநிலாவன்று தொடங்குகின்ற இவ்வூஞ்சல் திருவிழா, திருப்பூரம் முடிய ஏழுநாட்கள் தொடர்ந்து நடைபெறுகின்றது. திருப்பூரம் தவிர்ந்த ஏனைய நாட்களில், திருமகள் பூமகளோடு திகழுகின்ற 'பெருமாளு'க்கு அவர் கோயிலிலேயே இவ்விழா எடுக்கப் படுகின்றது. இறுதித் திருப்பூரத் திருநாளில் திருப்பூர மண்டபத்தில் ஆண்டாள்-மன்னாருக்கு இவ்விழா நடைபெறுகின்றது.

இத்திருவிழாவிற்காகும் செலவினைக் கரி வலம்வந்த நல்லூர் திரு. இராமாநுச ஐயங்காரின் குடும்ப டிரஸ்டு ஏற்கின்றது.

ஐப்பசி முழுநிலாவன்று மாலை 4 மணியளவில் வாத்திய முழக்கத்தோடு பரிசாரகர்களால் திருமுக்குளத்திலிருந்து கொண்டு வரப்பட்ட தீர்த்தம் நிறைந்த ஒன்பது குடத் (நவகலசம்)திற்கும் பூசனை நடைபெறுகின்றது. திருமகள் பூமகளோடு எழுந்தருளுகின்ற உற்சவ மூர்த்தியாம் 'பெருமாளு'க்குப் பால், தயிர், இளநீர், பஞ்சாமிர்தம் முதலிய சிறப்புப் பொருட்களாலான நீராட்டு நடத்தப் பெறுகின்றது.

இரவு 7 மணியளவில், பெருமாளைத் தோளுக்கினியானில் அலங்கரித்து, அனைத்து வழிபாடுகளும் முடித்தபின், பழம்பெரும் நாடக நடிகர் கன்னையா அன்பளிப்பாகத் தந்த வைரப் பதக்கம், வைர முடி, பெரிய காசுமாலை, வைர டீகா (அட்டியல்) போன்றவற்றை அணிவித்து, மலர்கள் சூட்டிப் புறப்பாடு நிகழ்த்தப் பெறுகின்றது.

மேல்தளத்தில் சுற்றிவரும்போதே, வாண வேடிக்கைகள் நிகழ்த்தப் பெறுகின்றன. வில்லிபுத்தூருறைவார் குறட்டுக்கு அருகேயுள்ள ஊஞ்சல் மண்டபம் சேர்ந்ததும், தொடர் மின் விளக்குகளால் அலங்கரிக்கப் பட்ட ஊஞ்சலில் திருமகள்-பூமகளுடன் 'பெருமாள்' அமர்கின்றார். அவருக்குச் 'சோடச' (16 வகை) உபச்சாரங்களுடன் கூடிய சிறப்புப் பூசனை செய்யப் படுகிறது. ஏறத்தாழ 20 படி அரிசியில் ஆக்கப் பட்ட சருக்கரைப் பொங்கலையும், புளியோதரையையும், சுண்டலுடன் பெருமாளுக்குப் படைத்தபின், பக்தர்களுக்குப் பகிர்ந்து வழங்குகின்றனர்.

மலரலங்காரத்தோடு கூடிய தொங்க விடப்பட்ட சப்பரமே இங்கு ஊஞ்சலாகின்றது. பெண்கள் ஆண்டாளைப் பற்றிய 'ஊஞ்சல்' பாட்டுக்களையும் ''கப்பல்' கவிகளையும் இசையோடு பாடுகின்றனர். 'திருப்பல்லாண்டு'ம் திருப்பாவை'யும் குழுவினரால் சேவையாகின்றன.

திருப்பூரமாகிய ஏழாம்நாள், ஆண்டாளும் மன்னரும் திருப்பூர மண்டபத்தில் இவ்வூஞ்சல் சேவையை மேற்கொள்கின்றனர். இவ்வேழு நாட்களும் 'திருப்பவித்திரத் திருவிழா' நாட்களில் போன்றே திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் சேவையாகின்றன.

## வெள்ளிக்கிழமை ஊஞ்சல் விழா :

*இது வாரந்தோறும் ஆண்டாள் - மன்னருக்கு ஆண்டாள் கோவிலில் நடத்தப் பெறுவதாகும். மாலை 6 மணியளவில், தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற ஆண்டாள், முதலில் வெளிப் பிராகாரத்தையும், அடுத்து உட்பிராகாரத்தையும் வலம் வந்து, சுக்கிரவாரக் குறட்டுக்கு எழுந்தருளுகின்றார். மன்னரோ கைத்தலச் சேவையாக நேரடியாக அக்குறட்டுக்கு வந்துசேர, திருவந்திக் காப்புச் செய்தபின், இருவரையுமே ஊஞ்சலில் அமர்த்தி, ஊஞ்சல் திருவிழாக் காண்கின்றனர். இரவு 9.30 மணி வரை இவ்வூஞ்சல் சேவை நடக்கின்றது. பக்தர்கள் தேங்காயுடைத்து, வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பித்து, அருச்சனை செய்கின்றனர். இத்தகு வழிபாட்டிற்குப் பின் இருவருமே கருவறை எழுந்தருளுகின்றனர்.*

## மார்கழி-நீராட்ட ஊஞ்சல் விழா :

*மணவாள மாமுனிகள் கண்டு களித்தற்காக, ஆண்டாள் கோயில், பெரிய பிராகாரத்து தென்மேற்கு மூலையிலுள்ள கருங்கல் மண்டபத்திற்கருகே இது நடத்தப் பெறுகின்றது. இவ்விழாவில் ஆண்டாள் மட்டுமே பங்கேற்கின்றார். அதுபோழ்து, சோழியன் கொண்டை எனப்படும் சவுரிவுச்சிக் கொண்டை போட்டு ஊஞ்சலில் எழுந்தருளுகின்ற ஆண்டாளுக்கு, 'நாட்கதிர் சாத்துதல்' நடைபெறுகின்றது. பரிவட்ட மரியாதையுடன் வேதப்பிரான் பட்டர், ஸ்தானீகர்கள், அரையர் ஆகியோர் முறையே, 'ஊஞ்சல் கவி' 'ஊஞ்சல் பாட்டு', 'வாழி மங்கலம்' ஆகியன சேவிக்கின்றனர். ஸ்ரீபண்டாரம் 'காணிக்கைப் பணம்' வாசிக்க, அருச்சகர் முதல் சந்நிதிக் கைங்கர்யர்கள் அனைவரும், ஆண்டாளுக்கு 'மாதப் பிறப்புக் காணிக்கைப் பணம்' செலுத்துகின்றனர். குழுவழங்கலுக்குப்பின் ஆண்டாள் கருவறை எழுந்தருள்கின்றார்.*

## பங்குனி-திருக்கலியாண ஊஞ்சல் விழா :

*இது, பங்குனி, ஆண்டாள் மன்னர் திருக்கலியாணத் திருவிழாவின் பத்தாம் திருநாள் நிகழ்ச்சியாகக் கலியாண மண்டபத்திலேயே மாலைக் காலத்தில் நிகழ்த்தப் படுகின்றது. வேதப்பிரான் பட்டர், ஸ்தானீகர், அரையர் சேவைகளுக்குப் பின், முன்போலவே ஸ்ரீபண்டாரம் காணிக்கைப் பணம் கணக்கு வாசிக்க, ஆண்டாள் - மன்னருக்கு 'ஊஞ்சல் காணிக்கைப் பணம்' வழங்குவதாக இவ்விழா நிறைவுறுகின்றது.*

*இவ்வூஞ்சல் விழாவனைத்துமே உள்திருவிழாக்களாய் அமைதலறிகிறோம்.*

## தீபாவளித் திருவிழா :

இத்திருவிழா, 'பண்டிகை'யென்ற பெயரோடு பாரத தேசமெங்கும் கொண்டாடப் படுகின்றது. தீப+ஆவளி எனப் பிரித்து,'தீப வரிசை' எனப் பொருள் கொள்கின்றனர். கிருட்டிணக் கடவுளால் நரகாசுரன் கொல்லப் பட்டதை நினைவுகூரும் வகையில் இவ்விழா மக்களால் மகிழ்ச்சியாகக் கொண்டாடப் படுகின்றது.

இப்பண்டிகைக்கு முன்தினம் இரவு, மேளதாள இசையுடன், ஆண்டாள், சயனர் சந்நிதிகளின் கடவுளர் அனைவருக்கும் எண்ணெய் சாற்றுதல் நிகழுகின்றது. கோயில் அருச்சர்கள், பரிசாரகர்கள் போன்ற அனைத்துக் கைங்கர்யதாரர்களுக்கும் தேய்த்துக் குளித்திட நல்லெண்ணெய்க் காப்பு வழங்கப் படுகின்றது. கோயில் நிருவாகி, அலுவலர்கள் ஆகியோருடன் தாசில்தார், காவலர் தலைவர் போன்றவர் களுக்கும் ஆளுக்கு 200 மில்லி லிட்டர் வீதம் ஆண்டாள் பிரசாதமாக எண்ணெய்க்காப்பு வழங்கப்படுகின்றது. இவ்வாறு இரண்டு 'டின்'அளவு, எண்ணெய்க் காப்பாகின்றது.

பண்டிகையன்று காலை 7 மணிக்கு, சுற்றுக் கோயில் சுவாமிகளும், உற்சவ மூர்த்திகளாம் ஆண்டாள், மன்னர், பெருமாள், திருமகள், பூமகள், கருடாழ்வார் போன்றோரும் வெள்ளிக் கிழமைக் குறட்டிற்கு எழுந்தருளுகின்றனர். அவர்களின் வடபக்கத்து இருக்கைகளில் பெரியாழ்வார், நம்மாழ்வார் எனப் பன்னிரு ஆழ்வார்களும், நாதமுனி, கூரத்தாழ்வார் போன்றோரும் உடையவர் போன்ற ஆசாரியர்களும் எழுந்தருளுகின்றனர். அன்றுட மாலை வழிபாட்டிற்குப்பின், மரியாதை பெற்ற ஸ்தானீகர் 'செய்த விண்ணப்பம்' செய்து, சயனர் சந்நிதி சென்று, 'பச்சவடம்' எனப்படும் புதுசவுளி வகைகளான பட்டுப்புடவை, வேட்டி, பரிவட்டங்களை எடுத்துவந்து பெருமாளிடம் 'நியமனம்' பெற்றபின் அவற்றை அனைவர்க்கும் சாற்றுகின்றார். ஸ்ரீபண்டாரம், கைங்கர்யதாரர்களின் பட்டியலை வரிசைப்படி வாசிக்க, காசுடையோர் குறைந்தது நான்கணுவாக, ஆண்டாளுக்குத் 'தீபாவளிக் காணிக்கைப் பணம்' செலுத்துகின்றனர். குழுவழங்கலுக்குப் பின், அனைவரும் கருவறை சேர்கின்றனர்.

இவ்வுள்திருவிழாவின் செலவனைத்தையும் கோயில் நிருவாகம் ஏற்கின்றது.

## கார்த்திகை-தீபத் திருவிழா :

கார்த்திகை முழுநிலவன்று தீப வழிபாடு இயற்றும் விழாவாக இஃது அமைகின்றது. ஒளிதரும் தீபத் திருவிழாவாக இஃது எல்லா இனத்தவராலும், சில மதத்தவராலும் கொண்டாடப் படுகின்றது. இத்திருநாளில் வீடெங்கும் விளக்கேற்றி வைப்பதில் பெண்கள் பெருவிருப்போடு முனைந்து செயல்படுதல் காண்கிறோம். காஞ்சி, தீபப் பிரகாசர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் மாலுக்கு 'விளக்கொளிப் பெருமாள்' என்றே பெயர் என்பதும் இவண் எண்ணத் தக்கதாம்.

> *இருளை விலக்கிப் பொருளை விளக்குவதாலேயே விளக்கு எனப்பட்டது. அஞ்ஞான இருளை அகற்றவே நம்முன்னோர் சோதி வழிபாடு இயற்றினர்.* [25]

கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் இடப்படும் விளக்கே 'கார்த்திகை விளக்கு' எனப் படுகின்றது. 'விளக்கை வழிபடுவோர்க்கு இறைவன் நலம் அருள்வார்' என்பது பெரியோர் நம்பிக்கை. அந்நம்பிக்கை நம்மிடையே வேரூன்றியுள்ளதை, மின்விளக்குப் போட்டாலும் கைதொழும் பலரைக் கண்டுணர்கின்றோம்.

அன்று காலை ஆண்டாள், மன்னார், பெருமாள், ஆகிய மூவருக்கும் சிறப்புப் பூசனை செய்கின்றார்கள். மாலையில், திருமடைப் பள்ளியில் 'ஹோமம்' வளர்த்து, 'நாரண தீபம்' ஏற்றிப் பூசை செய்கின்றார்கள். இருபுறங்களிலும் தண்டாயுதங்களைக் கட்டி, அவற்றின்மேல் களிமண்ணை இட்டு, அதன்மீது மிகுதியான எண்ணிக்கையில் கிளியஞ் சட்டிகளை அடுக்கி, ஏராளமான தீபங்களை ஏற்றுகின்றனர்.

இரவு 8 மணியளவில், ஆண்டாளும் மன்னாரும் தோளுக்கினியானில் சேர்த்தியாய் அலங்காரமாகி, பெருமாள் கோயிலைச் சுற்றியுள்ள நான்கு ரத வீதிகளையும் சுற்றிக் கோபுரத்தருகே வர, பெரிய பெருமாளும் வந்து சேர்ந்து கொள்கின்றார். மூவருமாகச் சந்நிதித் தெரு எழுந்தருளி, இரத வீதிக்குக் கிழக்கே யமைந்த 'சொக்கப் பனை தீபம்' கண்டருள்கின்றனர்.

சொக்கப் பனைக்குப் பூசனை செய்த அருச்சகர், அதனுச்சியில் தீபமேற்றி வந்தவுடன், அதனைக் கொளுத்துகின்றனர். நன்கு எரிந்தபின் அதனை வெட்டி வீழ்த்திய கையோடு சுவாமிகளுக்கு ஆராதனை செய்கின்றனர். அதன்பின்பே அவரவர் கருவறை சேர்கின்றனர்.

பெரியபெருமாள் சந்நிதிக்கு நம்மாழ்வார் எழுந்தருளிவந்து, பெரிய திருமொழியிலுள்ள 'வாடினேன் வாடி' என்ற பதிகத்தை அரையர் மூலம் இசையுடன் சேவிக்க, ஆழ்வாரின் தொண்டைக்கு எண்ணெய் சாற்றுகின்றனர். ஸ்தானீகர்களின் 'செய்த விண்ணப்பத்'திற்குப் பின் குழுவழங்கல் நடைபெறுகின்றது.

திவ்வியப் பிரபந்தங்களில் 'திருமால்', 'பரஞ்சோதி' என்றும் 'ஞானச் சுடரொளி' என்றும் சோதி வடிவாகக் குறிக்கப் பெறுவதை, நினைவுகூர்ந்து அவரைத் தொழும் முகமாகவே இஃதமைகின்ற தெனலாம்.

> *இத்திருவிழாவின் பின்னர், தைத்திங்கள் வெள்ளிக் கிழமை வரை அனத்யயன காலமாதலால், வீதிகளிலும் வைணவர் வீடுகளிலும் திவ்வியப் பிரபந்தச் சேவை கிடையாது. நாலாயிரத் தனியன்களும் திருவாய்மொழி இராமாநுச நூற்றந்தாதிகள், உபதேச ரத்தின மாலை போன்ற அநுபந்தங்களே சேவை யாகின்றன.*[26]

## அத்யயனத் திருவிழா : (பாசுர சேவைத் திருவிழா) :

கோயில் திருவிழாக்களைப் பொருத்தவரை, மார்கழி சூனிய மாதமில்லை. இம்மார்கழியிலும் இக்கோயிலில் கொடியேற்றமில்லாப் பெருவிழா நடைபெறுகின்றது. பாசுர சேவை நீராட்ட சேவை போன்ற பற்பல சேவைகள் இம்மாதத் திருவிழாவின்போது சாதிக்கப் படுகின்றன. 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்' என்று ஆண்டாளும், 'மாதங்களில் நான் மார்கழியா யிருக்கிறேன்' என்று கிருட்டிணனும் கூறியிருப்பது இங்கு நினைவுபடுத்தத் தக்கதாம். இம்மார்கழி - திருஅத்யயன உற்சவம் 'பகற்பத்தாம்', 'திருமொழித் திருநாள்' என்றும் 'இராப்பத்தாம்', 'திருவாய்மொழித் திருநாள்' என்றும் - மொத்தத்தில் சிறிய, பெரிய திருஅத்யயன உற்சவம் என்றும் இருகூறுகக் கொண்டாடப் படுகின்றது. பகற்பத்து, 'கோபால விலாச'த்திலும், இராப்பத்து, 'இராப்பத்து மண்டபத்'திலும் நடைபெறுகின்றன. நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களின் சேவைக்காகவே இத்திருவிழா நடத்தப் பெறுகின்றது. 'இசையரசர்' எனப் புகழப்பட்ட 'அரையர்', திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களை இசையோடு பாடி, அபிநயித்தும் நடித்தும் காட்டுகின்ற 'தெய்வீகக் கலை' விளக்கமாகவே இத்திருவிழா விளங்குகின்றது. பாசுரங்கள் யாத்த பன்னிரு ஆழ்வார்களின் பிரதிநிதியாக நின்று,

அப்பாசுரங்களின் பொருளை நயந்தோன்ற மெய்ப்பாடோடு இசையுங் கூட்டிக் கடவுளர்க்கு அரையர் அறிவிப்பதாய் இவ்விழா அமைகின்றது. நாதமுனிகளின் வழிவந்தவர்களான இவ்வரையர்களுடைய சிறப்பினை - மேன்மையினைக் குறித்திட, அவர்களுக்குக் குல்லாவும் ,தொங்கல் பரிவட்டமும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. தற்போது, ஸ்ரீரங்கம், ஆழ்வார் திருநகரி என்ற இரு தலங்களிலும், இத்தலத்திலும் மட்டுமே அரையர்கள் சேவை யாற்றுகின்றனர்.

## பகற்பத்து – திருமொழித் திருநாள் :

காலை ஆண்டாள்–மன்னாரின் ஏகாந்தத் திருமஞ்சனத்திற்குப் பின், 'திருப்பல்லாண்டு' தொடக்கமாகின்றது.

மாலை 5 மணியளவில் ஆண்டாளும் மன்னாரும் சேர்த்திப் பல்லக்கில் அலங்காரமாகி, மேளதாள இன்னிசையோடு வீதிவலம் வரும்போது, பெரியாழ்வார் வழிவந்தவர்களான வேதப்பிரான் பட்டர்கள் அவர்களை எதிர் கொண்டழைக்கின்றனர்; வெற்றிலை, பாக்கு, பழம் நிவேதனம் செய்கின்றனர். 'வேதப்பிரான் பட்டர்' என்ற அருளிப்பாடோடு எதிர்கொண்டழைத்த அவர்களுக்கு மாலை, பரிவட்ட, சடாரி மரியாதை நடக்கின்றது. அப்பட்டரின் திருமாளிகையைக் கடாட்சித்து, அதன்முன் போடப்பட்ட பந்தலின்கீழ் ஆண்டாளும் மன்னாரும் தெற்கு நோக்கி எழுந்தருளி யிருக்கின்றனர். திருவடி விளக்கி மலர்மாலைகள் சாற்றி, அவர்கள் வீட்டில் செய்யப்பட்ட திரட்டிப் பாலுடன், வெல்லப் பாகு சேர்த்த கொண்டைக் கடலைப் பருப்பான 'மணிப் பருப்பை'யும் அமுது செய்யப் பண்ணி, தேங்காய் பழம் நைவேத்தியம் செய்து, கற்பூரம் காட்டும் உபச்சாரம் நடக்கின்றது.

மாலை 5.45 மணியளவில், அவ்வீட்டுத் திண்ணையில் பரப்பி வைக்கப்பட்ட பூசனிக்காய், கத்தரிக்காய், தேங்காய், மாங்காய், நெல்லிக்காய்க் குவியல்களையும், பழத்தார்கள், கரும்புக்கட்டு போன்றவற்றையும் (பச்சை பரப்பலைக்) கடாட்சித்தபின், கோபுரத் தெரு வழியாகப் பகற்பத்து மண்டபமான 'கோபால விலாசத்தை' அடைகின்றனர்.

> இப்பச்சை பரப்பில் கைங்கர்யத்திற்குத் தேவையான காய்கனி வகைகளைக் கட்டளைப்பட்டி யாதவ சீடர்கள் உபயமாக அளிக்கின்றனர். கடாட்சிக்கப் பட்ட அவை கோயில் அலுவலகத்தில் வரவு வைக்கப் படுகின்றன.[27]

6.45 மணியளவில், பெருமாள் முன்பு, சிறிதளவு காய் வகைகளும், தளிகையும், திரட்டிப் பாலும் மணிப்பருப்பும் வைக்கப் படுகின்றன. "பெரியாழ்வாருக்காக வேதப்பிரான் பட்டர் 'பச்சை பரப்பி' விடைகொண்டிருக்கின்றார்; திருவுளங்

கொண்டு அங்கீகரித்தருள வேண்டுகின்றேன்." என்று கூறி, பரிசாரகர் 'செய்த விண்ணப்பம்' பிரார்த்திக்கின்றார். அருச்சகர், சுவாமி திருவடிகளில் திருத்துழாயினைச் சேர்த்து, 'பெருமாள் நியமனம் அளித்தார்' எனப் பரிசாரகரிடம் பகர்கின்றார். உடனே, 'பெருமாள் கணக்கில் வரவு வைத்துக் கொண்டார்' என்ற அருளிப்பாட்டைப் பரிசாரகர் சாதிக்கின்றார். திரட்டிப்பாலும் மணிப்பருப்பும் குழு வழங்கலாகின்றன. பெரியாழ்வாரும் பெருமாளும், ஆண்டாள் - மன்னரும் கருவறை எழுந்தருளுகின்றனர்.

இரவு 8 மணியளவில், பெருமாள் கருட வாகனத்திலும், பெரியாழ்வார் வெள்ளை யானை வாகனத்திலும் அலங்காரமாகின்றனர். ஆழ்வார் குடைவர வாசலைப் பார்த்து நிற்க, பெருமாளோ சந்நிதியுள்ளேயே எழுந்தருளியிருக்கின்றார். அப்போது, கோபுர வாசலாம் குடைவர வாசல் சாத்தித் திறக்கப் படுகின்றது ; கற்பூர தீபாராதனை காட்டப் பெறுகின்றது. ஆழ்வார் பத்தடி முன்னெழுந்துவர, அவருக்கு அருளிப்பாடாகி மாலை, பரிவட்ட, சடாரி மரியாதை நடைபெறுகிறது. அருச்சகர்கள் தாளத்தை ஓசைப் படுத்தி வைக்கின்றனர். பெருமாளுக்கு ஆழ்வார் பாசுரம் சேவிப்பதாய் இதற்கு அருத்தம். மரியாதை பெற்ற அரையர் ஆழ்வாரின் சார்பாக, 'திருப்பல்லாண்டு' சேவிக்கின்றார்.

மதுரையம்பதியில் பெரியாழ்வார் பரத்துவ நிருணயம் செய்தபோது, பெருமாள், கருடா ரூபராய்ச் சேவை சாதிக்க, கண்ணுற்ற ஆழ்வார். பெருமாளுக்குக் கண்ணெச்சில் வந்துவிடுமோ எனப்பயந்து, பொங்கும் பரிவாலே, 'பல்லாண்டு, பல்லாண்டு' எனத் தொடங்கித் 'திருப்பல்லாண்டு' பாசுரம் பாடினார். இந்நிகழ்ச்சியே மேற்கண்டவாறு கொண்டாடப் படுகின்றது. 'மேங்காட்டுப் பொட்டல்' என அழைக்கப்படுகின்ற மதுரை மெய்காட்டும் பொட்டலில், கூடலழகர் எழுந்தருள, இத்திருவிழா விரிவாகக் கொண்டாடப் படுகின்றது.

10.30 மணியளவில் பல்லக்குகளில் அலங்காரமாகி, பெரியாழ்வாரும் பெருமாளும், மாட வீதிகள் கண்டருளியபின், கோபால விலாசம் எழுந்தருளுகின்றனர். அங்கு, ஆண்டாள், மன்னருடனும், பெருமாள், திருமகள் பூமகளுடனும் சேர்த்தியாக மேடையில் அமர்ந்திருக்கின்றனர். 11.30 மணியளவில், பதின்ேமர் ஆழ்வார்களும், ஆசாரியர்களும் இங்கு எழுந்தருளி, சுவாமிகளின் இடப்பக்க இருக்கைகளில் அமர்கின்றனர். 11.30 மணியளவில் அவ்வனைவருக்குமே அலங்காரத் திருவாராதனை நிகழ்த்துப் பெறுகின்றது. தளிகையமுது படைத்தபின், அவரவர் அருளிப்பாடுடன் திருத்திரை வாங்கப்பட்டு, மரியாதை அளிக்கப் படுகின்றது. மரியாதை

பெற்ற அரையர், 'திருப்பல்லாண்டு' வியாக்கியான சேவை யாற்ற, எஞ்சிய திருப்பல்லாண்டுப் பாசுரங்களையும், பெரியாழ்வார் திருமொழி இரு பத்துக்களான 200 பாசுரங்களையும் குழுவினர் சேவிக்க, சாற்றுமுறை யாகின்றது; தீர்த்தப் பிரசாதம் குழுவழங்கலாகின்றது.

அதிகாலை 2.30 மணியளவில், பெருமாள், பல்லக்கில் அலங்காரமாகி மண்டபத்தை மும்முறை வலம்வரும் பத்தி வுலாத்துதலை மேற்கொள்கின்றார். திருவந்திக் காப்புக்குப்பின், பானகமும் விடாய்ப்பருப்பும் படையலாகி, குழு வழங்கலா கின்றன. 4 மணியளவில் கட்டியக்காரர் 'எச்சரிக்கை' சேவிக்க, கைத்தலச் சேவையாகப் பெருமாள் கருவறை சேர்கின்றார். ஆண்டாளும் மன்னரும் பல்லக்கில் அலங்காரமாகிக் கருவறை எழுந்தருளுகின்றனர்.

முதல் திருநாளில் நடைபெறுகின்ற 'பச்சை பரப்பலும்', 'விண்ணப்பம் செய்தலும்' தவிர்த்த எஞ்சிய நிகழ்ச்சிகளனைத்துமே ஒரே சீராக, அடுத்து வருகின்ற ஒன்பது பகற்பத்துத் திருநாட்களிலும் நடைபெறுகின்றன. சேவையாகும் பாடல்களும், வியாக்கியானப் பாசுரங்களுமே மாறுபடுகின்றன.

| திருநாள் | சேவையாகும் பாசுரங்கள் | வியாக்கியானப் பாசுரங்கள் |
|---|---|---|
| 2. | எஞ்சிய பெரியாழ்வார் திருமொழி | 'சென்னி யோங்கு' |
| 3. | நாச்சியார் திருமொழி | 'திருப்பாவை' |
| 4. | பெருமாள் திருமொழி | 'ஊனேறு செல்வம்' |
| 5. | திருச்சந்த விருத்தம் திருப்பள்ளி யெழுச்சி 'அமல னாதி பிரான்' | 'திருமாலை' |
| 6. | பெரிய திருமொழி- முதலிரு பத்துக்கள் | 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' 'வாடினேன் வாடி' |
| 7. | பெரிய திருமொழி-3, 4ஆம் பத்துக்கள் | 'தூவிரிய மலர்' |
| 8. | பெரிய திருமொழி-5, 6, 7ஆம் பத்துக்கள் | 'பண்டை நான்மறை' |
| 9. | பெரிய திருமொழி-8, 9ஆம் பத்துக்கள் | 'தெள்ளியீர்' 'அக்கும் புலியின்' 'முந்துற உரைக்கேன்' |
| 10. | பெரிய திருமொழி- எஞ்சியவை, திருக்குறுந் தாண்டகம் | 'திருநெடுந்- தாண்டகம்' |

அமிர்த மதனம் :

*பாலுடன் தேனூற்றி, அதிலே வாழைப்பழங்களிட்டுப் 'பஞ்சாமிர்தம்' செய்து. அதனை அமிர்தமாக-அமிழ்தாகக் கடைகின்றனர். அதுபோழ்து, அருளிப்பாடாகி மரியாதை பெற்ற அரையர். திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களைச் சொல்லி, வியாக்கியானம் செய்து, தேவர்களுக்கு அமிழ்தம் கொடுப்பதற்காகத் திருப்பாற் கடலைக் கடைந்த நிகழ்ச்சியை அபிநயம் மூலம் விளக்கிக் காட்டுகின்றார்.*[28]

இராப்பத்து - திருவாய்மொழித் திருநாள் :

வைகுண்ட ஏகாதசியன்று அதிகாலை 4 மணிக்கே நாட்பூசனை நடக்கின்றது. 5.30 மணியளவில் ஆண்டாள் கோயில் எழுந்தருளிய பெருமாளும் பெரியாழ்வாரும் தனிப்பல்லக்குகளிலும், ஆண்டாளும் மன்னரும் சேர்த்திப் பல்லக்கிலும் அலங்காரமாகின்றனர். பெருமாளைப் பார்த்துப் பெரியாழ்வாரும், சேர்த்திப் பல்லக்கில் அலங்காரமான நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், உடையவர் ஆகிய மூவரும் போர்வை சாற்றப்பட்டு எழுந்தருளியிருக்கின்றனர்; 'வேதம்' தொடங்கப் பெறுகின்றது.

மாலை பரிவட்ட மரியாதை பெற்ற 'ருக்வேத பட்டர்', யஜுர் வேதப் பட்டர், பெரியகோயில் தாஸர், வேதப்பிரான் பட்டர் ஆகியோர் முறையே 'ருக்', 'யஜுர்', 'சாம', 'அதர்வண' வேதங்களையும் அருச்சகர் வைகானச சூத்திரங்களையும் சேவிக்கின்றனர். 'ஸ்ரீ பாதம் தாங்குவார்' என்ற அருளிப்பாடுடன் பரிசாரகர்கள் இருவருக்கு மரியாதை செய்து, அவர்களைப் பெருமாள், ஆண்டாள் பக்கங்களில் அமர்த்துகின்றனர். நம்மாழ்வாரின் இயற்பாக்களான 'திருவிருத்தம்', 'திருவாசிரியம்', 'பெரிய திருவந்தாதி' ஆகியவற்றை அவ்விருவரும் சேவித்துக் கொண்டே வர, அவ்விரு ஆழ்வார்களும் உடையவரும் புறப்பாடாகின்றனர். பெரிய பிராகாரம் வந்ததும் சேவை நிறுத்தப்பட்டு, வடக்குத் திருச்சுற்று மேலக்கோடி வந்ததும் போர்வைப்படி களையப்பட்டு, திருவடி விளக்கி, பானகம் விடாய்ப்பருப்புப் படைத்து, அடைக்காய் கண்டருளப்பண்ணி, முன்போலவே 'வேத விண்ணப்பம்' செய்கின்றனர். கூடுதலாக, அரையர், நம்மாழ்வாரின் இயற் பாசுரங்களையும், வேதப்பிரான் பட்டர் இதிகாச புராணத்தையும், அப்பன்' என்ற அருளிப்பாடுடன்

ஸ்ரீபாஷ்யக்காரர், 'யதிராஜ விம்சதி' (உடையவர்மேல் பாடப்பட்ட 20 வடமொழிக் கவி) யையும் சேவிக்கின்றனர். இதனை அஷ்டோத்திர உற்சவம் என்கின்றனர். பின்னர், 'இராமாநுசமுடையார்' என்ற அருளிப்பாடுடன் குழுவழங்கல் நடைபெறுகின்றது.

அடுத்து, சொர்க்கவாசல் திறப்பு (இந்நூல், பக். 28-29 நடைபெறுகின்றது. பின்னர், கந்தாடை வீதி வழியாகக் கோபுர வாசல் வந்த அனைவருமே இரவு 8.30 மணிக்குச் சயனர் சந்நிதியின் வடபக்கமுள்ள இராப்பத்து மண்டபம் எழுந்தருளுகின்றனர். 9.30 மணிவரை ஆழ்வார் – ஆசாரியர்கட்கு அருளிப்பாடாக, ஒவ்வொருவருக்கும் மாலை, பரிவட்ட, சடாரி மரியாதை செய்கின்றனர்.

பின்னர் அருளிப்பாடாகி மரியாதை பெற்ற அரையர், திருவாய்மொழித் தொடக்கத்தைக் குறிக்குமுகமாக 'உயர்வற உயர்நலம் உடையவன் எவனோ' என்று தொடங்கும் முதற் பாசுரத்தைச் சேவிக்கிறார். தீர்த்தம் குழுவழங்கலாக, பெருமாள் 10.30 மணி வரை பத்தி உலாவுகிறார். அவருக்குத் திருவந்திக் காப்புச் செய்தபின், 'இராமாநுசமுடையார்' என்ற அருளிப்பாடுடன் குழுவினர்க்கு விடாய்ப்பருப்பும் பானகமும் வழங்கப் படுகின்றன.

ஆண்டாள் – மன்னார், மண்டபத்தின் உரியஇடம் சேர்கின்றனர். அரையரின் படியேத்து சேவைக்குப்பின் பெருமாள் மேடைக்கு எழுந்தருளுகின்றார். ஆழ்வார் – ஆசாரியர்கள், சுவாமி மேடையின் கீழுள்ள வடபக்க இருக்கைகளில் வரிசையாய் எழுந்தருளுகின்றனர்.

> நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாசுர சேவைக்காகவே ஏற்படுத்தப்பட்ட திருநாள் இதுவாதலால். அவர் மட்டும் பெருமாளுக்கு எதிர்ப்புறமுள்ள இருக்கையில் எழுந்தருள்கின்றார்.[29]

சுவாமிகளுக்கு அலங்காரத் திருவாராதனை நிகழ்த்தி, எளிய முறையில் 'வேத விண்ணப்பம்' நடைபெறுகின்றது. ஆழ்வார் – ஆசாரியர்கட்குத் திரைவாங்கித் திருவாராதனை செய்கின்றனர். தளிகையமுது குழு வழங்கலாகின்றது.

நம்மாழ்வாருக்கு அருளிப்பாடாகி, மாலை பரிவட்டத்தை அவ்வாழ்வாரின் கையில் சாற்றுகின்ற மரியாதை நடக்கின்றது. அருச்சகர் தாளத்தை ஓசைப்படுத்தி வைக்கின்றார். நம்மாழ்வார்

பாசுரம் சேவிப்பதாய் அருத்தமாம். குழுவினருக்கு அருளிப்பாடாகிப் பொதுத்தனியன்களில் தொடங்கி, மதுரகவி யாழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' சேவை யாகின்றது. பிற்பகல் 1.30 மணிக்குத் திருவாய்மொழித் தனியனுடன், முதற் பத்தின் முதற் பாசுரமான, 'உயர்வற உயர்நலம்' என்ற பாடலுக்கும் அரையர் ஒருமணி நேரம் வரை வியாக்கியான சேவை செய்கின்றார். அம்முதற் பத்தின் எஞ்சிய பாசுரங்களைக் குழுவினர் சேவிக்கின்றனர். இதனைச் 'சேவா காலம்' என்கின்றனர். சாற்றுமுறைக்குப்பின் குழுவினர்க்குத் தீர்த்தம் வழங்கப் பெறுகின்றது. மாலை 4 மணி அளவில் அனைவருமே கருவறை எழுந்தருள்கின்றனர்.

ஏனைய ஒன்பது நாட்களும் பிற்பகல் 3 மணியளவில் தொடக்கமாகும் இந்நிகழ்ச்சிகள், இரவு 10.30 மணிக்கே முடிவடைகின்றன. ஒவ்வொரு நாளும் சேவையாகும் பாசுரங்களும் வியாக்கியானப் பாடல்களுமே மாறுபடுகின்றன.

| திருநாள் | சேவைப் பாசுரங்கள் | வியாக்கியானப் பாடல்கள் |
|---|---|---|
| 2. | திருவாய்மொழி இரண்டாம் பத்து | 'கதிரொளி இளமை' |
| 3. | திருவாய்மொழி மூன்றும் பத்து | 'ஒழிவில் காலம்' |
| 4. | திருவாய்மொழி நான்காம் பத்து | 'ஒன்றும் தேவும்' |
| 5. | திருவாய்மொழி ஐந்தாம் பத்து | 'எங்ஙனேயோ' |
| 6. | திருவாய்மொழி ஆறும் பத்து | 'உலகமுண்ட பெருவாயா' |
| 7. | திருவாய்மொழி ஏழாம் பத்து | 'கங்குலும் பகலும்' |
| 8. | திருவாய்மொழி எட்டாம் பத்து | 'நெடுமாற் கடிமை' |
| 9. | திருவாய்மொழி ஒன்பதாம் பத்து | 'மாலை நண்ணி' |
| 10. | திருவாய்மொழி பத்தாம் பத்து சாற்றுமுறை– | 'தாள தாமரை' 'முனியே நான்முகனே'. |

எட்டாம் இராப்பத்து நிகழ்ச்சி மட்டும் ஆண்டாள் கோயிலில் நடைபெறுகின்றது. ஒரு கோயில் நிகழ்ச்சியாகவே இஃதமைவதால், 'பரமபத வாசல் திறப்பு' இல்லை[30].

மாலை 6 மணிக்குப் பெருமாள்மட்டும் குதிரை வாகனத்தில் அலங்காரமாகி, வேத விண்ணப்பம் நடந்தபின், மாடவீதி சுற்றி, வடக்கு மாட வீதியில் வையாளி கண்டருளி, ஆண்டாள் கோயில் வந்து சேர்கின்றார். திருமங்கை ஆழ்வாருக்கு அருளிப்பாடாக, மாலை, பரிவட்ட, சடாரி மரியாதை பெற்ற அவர் எழுந்தருளி வர, அவர் சார்பாகப் பரிசாரகர் 'திருவேடுபறி' (இந்நூல், ப. 86). சேவிக்கின்றார். எஞ்சியவை எப்போதும்போல் நடைபெறுகின்றன.

பத்தாம் இராப்பத்துத் திருநாளை, நம்மாழ்வார் பரமபதம் (வைகுண்டம்) சென்று திரும்புவதைச் சித்திரிக்கின்ற சிறப்பு நிகழ்ச்சியாக்கியுள்ளனர்.

பெரிய பெருமாளுக்கும் நம்மாழ்வாருக்கும் திருவாராதனை நடந்தபின், திருவாய்மொழியின் 7, 8, 9, 10 ஆம் பத்துக்கள் சேவை யாகின்றன. அருளிப்பாடாகி, மரியாதை பெற்ற அரையர், 'முனியே நான்முகனே' என்ற பாசுரத்திற்கு வியாக்கியான சேவை யாற்றுகின்றார். அது முடிந்தபின், இரு அருச்சர்கள் ஆழ்வாரைக் குடை, சாமரங்களோடு மலர் தூவிக் கொண்டே கைத்தலத்தில் எழுந்தருளப்பண்ணி, அரையரின் 'முனியே நான்முகனே' என்ற பதிக இசைச் சேவையுடனும், எஞ்சிய பாசுரங்களின் குழுசேவையுடனும் கொஞ்சங் கொஞ்சமாக நகர்த்திக் கொணர்ந்து, பெருமாள் பக்கத்தே எழுந்தருளச் செய்து, அவரின் திருவடிகளில் ஆழ்வாரின் சிரசை வைத்து வணங்கச் செய்கின்றனர். சாற்றுமுறைப் பாசுரங்களைக் குழுவினர் சேவிக்க, இறுதிப் பாசுரத்தை மட்டும் அரையர் சேவிக்கின்றார். மன்னரின் திருவடிகளில் நம்மாழ்வாரைத் தலைவைத்து வணங்கச் செய்கின்றனர். முன்போலவே சாற்றுமுறை சேவை நடக்கின்றது.

> *நம்மாழ்வாரின் திருமேனி மறையும்படித் திருத்துழாயை நிரப்பி வைக்கின்றனர்; கற்பூர ஆரத்தி காட்டுகின்றனர்; 'ஆழ்வார், வைகுண்டம் சேர்ந்துவிட்டார்' என்பதே இதற்கு அருத்தமாம். பின்பு, மூடிய திருத்துழாயை நீக்கி, ஆழ்வாரைப் பெருமாள் முன்புள்ள இருக்கையில் அமர்த்துகின்றனர். தன்னலமாகச் சுவர்க்கத்தை அனுபவிக்காது, மானுடர்களைக் கடைத்தேற்ற*

*வழிவகை செய்கின்ற இவ்வையக வாழ்வே தேவையென்று கூறி ஆழ்வார் மண்ணுலகிற்கு வந்துற்றதை இந்நிகழ்ச்சி அறிவிக்கின்றது.*[31]

பெருமாளுடைய மாலை பரிவட்டத்தை ஆழ்வாருக்குச் சாற்றுகின்றனர். 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' குழுஇசைச் சேவையுடன், பெருமாளைப் பார்த்த வண்ணமே பின்னோக்கிக் கைத்தல சேவையாகக் கொண்டு வரப்பட்ட நம்மாழ்வார், அவரிருக்கை சேர்கிறார். பெருமாளுக்கும் நம்மாழ் வாருக்குமாகச் சேர்த்து, அரையர் 'வாழி மங்கல'த் தையும், சாற்றுமுறையாகப் பரிசாரகர் இயற்பாக்களையும் சேவிக்கின்றனர். தீர்த்தக் குழுவழங்கலுக்குப்பின் அனைவருமே கருவறை சேர்கின்றனர்.

எஞ்சிய நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரச் சேவைக்காகவே, பெருமாள், ஆண்டாள் – மன்னார், ஆழ்வார்கள், ஆசாரியர்கள் ஆகியோர், இப்பதினோராம் திருநாளில், நேராக இராப்பத்து மண்டபம் வந்து சேர்கின்றனர். திருவாராதனைக்குப்பின், குழுவினரால் இயற்பா ஆயிரமும் சேவையாகின்றன. சாற்றுமுறைக்குப்பின் தீர்த்தம், குழு வழங்கலாகின்றது. அனைவரும் கருவறை எழுந்தருளுகின்றனர். எனவே, இன்றும் பரமபத வாசல் திறப்பு இல்லை.

## திருவேடுபறித் திருவிழா :

மார்கழி – எட்டாம் இராப்பத்துத் திருநாளின், பரிசாரகர் சேவையாக இஃதமைகின்றது.

வையாளி கண்டருளிய பெரிய பெருமாள் ஆண்டாள் கோயில் வந்தடைந்தவுடன், திருமங்கை யாழ்வாருக்கு அருளிப்பாடாகின்றது. மாலை, பரிவட்ட, சடாரி மரியாதை பெற்ற அவர், எழுந்தருளி வந்ததும், பரிசாரகர், 'திருமங்கை யாழ்வார் களவுத் தொழில் புரிந்ததையும் அவரைப் பெருமாள் பிராட்டியுடன் வந்து தடுத்தாட் கொண்டதையும்' விளக்கிப் புராணமாகப் படிக்கிறார். அடுத்து, அருளிப்பாடாகி, மரியாதை பெற்ற அரையர், திருமங்கை யாழ்வாரின் 'பெரிய திருமொழி' முதற் பாசுரமான 'வாடினேன் வாடி' என்று தொடங்கும் ஒரு பாசுரத்தைச் சேவிக்கின்றார்.

*நம்மாழ்வாரின் திருவாய்மொழித் திருநாளில். இவ்வாறு 'திருவேடுபறித் திருவிழா' நடத்தித் திருமங்கை யாழ்வாரைச் சிறப்பித்தல் காண்கின்றோம்.*

## எண்ணெய்க்காப்பு (நீராட்டல்)த் திருவிழா :

## திருப்பள்ளி யெழுச்சித் திருவிழா :

*மார்கழி மாதத்து முதல்நாள் எப்போது பிறக்கின்றதோ, அப்போது பெரியாழ்வார் சந்நிதியிலிருந்து பல்லக்கில் அலங்காரமாகிய தொண்டரடிப்பொடி யாழ்வார், அமுதுபடியாம் அரிசியையும், பாசிப் பருப்பு, பூசனிக்காய் போன்றவற்றையும் எடுத்துக்கொண்டு, ஆண்டாள் கோயிலுக்கு எழுந்தருளுகின்றார். அங்குப் பொங்கல் தளிகைக்கு வேண்டிய சாமான்களின் பட்டியல் கணக்கினை ஸ்ரீபண்டாரம் வாசிக்கக் கேட்டருளி யிருக்கின்றார். அதுபோழ்து, ஆண்டாளும் மன்னாரும் ஏகாந்தத் திருமஞ்சனம் முடித்து, மலரலங்காரம் பூண்டு, அலங்கார இருக்கைக்கு எழுந்தருளி, திருவாராதனை கண்டருளி யிருக்கின்றனர். ஆழ்வாருக்கும் ஆராதனை நிகழ்த்தி, அனைவர்க்கும் பொங்கல் தளிகையமுது படைக்கப் படுகின்றது. அவ்வமயம், அருளிப்பாடாகிய அரையர், ஆழ்வாரின் 'திருப்பள்ளி யெழுச்சி'ப் பாசுரங்களைச் சேவிக்க, குழுவழுங்கலாகின்றது. இதேபோல் பெருமாள், பெரியாழ்வார் சந்நிதிகளுக்கு எழுந்தருளிய இவ்வாழ்வாரின் சார்பாக, அரையர் 'திருப்பள்ளி யெழுச்சி' சேவிக்கக் குழுவழுங்க லாகின்றது. அதன் பின்னரே, இவ்வாழ்வார் தனதிருப்பிடம் சேர்கின்றார். இவ்வாறே இம்மாதம் முடிய நாடோறும் 'திருப்பள்ளி யெழுச்சி' நடைபெறுகின்றது.*

> *பகற் பொழுதான தைத்திங்களுக்கு முந்திய மார்கழி தேவர்களுக்கு வைகறையாம். அதிகாலைப் பொழுது ஆண்டவனைத் தொழுதேத்தும் இறை வழிபாட்டிற்கு ஏற்ற காலம் என்பதறிந்தே இம்மாதத்தில் 'திருப்பள்ளி யெழுச்சி' என வழிபாடு வைத்துள்ளனர் எனக்கொள்ளலாம்*[32].

> *இப்பள்ளி யெழுச்சிப் பாசுரங்களை யாத்த தொண்டரடிப்பொடி யாழ்வாரே, அனைவரையும் துயிலெழுப்புவதாய் அமைத்த இந்நிகழ்ச்சி, அறிந்து இன்புறத் தக்கதாம்.*

## திருப்பாவைத் திருநாள் :

*மார்கழித் திங்களின் முதல்நாள் தவிர்த்த எஞ்சிய எல்லா நாட்களிலும், அதிகாலை 4 மணிக்கு ஆண்டாள் கோயில் திருக்கடைக் காப்பு விலக்கப் பெறுகின்றது. திருப்பள்ளி யெழுச்சிச் சேவைக்குப் பின்னர், ஆண்டாளருளிய*

திருப்பாவை முப்பது பாசுரங்களையும் நாடோறும் சேவிப்பதோ டல்லாது, இம்மாதம் முழுவதும் ஆண்டாள் கோயிலில் சிறப்புப் பூசனை நடைபெறுகின்றது.

இம்மார்கழியின் இறுதி நாளன்று, திருமகள் பூமகளுடன் எழுந்தருளிய பெருமாள், ஆண்டாளின் சிம்மாசனத்தில் அமர்கின்றார். ஆண்டாளையும் கருடாழ்வாரையும் பக்கத்திலமர்த்திய வண்ணம் மன்னார், பக்கத்து இருக்கையில் எழுந்தருள, அவர்களருகே ஆழ்வார்களும் ஆசாரியர்களும் வரிசையாய் எழுந்தருளுகின்றனர். வழக்கம்போல் திருவாராதனை நடக்கிறது. 'கோயிலண்ணன்' என்ற அருளிப்பாடுடன், உடையவர் மரியாதை பெறுகின்றார். குழுவினர் 'கூடாரை வெல்லும் சீர்' எனத்தொடங்கும் முதற் பாசுரம் முதல் முப்பது 'திருப்பாவை'ப் பாசுரங்களையும் சேவிக்கின்றனர். பரிசாரகர், இயற்சாற்று (சாற்றுமுறையாக இயற்பா சேவித்தல்) சேவிக்க, தீர்த்தம் குழு வழங்கலாகின்றது. இவ்வாறு திருப்பாவைத் திருவிழா முற்றுப் பெறுகின்றது.

> *இந்நாட்களில் 'திருப்பாவை' முப்பது பாசுரங்களும் சேவையாவதால் இப்பெயர் பெற்றது.*

## பிரியாவிடைத் திருவிழா :

இரவு 9 மணியளவில் புறப்பாடாகிய ஆண்டாள், சிங்கம்மாள் குறடு வந்து சேர்கின்றார். திருமஞ்சன, அலங்கார, ஆராதனைக்குப்பின், 9.30 மணிக்குக் கைத்தலச் சேவையாகப் பெருமாள் சந்நிதி எழுந்தருளுகின்றார். அங்கு, ஏகாந்தத் திருமஞ்சனமான ஆண்டாளுக்கும், சயனருக்கும் தனித்தனியாகச் சிறப்புப் பூசனை நடைபெறுகின்றது. பால், பழம், வெற்றிலை, பாக்கு, பட்சணங்கள் படையலாகின்றன. 11 மணியளவில் ஆண்டாளைக் கைத்தலச் சேவையாகப் பெருமாளின் கருவறையில் சேர்க்கின்றனர். ஏனைய உற்சவ மூர்த்திக ளெல்லாம் வெளியிலேயே விட்டுவைக்கப் படுகின்றனர். அரையரின் 'திருப்பாவை' வியாக்கியானச் சேவைக்குப்பின், கித்தான் சாக்காலான திரை சேர்க்கப் படுகின்றது.

நள்ளிரவு 12 மணிக்குத் திருக்காப்பு நீக்கப் படுகின்றது. 'திருப்பாவை' முதற் பாசுரத்திற்கு வியாக்கியானம் செய்த அரையர், ஏனைய 29 பாடல்களையும் சேவிக்கின்றார். பரிசாரகர் திருவிழா நிகழ்ச்சிகளை வாசிக்க, ஸ்ரீபண்டாரம் கணக்குக் காட்ட, மணியம் பஞ்சாங்கம் படிக்கின்றார். அதிகாலை 2.30 முதல் 4.30 மணி வரை 'பொதுசன சேவை'க் காகத்

திருக்காப்புத் திறந்தே இருக்கின்றது. அதன்பின்னர், ஆண்டாள் மட்டும் அலங்காரமாகிப் பெரியாழ்வாருக்கு 'மங்களா சாசனம்' செய்தபின், கருவறைக்கு எழுந்தருளுகின்றார்.

> இவ்வாறு, நீராட்ட நோன்பிற்காகப் பெரிய பெருமாளிடம் ஆண்டாள் விடைபெற்றுச் செல்வதாக இந்நிகழ்ச்சிகள் அமைவதால், 'பெரியாளிடைத் திருவிழா'

எனப்பட்டது.

## எண்ணெய்க் காப்பு (நீராட்ட)த் திருவிழா :

காலை 8 மணியளவில் தங்கப் பல்லக்கில் அலங்காரமாகிய ஆண்டாள், மாடவீதிகள் சுற்றி, அண்ணாமலை விடாயாற்று மண்டபம் கண்டருளி, கந்தாடை வீதி வழியாகச் சயனர் கோயில் கோபுரத்தடி வந்தடைகின்றார். அங்குப் போர்வைப்படி களைந்து திருவடி விளக்கம் நடைபெறுகின்றது. அருளிப்பாடாகிய அரையர், மரியாதை பெற்று, "மாலே ! மணிவண்ணா !" என்ற பாசுரத்தை இசையுடன் சேவிக்கின்றார். அந்த 'நாட் பாட்டு' க்குப் பின் தீர்த்தமும் சடாரியும் குழுவழுங்கலாகின்றன. அடுத்து, வீதிவலம் செல்லுகின்ற ஆண்டாள், கோபுரத்தடி திரு. தாத்தாச்சாரியார், பப்புச்செட்டி சென்னை இராகவையா செட்டியார் சேரிட்டி, பாலூரையங்கார் – ஸ்ரீனிவாசாச்சாரியார், அப்பய நாயக்கர் – ரெங்கையா செட்டியார், வெள்ளா குளம் இராசமையங்கார், ஆலத்தூர், டி.எஸ். சீனிவாச ஐயங்கார், தூத்துக்குடிக்காரரின் யானைகட்டி மண்டபம் ஆகியோரின் மண்டபங்களில் விடாயாற்றி, கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று நதித் தீர்த்தங்களும் வந்து பெருகிய திருக்குளம் எனக் கருதப்படும் திருமுக்குளத்தின் கரையிலுள்ள எண்ணெய்க் காப்பு மண்டபம் எழுந்தருளுகின்றார்.

அங்குள்ள தங்க வட்டவணையில் (குறட்டில்) எழுந்தருளி இருக்கின்ற ஆண்டாளுக்குத் திருத்திரை வாங்கி, உச்சிக் காலப் பூசனை நடைபெறுகின்றது. பட்டர்பிரான் சுருளாக ஆண்டாளுக்கு வெற்றிலை பாக்கு அமுதாக்கப் படுகின்றது. குழுவழுங்கலுக்குப்பின் வேத விண்ணப்பம் (நான் மறையிலிருந்து சில சுலோகங்கள்) சொல்லப் பெறுகின்றது.

பிற்பகல் 2 மணியளவில் திரைபோட்டு, ஆண்டாளுக்கு உட்கார்ந்த அவசரத்தில் அலங்காரம் செய்கின்றனர். அவருக்குச் சவுரி சாற்றி, பின்னல் போட்டு, நெற்றிச்சுட்டி சூட்டி, சூரிய, சந்திரப் பிரபைகள், காதுசரம், பந்துசரம், இராக்குடி (ஒருவகைக் கொண்டை), இரத்தினச்சடை,

கமலம் போன்ற பற்பல நகையலங்காரம் மேற்கொள்கின்றனர். மூக்குத்தி போட்டபின், சிவப்பு நிற இரத்தினக் கற்கள் பதித்த நகைகளால் கழுத்தலங்காரம் செய்து, உடைகாரம், மகர மச்சம், இரத்தினக் கிளி ஆகியன அணிவிக்கின்றனர். உடல் முழுவதும் மூன்று போர்வைகள் சாற்றி, அவற்றிடையே மும்மூன்று நெல்லிக்காய், பவளமணி மாலைகளை அணிவிக்கின்றனர்.

## எண்ணெய்க்காப்பு ( தைலக்காப்பு)ச் சேவை :

'சிறிய திருமடலே'ப் பரிசாரகர்கள் சேவிக்கத் திரைதிறந்து கற்பூரம் காட்டப் பெறுகின்றது. இரு அருச்சர்களும் நான்கு பரிசாரகர்களும் ஆண்டாளுக்கு நீராட்டக் கைங்கர்யங்கள் செய்ய ஆயத்தமாகின்றனர்.

திருமன்பந்தம் எரிந்து கொண்டிருக்க, பாகவதர்கள் கீர்த்தனைகளையும் பாசுரங்களையும் பாடுகின்றனர். அரையர் இசை சேவிக்க, பரிசாரகர் 'திருவாசிரிய'ப் பாசுரங்களைச் சேவிக்கின்றார். மிருதங்க நாதஸ்வர இன்னிசையும் சேவையாகின்றது. இடையிடையே திருச்சங்கொலி எழுப்பப் படுகின்றது.

முதற்கொத்து எண்ணெய்க்காப்புச் சாற்றும் அருச்சகர், ஆண்டாள்மேல் சாற்றியுள்ள போர்வைகளை ஒவ்வொன்றாகப் படிகளைந்து, இடையேயுள்ள திருவாபரணங்களை இரண்டாங்கொத்து எண்ணெய்க்காப்புச் சாற்றும் அருச்சகர் ஏந்தியுள்ள தாம்பாளத்திலிட, அவர் அவற்றைச் சரிபார்த்து வாங்கி வைக்கின்றார். ஒவ்வொரு படிகளைதலின் போதும் கற்பூரம் காட்டப் பெறுகின்றது.

பரிசாரகர் 'கலசப் பானை' எனப்படும் கெண்டியிலிருந்து தீர்த்தம் விடுவதற்கெனப் படிக்கட்டில் நின்று கொண்டிருக்கின்றார். அக்கெண்டியிலிருந்து வீழ்த்தும் தீர்த்தத்தில் அலம்பித் தூய்மையாக்கப்பட்ட துளசி இலைகளால், அருச்சகர் ஆண்டாளின் திருக்கை, திருக்கால், திருமார்பு, திருமுக மண்டலம் முதலானவற்றைத் துடைத்துத் தூய்மை யாக்குவதாய்ப் பாவனை செய்கிறார். இச்செய்கை இருமுறை நிகழ்த்தப் பெறுகின்றது.

இங்கு, "புறந்தூய்மை நீரா னமையும்" என்ற வள்ளுவரின் கூற்று மெய்ப்பாடாதல் காண்கின்றோம்.

பின்பு, துண்டுகொண்டு இருமுறை பாவனையாக, ஆண்டாளின் திருவுடம்பைத் துவட்டித் துடைத்துத் துண்டினைப் பிழிகின்றார். அடைப்பைக்காரராய்ச் சட்டையும் தலைப்பாகையும் அணிந்து அதுவரை காத்திருந்த பரிசாரகர், சிம்மமுக யாளி வடிவ வெற்றிலைச் செல்வத்தினின்றும், மடித்து அடுக்கிய வெற்றிலைகளை ஒவ்வொன்றாக அருச்சகரிடம் ஒப்படைக்க, அதனை ஆண்டாளின் கைவழியாக வாய்வரை மெதுவாகக் கொண்டு சென்று, வாயிலிடுவது போல் பாவனை செய்து, திரும்ப எச்சில் கிண்ணத்தில் இடுகின்றார். இவ்வாறு மும்முறை செய்தபின், கெண்டித் தீர்த்தத்தை நிரப்பிய கிண்ணத்தை ஆண்டாளின் கைவழியே வாய்வரை கொண்டு சென்ற அருச்சகர், அதிலுள்ள நீரை எச்சில் கிண்ணத்தில் ஊற்றுகின்றார். இச்செயலும் மும்முறை நிகழ்த்தப் பெறுகின்றது.

அடைப்பைக்காரரிடமிருந்து வெற்றிலை வாங்கிப் போட்ட ஆண்டாள், தற்போது வாய்கொப்புளிப்பதாக இச்செயல் அமைகின்றது.

பரிசாரகர் ஒருவர் ஆண்டாளுக்குக் கண்ணாடி காட்டுகின்றார். தங்கக் குச்சியினால் பல்துலக்கி, தங்க நாக்கு வழிப்பானால் நாக்கு வழிக்கும் ஆண்டாளின் காலைக்கடன் நிகழ்ச்சிகளை அருச்சகர் இருமுறை மெய்ப்பாடாக்குகின்றார்.

இப்போது, ஏற்கனவே அணிவித்த அனைத்து ஆபரணங்களையும் படிகளைந்து, சரிபார்த்து வைக்கின்றனர். அடுத்து, பின்னலை அவிழ்த்து உதறிக் கோதி, இருபாக மாக்கிய அருச்சகர், நடு வுச்சியின் இருபக்கக் கூந்தலையும் இரண்டிரண்டாக்கி நான்கு பாகமாக்குகின்றார். அந்நான்கு பகுதிகளிலும் பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, வாசனைத் திரவியம் கலந்த பொடியினைத் தூவித் தலையைக் கோதுகின்றார். இடையிடையே பரிசாரகர் கண்ணாடி காட்டுகின்றார். சிடுக்குவாரி கொண்டு மும்முறை சிக்கெடுத்துத் தலையைச் சீப்பினால் கோதி விடுகின்றார் ; அதுபோழ்து கழிகின்ற கூந்தல் முடிகளைப் பரிசாரகரிடம் சமர்ப்பிக்கின்றார். துண்டினை ஏந்தி வாங்கிய அவர், அவற்றை அப்புறப் படுத்துகின்றார். ஆண்டாளின் நெற்றியில் அருச்சகர் அழகான குங்குமப் பொட்டிடுகின்றார்.

பின்னர், மொத்தக் கூந்தலையும் இருபாகமாக்கிய அருச்சகர், தைலக் காப்பினை அடிமுடியிலிருந்து நுனித் தலைமுடிவரை இட்டும், தலையைச்சுற்றி வைத்தும் ஐந்தாறு நிமிடங்கள் வரை தலையைத் தட்டி, எண்ணெய் உள்ளிறங்கும்

வண்ணம் அழுத்தித் தேய்ப்பதாகப் பாவனை செய்கின்றார்.

> *இங்குப் பயன்படுத்தப்பெறும் தைலக் காப்பு. கார்த்திகைத் திங்கள் நல்ல நாளிலே. ஆயிரக்கணக்கான ரூபாய் செலவில். ரோஜா. செண்பகமொட்டு. மலங்காட்டுப் பச்சிலை போன்ற மூலிகைகளிலிருந்து காய்ச்சி எடுக்கப்பட்டதாகும். இத்தோடு மணப் பொருட்களையும் தகுந்த அளவு கலப்பதனால் மணமிக்கதாய் இருக்கின்றது.*[33]

முன்போலவே மும்முறை தாம்பூலம் போடுவதும், வாய் கொப்பளிப்பதும் பாவனை யாகின்றன. அடுத்து இரண்டாங் கொத்து எண்ணெய்க் காப்பு அருச்சகரால் முன்போலவே ஆண்டாளுக்கு எண்ணெய் சாற்றப் பெறுகின்றது. மூன்றாங் கொத்து எண்ணெய்க் காப்பு சாற்றும்போதே தாம்பூலம் தரிப்பதும் உடனிகழ்கின்றது.

> *ஆண்டாள் ஒரு கையால் எண்ணெய் தேய்த்துக் கொண்டு, ஒருகையால் தாம்பூலம் தரிப்பதையே இ:துணர்த்துகிறது.*

அடுத்து, கண்களைத் துடைத்து விடுதலும், தலையை ஒத்தி எடுத்தலும் பாவனை யாகின்றன.

பின்னர், வெள்ளிச் சீப்பினால் தலையை வாரிச் செருகிக் கொண்டை போடுகின்ற அருச்சகர், அதன்மேல் மலர்ச்சரத்தைச் சுற்றி விடுகின்றார். திருவுடம்பிலும், திருக்கை, கால்களிலும் உபசாரமாக எண்ணெய்க் காப்பு இடுகின்றார். முடிவில், திருத்துழாயினை ஆண்டாளின் திருவடிகளில் சமர்ப்பித்துக் கற்பூர தீபாராதனை நடத்துகின்றார். தைலக் காப்புப் பிரசாதத்தைக் கோயிலின் முதல் மரியாதைக் குரியவரான அரையர் குழுவிற்கு வழங்குகின்றார். பல்லக்கில் எழுந்தருளிய ஆண்டாள் அம்மண்டபத்து நான்கு மூலைகளுக்கும் செல்வதாகிய பத்திலாவுதலை மேற்கொள்கிறார். அம்மூலைகளில் நின்றிருக்கும் கேள்வைக்காரர் ஆண்டாளை அடைக்காய் அமுது பண்ணச் செய்கின்றார். தீர்த்தம், குழுவழங்க லாகின்றது.

பிற்பகல் 4.45 மணி அளவில், முன்மண்டபத்திலுள்ள திருமஞ்சனத் தொட்டிக்கு ஆண்டாள் எழுந்தருளுகின்றார். அங்குத் திருமஞ்சனப் பரிவட்டங்களும், மலர்க் கொண்டைகளும் சாற்றி அலங்காரமாகின்றார். தீர்த்தம் நிரப்பிய ஒன்பது கும்பங்களுடன் கன்னியர் தங்கக்

குடத்திணையும் வைத்துப் பூசனை செய்து, ஆண்டாளின் திருவடி விளக்கி, தீபதூபம் சமர்ப்பித்து, நீராட்ட மஞ்சட் காப்பினைச் சாற்றி, எஞ்சிய மஞ்சட் காப்பினை ஆண்டாளின் பிரசாதமாக அனைவர்க்கும் வழங்கியபின் ஆண்டாள் நீராடலாகின்றார். அலங்காரத் திருமஞ்சனக் கவியின் தமிழ் - வடமொழித் தனியன்களை வேதப்பிரான் பட்டர் சேவிக்க, அடுத்து அவருடன் பரிசாரகரும் சேர்ந்து வேத பாராயணங்களை முழக்க, முதலில் திரையிட்டு, பால், மஞ்சள், வாசனைப் பொடிக் கலவையால் நீராட்டுகின்ற ஏகாந்தத் திருமஞ்சனம் நிகழுகின்றது. அடுத்து, அரையர் இசையுடன் அனைவரின் முன்னிலையிலும் எண்கலசத் தீர்த்தத்தினால் நீராட்டுகின்றனர். ஒன்பதாவது கலசத்திலுள்ள மஞ்சள் கலந்த மங்களத் தீர்த்தத்தைச் 'சங்க நிதி', 'பதும நிதி' என்ற இரு பாத்திரங்களிலிட்டு, இரு அருச்சகர்கள் ஆண்டாளை நீராட்டுகின்றனர். இதையடுத்து, தலைக்கு நேர்மேலே துவாரங்களுள்ள தாம்பாளத்தைப் பிடித்துக்கொண்டு, அதன் வழியாகத் தீர்த்தத்தை இட்டு நீராட்டுகின்ற 'சகஸ்ர தாரா அபிஷேகமும்' நடைபெறுகின்றது. இதனை ஒன்பது குடமுழுக்கு (நவகலச ஸ்தபனம்) என்கின்றனர். இறுதியாகக் கன்னையா தங்கக்குடத் தீர்த்தத்தினால் ஆண்டாளை நீராட்டுகின்றனர்.

இரவு 7 மணியளவில் திரையிட்டு, ஆண்டாளுக்குச் சவுரி சாற்றிச் சிறப்புக் கொண்டையிட்டுத் தலையலங்காரம் செய்து அணிகலன்களைப் பூட்டுகின்றனர். திரை விலக்கிக் கற்பூர தீபாராதனை செய்கின்றனர். பல்லக்கில் எழுந்தருளுகின்ற ஆண்டாள், முன்போலவே பத்தி உலாவுகின்றார். அரையரின் படியேற்று சேவைக்குப்பின் மண்டபத்துக் கெழுந்தருளி, அம்மானை ஆடுகின்றார்.

*ஆண்டாளுக்காக அருச்சகர், வெள்ளியுருண்டை இரண்டினை மாறி மாறிப் போட்டுப் பிடிக்கின்றார்.*[34]

சுண்டல் - புளியோதரை படையலாகிக் குழுவழங்கலாகின்றது.

*காலை நிகழ்ச்சியான 'ஆண்டாள் நீராட்டு', மாலைப் பொழுதில்நடைபெறக்காரணம், விழாச்சடங்குகளின் மிகுதியே.*[35] *மக்கள் கூட்டம் மிகுதியாக வந்து கண்டு களிக்க வசதியான மாலை நேரத்தில் காலை நிகழ்ச்சி நடத்திக் காட்டப் பெறுகின்றது எனலாம்.*

இரவு 8.30 மணியளவில் கண்ணாடிச் சப்பரத்தில் அலங்காரமாகிய ஆண்டாள், மணியம் பஞ்சாங்கம் வாசிக்க, அனைவருக்கும் வெற்றிலை பாக்கு வழங்கப்பட்டபின்,

திருமுக்குளத்தின் வடகரை வழியாகக் கான்பூர் இராசப்பா மண்டபம், சிங்கம்மாள்புரத் தெரு – வாழைக்குளத் தெரு மண்டபங்களில் விடாயாற்றி, வடக்கு ரத வீதியின் மேல மூலை வந்து சேர, அனத்யயன காலமாதலால் இயல் தொடக்கமாகி, உபதேச ரத்தின மாலை சேவையாக, ஏனைய ரதவீதிகளை வலம் வந்து, கந்தாடை வீதி வழியாக இராச கோபுர வாசல் வந்து சேர்கின்றார். குழுவினரால் அன்றைய 'நாட்பாட்டு' (அனத்யயன காலமாதலால் நூற்றந்தாதிகள்) சேவையாகின்றது.

வில்லிபுத்தூர் உறைவானாகிய பெருமாள் வீதிவலம் சென்று திரும்பி முன்குறட்டுக்கு எழுந்தருளுகின்றார். அவருக்குத் திருவடி விளக்கியபின், திருவந்திக் காப்புச் செய்யப்படுகிறது. அதுசமயம், பெருமாளருகே ஆண்டாளோ, சடாரியோ எழுந்தருளியிருக்கக் காணலாம். பானகமும் விடாய்ப் பருப்பும் படையலாகின்றன. அரையர், திருப்பாவையின் முதல் நான்கு பாசுரங்களைச் சேவிக்கின்றார். (அனத்யயன காலத்தில் கோயிலினுள் பாசுர சேவை நிகழ்த்தலாம்) குழுவழுங்கலுக்குப்பின், அரையர் 'பல்லாண்டு' சேவிக்க, பெரியாழ்வாருக்குப் பெருமாள், 'மங்களா சாசனம்" செய்கின்றார். வீதிவலத்திற்குப்பின் பெருமாள் கருவறை சேர்கின்றார்.

ஆண்டாள், மன்னருடன் சேர்த்தியாய் எழுந்தருள, பக்கத்து இருக்கையில் திருப்பாவை ஜீயரான உடையவர் எழுந்தருளுகின்றார். மூவருக்கும் சேர்த்தித் தீபாராதனை செய்து, சம்பா அமுது படைக்கின்றனர். 'கோயிலண்ணன்' என்ற அருளிப்பாடோடு, உடையவருக்கு ஆண்டாள் மன்னர் 'மங்களா சாசனம்' செய்கின்றனர்.குழுவினர் திருப்பாவையின் முதல் நான்கு பாசுரங்களைச் சேவிக்கின்றனர். குழு வழுங்கலுக்குப்பின், நள்ளிரவுப் பூசனை நடக்கின்றது. எஞ்சிய ஏழு நாட்களும் இவ்வாறே நடைபெற, காலைப் பல்லக்கில் எழுந்தருளும் பெரிய பெருமாளின் திருக்கோலம் ஒவ்வொரு நாளும் மாறுபடக் காண்கிறோம்.

| திருநாள் | காலை வாகனம் | காலையில் பெருமாள் கொள்ளும் திருக் கோலம் | மாலை வாகனம் |
|---|---|---|---|
| 2. | தங்கப் பல்லக்கு | கள்ளழகர் | சந்திரப்பிரபை |
| 3. | தங்கப் பல்லக்கு | கண்ணன் | தந்தப் பரங்கி நாற்காலி |
| 4. | தங்கப் பல்லக்கு | முத்தங்கி சேவை | தங்க சேஷ வாகனம் |
| 5. | தங்கப் பல்லக்கு | சுந்தர ராசன் | தங்க ஹம்ஸ வாகனம் |
| 6. | தங்கப் பல்லக்கு | வீற்றிருந்த திருக் கோலம் | கனக தண்டியல் |
| 7. | தங்கப் பல்லக்கு | தங்கக் கவசம் | ஆளேறும் பல்லக்கு |
| 8. | தங்கப் பல்லக்கு | நின்ற திருக் கோலம் | தங்கப் பல்லக்கு |

ஆறும் திருநாளன்று ஆண்டாளுக்குச் சவுரித் திருமஞ்சனமும் மூக்குத்தி சேவையும் சிறப்பாக நடைபெறுகின்றன.

எட்டாம் திருவிழா, மணவாள மாமுனிகள் கண்டு களித்தற் பொருட்டு நடத்தப் பெறுகின்றது. தை மாதப் பிறப்பான அன்று காலை ஆண்டாள் மட்டும் புறப்பாடாகி, நேராக நீராட்ட மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றார். அவரை மேற்கு நோக்கி அமரச் செய்தும், அடுத்து, சவுரியோடு கிழக்கு நோக்கி அமரச் செய்தும் எண்ணெய்க் காப்பு சாற்றப் படுகின்றது; திருமஞ்சனம் நிகழ்த்தப் பெறுகின்றது. குழுவழுங்கலுக்குப்பின், காலையில் வந்த பல்லக்கிலேயே ஆண்டாள் அலங்காரமாகின்றார். பெருமாள் சந்நிதிக் கோபுரத்தினுள் நுழையும்போது, இம்மாதிரியான திருவிழாவினைச் சேவித்த கம்ப நாடன் காணிக்கையாய் அளித்த 'கம்பன் சொச்சு' என்ற தங்கக் குஞ்சலம் ஆண்டாளுக்குச் சாற்றப் படுகின்றது ; கற்பூரம் காட்டப் பெறுகின்றது.

இம்மார்கழி – நீராட்டத் திருவிழாவினை மக்களுக்கு விளக்கிக் காட்டுமுகமாக, 17.1.81 'தினமலர்' செய்தித் தாளில் 'ஸ்ரீ ஆண்டாளின் தவம் நீங்களும் பார்க்க வேண்டாமா' என்ற தலைப்பில் செய்தி வெளியாகி யுள்ளது.[36]

ஏனைய நாட்கள் போலவே வீதி வலத்திற்குப்பின் பெருமாள் குறட்டுக்கு எழுந்தருள, நாட்பாட்டாகத் 'திருப்பாவை' முழுவதையும் அரையர் சேவிக்கின்றார். குழுவழங்கலுக்குப்பின் பெரியாழ்வார் எழுந்தருளி, 'திருப்பல்லாண்டு' சேவிக்கின்றார். சந்நிதி வீதி வழியாக முனிகளின் சந்நிதி முன்பு எழுந்தருளிய ஆண்டாளிடம் 'மங்களா சாசனம்' பெறுதற்பொருட்டு, அம்மாமுனிகளின் அருச்சக மூர்த்தியைக் கைத்தலச் சேவையாக எழப்பண்ணிக் கொணர்கின்றனர் ; வெற்றிலை, பாக்கு, பழம் ஆகியவற்றை ஆண்டாளுக்கு அமுதாகப் படைக்கின்றனர். முனிகளுக்கு ஆண்டாள் மரியாதை வழங்கியபின், கற்பூரம் காட்டுகிறார்கள். அவ்வேளை ஆண்டாளை முனிகள் வலம் வந்து தொழுது பாசுரம் சேவிக்கின்றார். அவர் சார்பாகக் குழுவினர் ஆண்டாளைப் பற்றி முனிகள் யாத்த பாசுரங்களைச் சேவை யாக்குகின்றனர். அதன் பின்னர் முனிகள் கருவறை சேர, ஆண்டாள் கல்யாண மண்டபம் எழுந்தருளுகின்றார். உபதேச ரத்தின மாலை சாற்றுமுறைக்குப் பின், திருத்துழாயும் சடாரியும் குழுவழங்கலாகின்றன. கற்பூர ஆரத்திக்குப்பின், ஆண்டாள் தெற்குப் பெரிய பிராகாரத்திலுள்ள ஊஞ்சல் மண்டபம் சேர்கின்றார் ; ஊஞ்சலாடி மகிழ்கின்றார். (இந்நூல், பக். 73-74).

> *கார்த்திகை தீபத்தன்று, வீடுகளிலும் வீதிகளிலும் நிறுத்தியிருந்த பிரபந்தப் பாசுரங்களெல்லாம் , அனத்யயன காலம் முடிந்தமையால் தைத்திங்கள் முதல்வெள்ளியன்று 'திருப்பல்லாண்டில்' தொடங்கிப் படிக்கப் பெறுகின்றன.*[37]

**நாட்கதிர் சாற்றுதல் :**

மணவாள மாமுனிகளுக்காக நடத்திக் காட்டப் பெறுகின்ற மார்கழி எட்டாம் திருநாள் நிகழ்ச்சியின்போது, ஊஞ்சலில் எழுந்தருளிய ஆண்டாளின் திருவடிகளில், பரிசாரகரால் ஏவப்பட்ட கோயில் அலுவலர் கொணர்ந்த புது நெற்கதிர்களை அருச்சகர் சமர்ப்பிக்கின்றார். இதனையே 'நாட்கதிர் அறுப்பு' என்றும் கூறுகின்றனர்.

> *உழவர் திருநாளாம் தைப்பொங்கலின் சிறப்பினைச் சித்திரிக்கும் சிறுவிழாவாகவே இதனைக் கொள்ளலாம். நல்ல கணவனாக மன்னரை அடைவதோடு, நாடு செழிக்க நல்லமழை பெய்ய வேண்டுமென்று மார்கழி-நீராட்டப் 'பாவை நோன்பு' ஏற்றிருந்த ஆண்டாளின் தவம் நிறைவேறியதன் அறிகுறியாகவே*

*இந்நிகழ்ச்சியைக் கருதலாம். இதனுல், 'தைப்பிறந்தால் வழிபிறக்கும்' என்ற முதுமொழி நிலைபேறடைதல் காண்கிறோம்.*

கனுத் திருவிழா :

தை உஆம் நாளின் மாலை நிகழ்ச்சியாக இஃதமைகின்றது. அன்றுமாலை ஆண்டாள் மட்டும் தந்தையான பெரியாழ்வார் சந்நிதி எழுந்தருளி, அவரின் அலங்கார இருக்கையில் அமர்கின்றார். கீழே, வடபக்கத்தில் ஆழ்வார் எழுந்தருள, இருவருக்குமே ஆராதனை நடக்கின்றது. தளிகை அமுது படையலாகிக் குழுவழுங்கலாகின்றது.

வாத்தியக் கருவிகளின் இன்னிசை முழக்கத்தோடு, சாலியர்கள் (நெசவாளர்கள்) கொணர்ந்த கருக்குச் சேலையாம் புதுச்சாயச் சேலையை ஆழ்வாரின் சார்பாக ஆண்டாளுக்குச் சமர்ப்பிக்கின்றனர். அதன் பின்னரே ஆண்டாள், சந்நிதி சேர்கின்றார்.

*தந்தை பெரியாழ்வார் சந்நிதியைப் பிறந்தகமாகக் கருதி, உரிமையோடு வந்த ஆண்டாளுக்கு, உரிய மரியாதையுடன் ஆழ்வார் உணவும் உடையும் அளித்து, புகுந்த இடத்திற்கு வழியனுப்பி வைப்பதாய் இந்நிகழ்ச்சியைக் கொள்ளலாம்.*

இரவு - முத்துக்குறி (இந்நூல், ட-பக். 121-122). அது முடிந்த பின்னர், ஆண்டாள் மன்னருடன் வெள்ளிக் கிறுமைக் குறட்டில் எழுந்தருளியிருக்க, இருவருக்கும் அரையர் வாழி மங்கலம் சேவிக்கிறார். சேர்த்தியில் திருவந்திக் காப்பாகி, தளிகை யமுது படையலுக்குப்பின், வடமொழிக் கவியை வேதப்பிரான் பட்டரும், தமிழ்க் கவியை ஸ்தானீகரும் சேவிக்கின்றனர். ஏகாந்தத் திருமஞ்சனத்திற்குப் பின் குழுவழுங்கலாக, இருவரும் கருவறை சேர்கின்றனர்.

இவ்வாறு, இம்மார்கழியில் பற்பல திருவிழாக்கள் பாங்காக நடைபெறுவதால்,

*மார்கழி மாதத்தைப் பீடை மாதம் என்று சொன்னுலும் அம்மாதம்தான் மங்களகரமாகக் காட்சியளிக்கும்.*[38]

என்ற சாமி சிதம்பரனாரின் கூற்று மெய்யாதல் காண்கின்றோம்.

தெப்பத் திருவிழா :

இது, மாசித் திங்கள் முழுநிலவுக்கு முன்தினம் தொடங்கிப் பின் தினத்தோடு முடிவடைகின்ற மூன்று நாள் திருவிழாவாக அமைகின்றது. 'ஸ்ரீவில்லிபுத்தூரில் தெப்பத் திருவிழா' என்ற கொட்டை எழுத்துக்களாலான சுவரொட்டிகள் நகரெங்கணும் சுவர்களில் ஒட்டப் படுவதோடு பேருந்துகளிலும் சுமையூர்திகளிலும் ஒட்டிவிடப்படுகின்றன. 'ஸ்ரீவில்லிபுத்தூரில் இன்று தெப்பத் தேர்த் திருவிழா'. 'ஸ்ரீவில்லிபுத்தூரில் தெப்பத் திருவிழா' என்ற தலைப்புகளில் இருநாட்கள் இத்திருவிழா பற்றிய செய்திகள் வெளியிடுவதுடன், 'ஸ்ரீவில். தெப்பத்தில் தெய்வீக திருவுலா'– சிறப்பு மலரொன்றினையும் 'தினமலர்' நாளிதழ் வெளியிடுகின்றது.[39] இத்தகு விளம்பரங்களைக் கண்ட பக்தர்கள், கூட்டங் கூட்டமாக விழாக் காணுவதற்குக் குழுமுகின்றனர்.

முதல் நாளன்று, அதிகாலைப் பூசனைக்குப்பின் ஆண்டாளும் மன்னரும் நகை, மலர் அலங்காரத்துடன் சேர்த்தியாகத் தோளுக்கினியானில் புறப்பாடாகி, மாடவீதி வழியாகத் திருமுக்குளத்து எண்ணெய்க் காப்பு மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றனர்.

இரவு 7 மணியளவில், புண்ணியா வாசனம், யாத்ரா தானம், தச தானம் முதலியன முடித்து, ஒருசிறுதேர் போல் காட்சிதரும் தெப்பத்திற்கு (மிதக்கும் சப்பரம்) எழுந்தருளுகின்றனர். மின்விளக்குகளால் அலங்காரம் பெற்று, ஒளிமயமாகத் திகழுகின்ற தெப்பம், பலவண்ணக் கொடிப் பட்டங்களாலும், தாள்களினாலும் அழகு படுத்தப் பட்டிருக்கிறது. மேளதாள வாத்திய இசை சேவிப்போரும், தெய்வீகக் கீதம் சேவிப்போரும், அருச்சகர், அரையர், வேதப்பிரான் பட்டர் போன்ற தெய்வத் தொண்டாற்றுவோரும், சுற்றுச் சுவர்களில் மோதிடாது தெப்பத்தைத் தடுத்து நிறுத்துவதற்கு முட்டுக் கட்டைகளாக உதவுகின்ற நீண்ட கழிகளைக் கையில் தாங்கி நிற்போரும் அதிலமர்ந்து தத்தம் சேவைகளைச் செய்த வண்ண மிருக்கின்றனர்.

தெருத் தேரினையிழுக்கப் பலவடங்கள் தேவையாகின்றன; இத் தெப்பத் தேரினையிழுக்க ஒரு வடமே போதுமானதாம். அதனைப் பற்றி இழுக்கப் பக்தர் குழாம் காத்திருக்கின்றது. நிருவாக அதிகாரி ஆணையுடன் நல்ல நேரத்தில் இழுக்கப் படுகின்ற தெப்பம், தீர்த்தத்தில் மிதந்து, தவழ்ந்து பவனி

வரத் தொடங்குகின்றது. குளக் கரையின் நான்கு பக்கங்களில் மட்டுமல்லாது, இறங்கு துறைப் படிகளெல்லாம் நிற்கின்ற எண்ணற்ற பக்தர் கூட்டத்தோடு, குளம் நோக்கிச் சாரைசாரையாக வந்து கொண்டே யிருக்கின்ற மக்கள் கூட்டமும் கலக்கின்றது. அவர்களனைவருமே தெப்பத்தில் பவனி வருகின்ற சுவாமிகளின் தரிசனத்திற்காகக் காத்திருப்பதறிகின்றோம். மிதந்து வருகின்ற தெப்பம் தங்களின் அண்மையில் வந்ததும், சுவாமிகளைத் தொழுதேற்றுகின்றனர்; சுவாமிகளும் அவர்களுக்கு அருள் பாலிக்கின்றனர். இவ்வாறு முதல் சுற்றிலேயே ஆண்டாள் – மன்னரைத் தெப்பத்தில் கண்டு திளைத்த மக்களில் ஒரு பகுதியினர் கலைந்து வீடு திரும்ப, அவர்களெதிரிலே அடுத்தடுத்த சுற்றுக்களில் சுவாமிகளைக் கண்டு தொழும் எண்ணத்தோடும் ஆவலோடும் கூட்டங் கூட்டமாக மக்கள் வந்த வண்ணமிருக்கின்றனர். அவர்களின் ஆசை நிறைவேறும் முகமாகச் சுவாமிகள் மூன்று முறை திருமுக்குளத்தை வலம் வருகின்றனர்.

விழா முடிவில், தோளுக்கினியானில் புறப்பாடாகிய ஆண்டாளும் மன்னரும் வீதி வலம் வந்து, கருவறை சேர்கின்றனர்.

இரண்டாம் நாளான முழுநிலவன்று, திருமகள் பூமகள் சேர்த்தியாய்ப் பெருமாளும், அவர்களுடன் ஸ்ரீநிவாசனும் பெரியாழ்வாரும் தெப்பத்தில் எழுந்தருளுகின்றனர். இறுதி நாளன்று, இராம பிரான், சீதை இலக்குவனுடனும், கண்ண பிரான், ருக்மணி சத்ய பாமாவுடனும், சுந்தரராசன் திருமகள் பூமகளுடனும் சேர்த்தியாய்த் தெப்பத்திலெழுந் தருளுகின்றனர். முதல்நாள் போலவே இவ்விரு நாட்களிலும் தெப்பத் திருவிழா நடைபெறுகின்றது.

*நீலக்கடலினிலே முழுநிலவொன்று பவனி வருவது போல், தீர்த்தத்திலே மின்விளக்கலங்காரத்துடன் ஊர்ந்துவரும் தெப்பம் காட்சியளிக்கின்றது. ஆண்டுதோறும் இத்தெப்பத் திருவிழாவிற்காக ரூ. 3,000 வரை கோயில் நிருவாகம் செலவு செய்கிறது.*

## கோவர்த்தன மலையைத் தாங்கிய கோலத்தில் மன்னர் :

மாசி மாதம் முழுநிலவன்று சேர்ந்தே வருகின்ற மாசி – மகத்தன்று, மன்னர் அலங்காரத் திருமஞ்சனமாகின்றார். ஆராதனைக்குப்பின் அவரை, கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தாற் போன்று அலங்கரிக்கின்றனர். தளிகையமுது படையலுக்குப்பின், 'திருப்பல்லாண்டு'ம்

திருப்பாவை'யும் குழுசேவையாகின்றன. குழுவழங்கலுக்குப்பின், மாட, கந்தாடை வீதிகளை வலம் வந்த மன்னர் கருவறை சேர்கின்றார்.

*இந்திரனுக்கு நடத்திய வழிபாட்டைக் கண்ணனின் ஆணையால் யாதவர்கள், கோவர்த்தன மலைக்குச் செய்ய, கோபமுற்ற இந்திரன் ஏழு நாட்கள் தொடர்ந்து மழை பெய்யச் செய்தான். அவ்வின்னலினின்று யாதவரையும் கன்றுகாலிகளையும் காத்தற்காகக் கிருட்டிணன் அக்கோவர்த்தன கிரியையே குடையாகப்பிடித்தார். தோல்வியுற்ற இந்திரனும் சினம் தணிந்து அடிபணிந்தான்.[40] இதனை,*

*வானவர்கோன் .... .... ....*
*மழைவந் தெழுநாள் பெய்துமாத் தடுப்ப*
*மதுசூத னெடுத்து மறித்த மலை.[41]*

என்கிறார் பெரியாழ்வார்.

*'கண்ணுக்குத் தெரியாத இந்திரனைக் காட்டிலும் கண்ணுக்குமுன் உங்கள் மாடுகளை ஊட்டி வளர்க்கின்ற கோவர்த்தன மலைக்கே (இயற்கைக்கே) நன்றியாகப் பூசனை செய்யுங்கள்' என்று கண்ணன் வழிவகுத்துத் தந்த நிகழ்ச்சியையே இத்திருவிழா நமக்கு நினைவு படுத்துகின்றது.*

## திருக்கலியாணத் திருவிழா :

இங்கு, ஆண்டானும் (மன்னரும்) ஆண்டாளும் செய்துகொள்ளும் மணமே, 'திருக்கலியாணத் திருவிழா' வாக எடுக்கப் பெறுகின்றது. இறைவன் போக(இன்ப) வடிவில் வாழாமல் போனால், உலகத்து உயிர்களனைத்தும் போகியாய் வாழ இயலாது என்ற மக்கள் நம்பிக்கையின் அடிப்படையிலேயே இத்திருவிழா எடுக்கப்படுகின்றது. ஆண்டாள் நோற்ற பாவை நோன்பிற்கு மன்னர் மனம் மகிழ்ந்து, அவளைத் திருமணம் புரிந்து கொண்டதையே இவ்விழா நமக்குணர்த்துகின்றது. இஃது ஆடிப்பூர - ஆண்டாளின் பிறந்தநாள் பெருந்திருவிழாப் போன்றே கொடியேற்றத்துடன் கூடிய பத்துநாள் (12.3.81 முதல் 21.3.81 முடிய) திருவிழாவாகக் கொண்டாடப் பெறுகின்றது. இத்திருவிழாவிற்காக அழைப்பிதழ்கள் அச்சிடப் பட்டு, முக்கியப் பிரமுகர்களுக்கு அனுப்பப் படுகின்றன ; விளம்பரச் சுவரொட்டிகள் ஒட்டப் படுகின்றன. தினமலர்' என்ற

நாளிதழ் 'ஸ்ரீ ஆண்டாள் திருக்கலியாணச் சிறப்பு மலர்' என்ற ஒன்றை வெளியிடுகின்றது. அதில் திருக்கலியாண அழைப்பும், வாழ்த்தும் ஒருங்கே இடம் பெற்றுள்ளன ; திருக்கலியாணம் பற்றிய விளக்கமும் வெளியிடப் படுகின்றது.[42]

| | |
|---|---|
| 9.3.81 மாசி 26: | காலை 6.30 மணிக்கு மேல் 7.30 க்குள் மீன லக்கினத்தில் அங்கூரம் ( இந்நூல், பக். 110-111). |
| | இரவு 6.00 மணிக்கு மேல் 7.45க்குள் கன்யா லக்கினத்தில் மிருத் சங்கிரகணம் (இந்நூல், ப. 111 ) |
| 10.3.81 மாசி 27: | காலை, தேங்காய் தொட, புறப்படுதல் - அங்கூரத்தின் தொடர்ச்சி பக். 110-111). |
| 11.3.81 மாசி 28: | இரவு, சேனை முதல்வர் புறப்பாடு (இந்நூல், பக். 111-112). |
| 12.3.81 மாசி 29: | முதல் திருநாள் : காலை 9.30 மணிக்கு மேல் 11 க்குள் ரிஷபம் லக்கினத்தில் துவசா ரோகணம் (இந்நூல், பக். 112-115) |

இரவு, ஆண்டாளும் மன்னுரும் சேர்த்தியாய்த் தோளுக்கினியானில் புறப்பாடாகி ரூ.300/- வரை செலவு செய்யும் திரு வி.கே.ஸ்ரீனிவாசாச்சாரியார் உபய மண்டபம் எழுந்தருளுகின்றனர். திருமஞ்சன, அலங்கார, ஆராதனைக்குப்பின் படையலும் குழுவழங்கலும் நடைபெற்றுக் கருவறை திரும்புகின்றனர்.

| திருநாள் | ஆண்டாள் - மன்னார் காலை வாகனம் | பகலில் எழுந்தருளுகின்ற மண்டபம் | ஆண்டாள் - மன்னாரின் இரவு வாகனங்கள் |
|---|---|---|---|
| 2. | தந்தப் பல்லக்கு | நாச்சியார் பட்டி நாயக்கர் குடும்ப டிரஸ்டு ; ரூ. 1000/- | சந்திரப் பிரபை, சிங்கம். |
| 3. | தோளுக்கினியான் | தொட்டாச்சாரியார் ; ரூ. 300/- | தந்த (பரங்கி) நாற்காலி சிறிய திருவடி (அநுமார்). |
| 4. | தோளுக்கினியான் | திருப்பதி, பெரிய கேள்வி ஜீயர் சுவாமி ; ரூ 500/- | சேஷ (பாம்பு) வாகனம்– கோவர்த்தன பர்வதம் (மலை). |
| 5. | தோளுக்கினியான் | டாக்டர். இராமசாமி ஐயங்கார் ; ரூ 300/- | ஹம்ஸ (அன்ன) வாகனம் பெரிய திருவடி (கருடன்). |
| 6. | தோளுக்கினியான் | கோட்டப்புரம் செட்டியார்கள் வகையறா ;ரூ. 300/- | இரட்டைப் பரங்கி நாற்காலி. |
| 7. | தோளுக்கினியான் | சாலியர் (நெசவாளர்) ; ரூ. 500/- | கண்ணாடிச் சப்பரம். (நெல்லளவை). |
| 8. | தந்தப் பல்லக்கு | மம்சாபுரம் சாலை சாலியந் தோப்பு நஞ்சை புஞ்சையென 40 ஏக்கர் கோயில் நில மானியம் பெற்ற அறுவரின் மண்டபம் ரூ. 2000/- | தந்தத் தோளுக்கினியான் குதிரை. (இரவு 10-11 மணிக்குள் விருச்சிக லக்கினத்தில் தேர் கடாட்சித்தல். நடைபெறுகின்றது). |

ஒன்பதாம் திருநாள் :

இத்திருநாள் நிகழ்ச்சியாம் திருத்தேர்–திருக்கலியாண நேரங்கள் குறித்த சுவரொட்டிகள் பலநாட்களுக்கு முன்பே பலவிடங்களிலும் ஒட்டப் படுகின்றன.[43] பங்குனி உத்திரமான அன்று காலை, தனித்தனித் தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற ஆண்டாளும் மன்னரும் கோட்டைத் தலை வாசலைத் தலைமையகமாகக் கொண்ட ஒன்பது ஊர் கம்மாளர் (நாயக்கர்) மஹாசன சங்க வகையறு உபய மண்டபம் எழுந்தருள்கின்றனர். சுவாமிகளின் திருமஞ்சன திருவாராதனை, படையல், குழுவழங்கல் கைங்கர்யத்திற்குத் தேவையான குங்குமம், சந்தனம், பாக்கு, வெற்றிலை, தேங்காய், பழம், சூடம், 100 படியரிசித் தயிர்ச் சாதம், 100 தேங்காய்ச் சட்டினி ஆகியவற்றிற்காக ரூ. 2000/– வரை இம்மண்டபதாரர்கள் செலவு செய்கின்றனர். எப்போதும்போல் 'மண்டபப்படி' முடித்து, காலை மணி 7.30 – 9க்குள் மேஷ லக்கினத்தில், 'கோரதம்' என்னும் சின்னத் தேருக்கு எழுந்தருளுகின்றனர்; நான்கு ரத வீதிகளும் வலம் வந்தபின் கருவறை சேர்கின்றனர்.

பிற்பகல் 1 மணியளவில், திருக்கலியாணத்திற்குத் தேவையான திருமாங்கல்யம், பட்டுச் சேலை–வேட்டி போன்றவற்றை ஏழூர் நாயக்கமார் தங்களின் ஊர்ப்பொதுப் பணத்திலிருந்து வாங்கி உபயமாகக் கொடுக்க, கோயில் மேளதாள வாத்திய முழக்கத்தோடு சென்று வாங்கி வருகின்றனர்.

பிற்பகல் 2 மணியளவில் பல்லக்கில் அலங்காரமாகிய மன்னர், மூட்டை முடிச்சுக்களோடும் குடையோடும் பரதேசம் போகின்றார்; சந்நிதி முன்மண்டபத்தில் நிற்கின்றார். வேதப்பிரான் பட்டரின் திருமாளிகைக்குப் பெரியாழ்வார் எழுந்தருளுகின்றார். அங்கே, இரு தாம்பாளங்களில், இரண்டு பூர்ண கும்பங்களும், வெற்றிலை பாக்கோடு கூடிய மஞ்சள் தடவப்பட்ட இரு தேங்காய்களும் வைக்கப் பட்டிருக்கின்றன. கிரீடம் தரித்த வேதப்பிரான் பட்டர் பரிசாரகரின் துணையோடு அவற்றை எடுத்துக் கொண்டு சென்று, மணவாள மாமுனிகளின் சந்நிதி முன் நிற்கின்றனர். பெரியாழ்வார் சார்பாக, வேத மந்திரங்களைச் சொல்லிய வேதப்பிரான் பட்டர் ஆண்டாளைக் கன்னிகா தானம் செய்து கொடுப்பதாக உரைத்து, ரெங்க மன்னரின் திருவடிகளில் பாக்கு வெற்றிலைகளைச் சமர்ப்பித்துத் தீர்த்தம் விடுகின்றார். அதன்பின்னர், பெரியாழ்வாரும் மன்னரும் திருக்கலியாண மண்டபத்தில் எழுந்தருளியிருக்கின்றனர்.

மாலை 4 மணியளவில் திருமண விருந்திற்குத் தேவையாகின்ற பல்பண்டப் பொருட்(அங்குமணி) களான அரிசி, பருப்பு, காய், கனி வகைகளை யெல்லாம் கூட்டத்தினர் எடுத்துக் கொண்டு உடன்வர, அனைத்து நகைகளும் பூட்டிய

அணங்காய் ஆண்டாள் நான்கு வீதிகளும் வலம் வருகின்றூர். சந்நிதி முன் மண்டபத்திற்கு ஆண்டாள் எழுந்தருளியதும், எதிரே மன்ஞர் எழுந்தருளி வர, மாலே மாற்றுதல் நடக்கின்றது. ஓர் அருச்சகர் மன்ஞர் மாலேயை ஆண்டாளுக்கு அணிவிக்க, இன்ஞெர் அருச்சகர் ஆண்டாள் மாலேயை மன்ஞருக்குச் சூட்டுகிறுர். மேளதாள இன்னிசைக் கருவிகளின் முழக்கத்தோடு மொத்தத்தில் மும்முறை இம் 'மாலே மாற்றுதல்' நடைபெறுகின்றது. அதன் பின்னர், ஆண்டாளும் மன்ஞரும் கலியாண மணவறை மேடைக்கு எழுந்தருளுகின்றனர்.

அம்மேடைக்கு முன்ஞல் கும்பங்கள் வைத்து, வைகானச ஆகமப்படி, அருச்சகர்கள் ஹோமம் நடத்துகின்றனர். பரம்பரைப் பெருமைகளாம் 'கோத்திரம்' சொல்லிக் கன்னிகா தானம் நடக்கிறது.

இரவு 7.30மணிக்கு மேல் 8.30மணிக்குள் துலாம் லக்கினத்தில், கெட்டிமேளம் முழங்க, 'திருமாங்கல்ய தாரணம்' எனப்படும் 'தாலி கட்டுதல்' நடக்கிறது. பெண்டிர் கூட்டம் இடித்து நெருக்கிக் கொண்டிருக்க, ஆடவர்கள் அதற்கீடாகக் கூடித் திருமணக் கைங்கர்யங்களேக் கண்கொட்டாது கவனித்துக் கொண்டிருக்க, அருச்சகரொருவர் மன்ஞர் கையிலிருந்து தாலிக் கொடியைப் பௌயமாகப் பெற்று, அம்மன்ஞரின் சார்பாக ஆண்டாளின் கழுத்தில் கட்டுகின்றுர்.

அடுத்து, ஆண்டாளின் சடாரி எழுந்தருளி அம்மியில் அமர்வதாகிய 'அம்மி மிதி'த்தலும், 'பொரியிடு'தலும் ஆகிய கலியாணச் சடங்குகள் நிகழ்த்தப் பெறுகின்றன.

> மொத்தத்தில். வாரண மாயிரம். பதிகத்தில் ஆண்டாள் கனவு கண்டதாகக் கூறிப் பாடிய கலியாண நிகழ்ச்சிகளே நனவேபோல் இத்திருவிழாவில் நடத்திக் காட்ட முற்படுகின்றனர் எனலாம்.

திருக்கலியாணம் காணவந்த குழுவினர்க்குச் சந்தனம், பாக்கு, வெற்றிலே, பழம் ஆகியன வழங்கப் பெறுகின்றன. பாலில் பழமும் சருக்கரையும் சேர்த்துத் தளிகையமுது படைத்து ஆராதனே செய்தபின், அவற்றைக் குழு வழங்கலாக்குகின்றனர். ஒன்பதாம் திருவிழாவிற்கான 'திருவாய்மொழி' ஒன்பதாம் பத்தும் 'அமல ஞதி பிராஞு'ம் குழுசேவையாகின்றன; தீர்த்தம் வழங்கப் படுகின்றது.

இத்திருக்கலியாணத் திருவிழாவிற்காகும் செலவனைத்தையும் உடுமலேப் பேட்டை ஸ்ரீவெங்கடேசுவரா மில்ஸ் மேனேஜிங் டைரக்டரான திருமதி. ஆர். இராஜ லட்சுமியம்மாள் உபயமாக வழங்குகின்றுர்.

> திருவிழாக் கிரிசைகளின் மிகுதியிஞல் காலேக் கலியாணம் மாலேயிலாயிற்று.

இரவு, ஆண்டாள் கனக தண்டியலிலும் மன்னார் யானை வாகனத்திலும் அலங்காரமாகி நான்கு வீதிகளும் வலம் வந்து கருவறை எழுந்தருளுகின்றனர். கலியாண ஊர்வலமாதலால் இதில் பிரபந்தச் சேவை கிடையாது.

அன்று காலைத் திருத்தேர்ப் பவனியின்போது நடைபெறுகின்ற மேளமும், மாலை 4 மணி தொடங்கி நள்ளிரவு வரை கோயில் முன்கொட்டகையில் நடைபெறுகின்ற பல்வேறு கலை நிகழ்ச்சிகளும்[44] கோயிற் செலவில் நிகழ்வனவாம்.

## பத்தாம் திருநாள் :

*மாலை - முத்துக்குறி சேவை (இந்நூல், பக். 121-122).*

*மாலை - ஊஞ்சல் விழா (இந்நூல், பக். 73-74)*

இரவு வெட்டிவேர்ச் சப்பரத்தில் அலங்காரமாகின்ற ஆண்டாளும் மன்னரும் வீதிகளில் சேர்த்தித் திருவுலா மேற்கொள்கின்றனர். அதுபோழ்து இராமாநுச நூற்றந்தாதி சேவையாகின்றது.

## பதினோராம் திருநாள் :

*காலை -தீர்த்த வாரி (இந்நூல், பக். 124-125).*

## யுகாதிப் பண்டிகை :

ஓரிரு நாட்களுக்கு முன்பே இப்பண்டிகையின் நாளும் நேரமும் குறித்த கரும்பலகையைக் கோயிலின் முன் பொதுமக்களின் பார்வைக்காக வைத்துள்ளனர்.[45] பங்குனி மாதம் அமாவாசை கழிந்த மறுநாள் வருகின்ற தெலுங்கு வருடப் பிறப்பினை யுகாதிப் பண்டிகையாகக் கொண்டாடுகின்றனர். தீபாவளிப் பண்டிகையன்று நடப்பது போலவே எல்லாப் பெருமாள்களும், ஆழ்வார்களும், ஆசாரியர்களும் எழுந்தருள, அவர்களுக்கு ஆராதனை நடந்து, தளிகையமுது படைக்கப் படுகின்றது. யுகாதிக்குரிய புத்தாடைகள் வடபெருங் கோயிலுடையானுக்கு முதலில் சாற்றப்பட்டு, பின்னர் ஆழ்வார்க்கும் சாற்றப் படுகின்றன. கோயில் மரியாதையுடன் பெரிய கோயில் தாஸர் வகையறுவில் ஒருவர் 'பஞ்சாங்கம்' வாசிக்கிறார். தளிகையும் தீர்த்தமும் குழுவழங்கலாக, புதுவருடப் பலன்கள் சொல்லப்படுகின்றன.

> *திருமலை நாயக்கர் போன்ற தெலுங்குமொழி பேசுவோரால் செப்பனிடப் பட்ட ஆண்டாள் கோயிலில், அவர்களுக்கு நன்றி செலுத்துமுகமாகத் தெலுங்குப் புத்தாண்டு முதல்நாள் கொண்டாடப்படுகின்றதெனலாம்.*

## அடிக்குறிப்புக்கள்

1. கோ. விஷ்ணு சித்தன் (33); வங்கி அலுவலர்; ஸ்ரீவில்.; க.ஆ., (24.10.1980).

2. இ. தேனேயா (32); கோயில் நிருவாகி; ஸ்ரீவில்.; க.ஆ., (11.1.1981).

3. இராச மாணிக்கம் (31); அரு. சு.; ஸ்ரீவில்.; க.ஆ., (20.2.1981).

4. மணவாள மாமுனிகள் நியமித்தருளியது, 'ஆண்டாள் வாழித் திருநாமம்'., நா.தி.பி., ப. 630.

5. ந. சுப்பு ரெட்டியார், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், ப. 143.

6. "இன்றோ திருவாடிப் பூரம் எமக்காக
வன்றோ இங்காண்டா ளவதரித்தாள் - குன்றாத
வாழ்வான வைகுந்தவான் போகந் தனையிழந்(து)
ஆழ்வார் திருமகளா ராய்." - உ.தே.ர.மா., பா. 22.

7. ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையின் தனியன்கள், நா.தி.பி., ப. 80.

8. ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையின் தனியங்கள்; மேலது; அ.ப.

9. பின்னிணைப்பு 4; ஆடிப் பூரக் கலை நிகழ்ச்சிகள் - நிகழ்ச்சி நிரல்.

10. கோவிந்த ராஜ ஐயங்கார் (66); வே.பி.ப., ஸ்ரீவில்.; க.ஆ., (7.2.1981).

11. 10.5.79 நாளிடப்பட்ட கோயில் தகவல் பலகைக் குறிப்பு.

12. பூதத்தார்; 'இரண்டாம் திருவந்தாதி', பா. 70., நா.தி.பி., ப. 362.

13. திருமங்கை யாழ்வார்; 'பெ.தி.மொ;' 5-6-2; நா.தி.பி., ப. 234.

14. திருக்குறள், 50.

15. மேலது, 68.

16. குலசேகராழ்வார் ; 'பெரு.தி.மொ'. 4-9; நா.தி. பி., ப. 116.

17. ஏ. சொக்கலிங்கம்; சமயக் கிண்டர் கார்டன் அல்லது ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், II, ப. 2.

18. கோதை, 'நாச்.தி. மொ'., 11-2; நா.தி.பி. ப. 103.

19. பின்னிணைப்பு 5; கோயிற் கரும்பலகை அறிவிப்பு.
20. கோ. அனந்த ராம கிருஷ்ணன் (28); வே.பி. ப.; ஸ்ரீவில்.; க.ஆ., (27.12.1980).
21. கோ. விஷ்ணு சித்தன் (33); வங்கி அலுவலர், ஸ்ரீவில்.; க.ஆ., (24.10.1980).
22. கோவிந்த ராஜ ஐயங்கார் (66); வே.பி.ப.; ஸ்ரீவில்.; (7.2.1981).
23. தொண்டரடிப்பொடி யாழ்வார், 'திருமாலை', பா. 19, நா.தி.பி. ப. 147.
24. கோ. அனந்த ராம கிருஷ்ணன் (28); வே.பி.ப.; ஸ்ரீவில்.; க.ஆ. (27.12.1980).
25. எஸ். நடராஜன் (நஜன்) : தமிழர் பண்டிகைகளும் பண்பாடும், ப. 71.
26. ஸ்ரீனிவாசாச்சாரியார் (75); அ.சு.; ஸ்ரீவில்., க.ஆ., (9.11.1980).
27. எஸ். கண்ணன் ஐயங்கார் (49): ம.சு.; ஸ்ரீவில்., க.ஆ., (23.11.1980).
28. ஸ்ரீனிவாசாச்சாரியார் (75) ; அ.சு.; ஸ்ரீவில்.; க.ஆ. (9.11.81).
29. ஸ்ரீனிவாச ரெங்காச்சாரியார் (50) ; ம.சு.; ஸ்ரீவில்., க.ஆ. (29.3.1981).
30. இல. இரா. வெங்கட் ராமன் (31) ; வணிகர்; ஸ்ரீவில்., க.ஆ.; (22.6.1981).
31. எம். வெங்கட் ராம பட்டர் (49) ; அரு.சு.; ஸ்ரீவில்.; க.ஆ.; (12.5.1981).
32. கோவிந்த ராஜ ஐயங்கார் (66); வே.பி.ப., ஸ்ரீவில்.; க.ஆ. (7.2.1981).
33. எம். வெங்கட் ராம பட்டர் (49) : அரு. சு.; ஸ்ரீவில்.; க.ஆ., (12.5.1981).
34. வி. கலியாண ராமன் (34) ; அரு. சு.; ஸ்ரீவில்; க.ஆ., (12.7.1981).
35. எம். வெங்கட் ராம பட்டர் (49) ; அரு. சு.; ஸ்ரீவில்., க.ஆ., (12.5.1981).
36. பின்னிணைப்பு 6; 17.1.1981 ; தினமலர்ச் செய்தி 'ஆண்டாளின் தவம்; நீங்களும் பார்க்க வேண்டாமா? ',
37. ஸ்ரீனிவாச ரெங்காச்சாரியார் (50); அ.சு.; ஸ்ரீவில்., க.ஆ., (29.3.1981).
38. சாமி சிதம்பரனார்: ஆழ்வார்கள் அருள்மொழி : ப. 33.
39. பின்னிணைப்பு 7; 17.2.1981 ; தினமலர்ச் செய்தி. 'தெப்பத் திருவிழா'.

40. எஸ். நடராஜன் (நுஜன்); மு. நூ., ப. 89.
41. 'பெரி. தி. மொ., 5-3-2, நா.தி. பி., ப. 46.
42. பின்னிணைப்பு 8 ; 20.3.1981. தினமலர்ச் செய்தி- 'ஆண்டாள் திருக்கலியாணச் சிறப்பு மலர்'.
43. பின்னிணைப்பு 9; கோரத வோட்டம் பற்றிய சுவரொட்டி.
44. பின்னிணைப்பு10; தேரோட்டத் திருவிழா - கலை நிகழ்ச்சிகள்.
45. பின்னிணைப்பு 11. கரும்பலகையில் எழுதப்பட்டுள்ள கோயிலறிவிப்பு.

# 5.பெருவிழாக்களின் பொதுநிகழ்ச்சிகள்

இத்தலைப்பின்கீழ் அனைத்துத் திருவிழாக்களின் போதும், அன்றாடம் நடைபெறுகின்ற நாட்பூசனைகளும், காலை-மாலை நிகழ்த்தப் பெறுகின்ற பலி சாதித்தலும் விளக்கப் படுவதோடு, பெருவிழாக்களின் தொடக்கத்திலும், இடையிலும், முடிவிலும் இடம் பெறுகின்ற பொதுமை நிகழ்ச்சிகளும் விவரிக்கப் படுகின்றன.

## அன்றாடப் பூசனை :

வைகானச ஆகமப்படி அமைக்கப் பட்டதே இக்கோயிலாதலால், அம்முறைப் படியே நாடோறும் ஆறு காலப் பூசை நடைபெறுகின்றது. திருவிழாக் காலமும் இப்பூசனைக்கு விலக்கன்று. இப்பூசனைக்குரிய அமுதுபடிக்காக ரூ. 17,000/-மும், மளிகைச் சாமான்களுக்காக ரூ. 50,000/-மும் கோயில் நிருவாகம் செலவு செய்கின்றது.

## விசுவ ரூபம் :

காலை 6 மணியளவில், பட்டாச்சாரியார் கோயில் திருக்காப்பினை நீக்குகிறார். இரண்டு வெள்ளியிலானதும் மூன்று பித்தளையிலானதுமான திருமஞ்சனக் குடங்களை எடுத்துக் கொண்ட பரிசாரகர்கள் ஐந்து பேரும் திருமுக்குளம் செல்கிறார்கள். தீர்த்தம் நிரப்பிய குடத்தினுள், மாவிலை இட்டுத் தங்களின் தலைகளில் ஏற்றிய அவர்கள், அவற்றை, ஆண்டாள், சயனர், பெரியாழ்வார், சக்கரத் தாழ்வார், கிருஷ்ணன் ஆகியோர் கோயில்களில் சேர்க்கின்றார்கள். அக்குடம் வந்ததும், பாத்திர சுத்தி செய்து, அரையர் இரண்டு, வேதப்பிரான் பட்டர் இரண்டு என்ற எண்ணிக்கையில் 'கோதா ஸ்துதி' சேவிக்கிறார்கள். அதே வேளை, கருவறையில், தோசை, பால், புளியோதரை 'நைவேத்தியம்' போட்டு, கற்பூர ஆரத்தி செய்கிறார்கள்.

வெளிப்புறத்தில், கோயில் பசுமாடு கிழக்கு நோக்கி நிற்க, 'கோபூசை' நடைபெறுகிறது. அதையடுத்து, மங்கள வாத்திய சேவை நிகழுகிறது. கற்பூர ஆரத்தி ஆனவுடன், ஆண்டாள் மாலையைக் கந்தாடை வீதி வழியாகச் சயனர் சந்நிதிக்குத் தலைமீது வைத்துக் கொண்டு செல்லும் பரிசாரகர்கள், அதனைப் பட்டர்கள் கையில் சேர்க்க, அவர்கள் சயனருக்குச் சாற்றுகிறார்கள். பின்னர், பக்தர்களுக்குச் சடாரி சாற்றிப் புளியோதரையும், பாலும், தீர்த்தமும், திருத்துழாயும் வழங்குகின்றனர்.

காலசந்தி :

இது காலை 9 மணிக்குத் தூபதீப ஜோடச (16 வகை) உபச்சாரங்களுடன், துவார பாலகர், விஸ்வக் சேனர், இலட்சுமி நாராயணர், கஜ லட்சுமி, ஸ்ரீநிவாசர், இராமர், மூல கருடர் முதலியோருக்கு நடைபெறுகிற பூசனையாகும். கட்டிச் சாதமும், தயிர்ச் சோறும் நைவேத்தியமாகப் படைக்கப் பட்டு, வழங்கப் படுகின்றன. இப்பூசனை முடிந்ததும் 'பலி சாதித்தல்' நடைபெறும்.

பலி சாதித்தல் :

இறைவனுடைய பிரசாதமாகிய சிறிதளவு சோற்றுடன், மலர்களையும் வைத்து நீர் வார்த்தலே 'பலி சாதித்தல்' எனப்படும். இதற்கு 'வெளி சாதித்தல்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. இது நாடோறும் காலை, மாலை என இருவேளைகளிலும் நடைபெறுகிறது. அன்றாடப் பலி சாதித்தற்கு 'நித்ய உற்சவரும்', திருவிழாக் காலத்திற்குச் 'சக்கரத் தாழ்வாரும்' பெட்டிப் பல்லக்கில் எழுந்தருளிவர, கோயிலுக்கு முன்னுள்ள பிரம்மா, கிழக்கிலுள்ள இந்திரன், தென்கிழக்கிலுள்ள அக்கினி, தெற்கிலுள்ள எமன், தென்மேற்கிலுள்ள நிருதி, மேற்கிலுள்ள வருணன், வடமேற்கிலுள்ள வாயு, வடக்கிலுள்ள குபேரன், வடகிழக்கிலுள்ள ஈசானன் ஆகியோருக்குப் பட்டாச்சாரியார் 'மலர்ப் பலி' இடுகிறார். திருவிழாக் காலங்களில் கூடுதலாக எட்டு வீதிகளுக்கும் சேர்த்து, இப்பலி செய்யப்படுகிறது.

> *திருவிழாக்கள் இனிது நடந்தேற, எண்டிசைக் காவலர்களிடமிருந்தும் அனுமதியையும் ஆசியையும் பெறுமுகமாகவே இப்பலி செய்யப் படுகின்றது எனலாம். புதுமனை புகுவதற்கும் அறுவடை யாவதற்கும் முன்பு அக்காரியங்கள் செவ்வனே நடந்தேற, 'இரத்தப் பலி' இடுவது இன்றுமுண்டு. கொல்லாமையாகிய நன்னெறி பேணுகின்ற இத்தலத்தில், இரத்தப் பலிக்குப் பதிலாக 'மலர்ப் பலி' இடுகிறார்கள் என்று கொள்ளலாம்.*

## பூர்ண பாத்திரம்

நண்பகல் 12 மணி (உச்சிக் காலம்)க்கு ஆண்டாள், மன்னார், சுற்றுக் கோயில் சுவாமிகள் முதலியோருக்கு நைவேத்தியம் செய்வதாக இப்பூசனை அமைகின்றது. 'அலங்காரத் தளிகை' எனப்படும் சாப்பாடுடன் கூடிய காய்கனிச் சாம்பார் உணவு படைக்கப் படுகிறது.

## சாய ரட்சை :

மாலை 5 மணியளவில் நடை திறக்கப் படுகிறது. இது மாலை 6 மணிப் பூசனையாக அமைகின்றது. தூபதீபங்களுடன் ஜோடச உபச்சாரங் கொண்ட இப்பூசனை, உட்கோயிலுக்கு மட்டுமின்றிச் சுற்றுக் கோயில்களுக்கும் நடக்கின்றது. இதுபோழ்து, ஆண்டாளுக்கு 'மலர்க் கொண்டை' சாற்றப் படுகின்றது. பூசனைக்குப்பின் 'நித்ய சந்தான கோஷ்டி' நடைபெறுகிறது. சடாரியுடன், தீர்த்தமும் தோசையும் நைவேத்தியமாக வழங்கப் படுகின்றன.

## அத்தாளம் :

இஃது இரவு 8 மணியளவில் அனைத்துச் சுவாமிகளுக்கும் நடத்தப்பெறும் பூசனையாகும். பலி சாதித்தபின், நித்ய உற்சவருக்குக் குட தீபமும், கற்பூர தீபமும் காட்டுகிறார்கள்.

## அரவணை :

நள்ளிரவுப் (அர்த்த ஜாமம்) பூசனை யென்றாலும், இரவு 9 மணியளவிலேயே, ஆண்டாள் மன்னாருக்குச் – சருக்கரைப் பொங்கல், வெண் பொங்கல், தேங்குழல், உக்கரை (எள்/மிளகு கலந்த சாதம்) பால், பாக்கு, வெற்றிலை, பழம் படைத்து, இப்பூசனையை முடித்து விடுகிறார்கள். கற்பூர ஆரத்திக்குப்பின் திரை சமர்ப்பிக்கப் படுகிறது; திருக்காப்புச் சேர்க்கப் படுகிறது. இந்நள்ளிரவு ஆரத்தியை வழிநெடுகிலும் நூற்றுக் கணக்கான பக்தர்கள் சேவித்து மகிழ்கின்றனர்.

## அங்கூரம் :

விழாத் தொடக்கத்தையே 'அங்கூரம்' என்கின்றனர். காலை 7-9 மணிக்குள் சிம்ம லக்கினத்தில் தேங்காய் தொட்டு நியமனம் பெறுதல் நடைபெறுகிறது. அஃதாவது, ஆண்டாளாகிய தாயார் திருத்தாள்களில், மஞ்சள் தடவின இரு தேங்காய்களை வைத்து, கற்பூர தீபாராதனை செய்தபின், மணியம், பரிசாரகர், கட்டியக்காரர், மேளதாள வாத்தியக்காரர்

முதலியோர்கள் மரியாதை நிமித்தமாகக் கோயில் நிருவாகி, அறங் காவலர்கள் போன்ற அதிகாரிகளைக் கண்டு வருகின்றனர்.

## மிருத் ஸங்கிரஹணம் :

இரவு 7.30 மணிக்குமேல் 8.30க்குள் மகர லக்கினத்தில், திருப்பூர நந்தவனத்தில், இம் 'மண்ணெடுத்து முளையீடு செய்யும் விழா' நடைபெறுகிறது. இதற்காக, விட்ணுவின் மறுபதிப்பான விஸ்வக் சேனர் - சேனாதிபதி - சேனை முதல்வர், ஆண்டாள் சந்நிதியிலிருந்து தோளுக்கினியானில் புறப்பாடாகி, சக்கரத் தாழ்வாரும், பெரியாழ்வாரும் பின்தொடர்ந்து வர, பெரிய பெருமாளிடம் நியமனம் பெற்று, ஆண்டாள் பிறந்த தலமான திருப்பூர நந்தவனத்திற்கு வந்து சேருகிறார். அவருடைய தலைமையில், அந்நந்தவனத்துத் துழாய்ச் செடிக்குக் கீழுள்ள மண்ணைக் களைக்கொட்டால் தோண்டியெடுத்து, தூரற்ற பகுதியில் வைக்கோலால் அடைக்கப்பட்ட பன்னிரு மண் பாண்டங்களில் பரிசாரகர் இடுகிறார். பின்னர், அப்பாண்டங்களை எடுத்துக் கொண்டு ஆண்டாள் கோயிலுக்கு வருகின்றனர். அவற்றிற்குப் பூசனை நடந்தானபின், செந்நெல், பயறு, எள், வெண்கடுகு, உளுந்து, மொச்சை போன்ற நவதானியங்களையும் வித்துக்களாய்ப் போட்டு, நீர் வார்த்து, 'யாக சாலை'யில் வைத்து விடுகின்றனர்.

> *மண்ணில் விளையும் பயிரால் கிடைத்த உணவால் உருவான (சோற்றுலாகிய) பிண்டமே இவ்வுடம்பு - அஃதாவது மண் சம்பந்தப் பட்டதே இவ்வுடம்பு என்ற உயரிய தத்துவத்தையும், ஆடிப் பட்டம் தேடி விதை என்ற பழமொழி உணர்த்தும் உழுதொழில் நுட்பத்தையும் மேன்மையையும்,*
>
> *நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு.*
> *ஊனும் உயிரும் படைத்திசி னோரே[1] என்ற படைப்பியல் சித்தாந்தத்தையும் இம்மண்ணெடுத்து முளையிடு செய்யும் செயல் உணர்த்துகின்ற தெனலாம். மொத்தத்தில் உலகை உருவாக்கும் படைத்தல் தொழிலை அறிவிப்பதாய் இந்நிகழ்ச்சியைக் கருதலாம்.*

## சேனை முதல்வர் புறப்பாடு :

இன்று மாலை தோளுக்கினியானில் அலங்காரமாகி நான்கு வீதிகளும் சுற்றி வருகின்ற சேனை முதல்வருக்குச்

கூட தீபத்துடன் கற்பூர தீபமும் காட்டுகின்றனர்; சந்நிதி திரும்பியதும் ' திருவந்திக் காப்பு'ச் செய்கின்றனர்; அதன் பின்பே கருவறை எழுந்தருளுகின்றார்.

> சேனை முதல்வர் என்பதனால் அவர், 'திருவிழாவைக் காண அனைவரும் வருக' என்று பொதுமக்களை அழைக்கும் கடமை யுடையவ ராகின்றார். நடைபெறப் போகும் திருவிழாக்களைக் கண்டு களிக்குமாறும். இறை யருளை யடைந்து உய்தி பெறுமாறும் பொது மக்களுக்கு வீதிதோறும் வந்து அழைப்பு விடுவதாக ஐதீகம்.[2]

## முதற்றிருநாள் :

## துவஜா ரோகணம் :

இதனை 'ஸ்தம்ப ஆரோகணம்' என்றும், 'கொடியேற்று விழா' என்றும் கூறுகின்றனர். அதிகாலையில் ஆண்டாளும் மன்னாரும் திருமஞ்சனமாகி, அலங்காரமானபின், முகப்பு மண்டபமான 'மணி மண்டபம்' எழுந்தருளுகின்றனர்.

புதுத் துணியில், கால்மடி போட்டு உட்கார்ந்து, இருகை தொழுத வண்ணமுள்ள கருடாழ்வார் படம் எழுதப் படுகிறது. அத் துணிப் பட்டமாகிய கொடியைச் சிறு தோளுக்கினியானில் பல்லக்குத் தூக்குவோர் கொண்டுவர, சக்கரத் தாழ்வார் சிறுபல்லக்கில் அலங்காரமாகி, எண்டிசையும் சுற்றி வருகிறார். இதனை 'அஷ்டதிக் பந்தனம்' என்கின்றனர். அதுபோழ்து, அருச்சகர்கள் திக் தேவதைகளுக்கு மந்திரம் சொல்லிப் பூசனை செய்கின்றனர். இதனையே 'கருடப் பிரதிட்டை' என்கிறார்கள். இக்கொடிப் பட்டத்தைக் கொடிக் கம்பத்திடம் குடமுழுக்கிற்காக விட்டுச் செய்கின்றார்கள். ஒன்பது குடங்களில் (நவ கலசம்) கொணர்ந்த நீரைக் கொடிமர அபிசேகத்திற்காக வைத்திருக்கிறார்கள். பதி[illegible]களில் பத்துப் பேருக்குப் பத்துக் காசுகள் வீதம் வழங்கும் 'தச தானம்' நிகழ்ந்து முடிந்ததும், கொடிமரத்துடன் பல [illegible]தையும் சேர்த்துக் கொடியேற்றக் கூடிய பட்டாச்சாரியார் மும்முறை வலம் வருகிறார் ; ஒரு தடவை [illegible]க்கிறார்; நல்ல நேரம் (முகூர்த்தம்) சொல்லியபின்

கொடியேற்றுகிறார். எட்டுக் கும்பத் தீர்த்தத்தை எண்டிசைகளுக்கும் ஒன்பதாம் கும்பத் தீர்த்தத்தைக் கொடிமரத்துக்குமாக அருச்சகர் நீராட்டுச் (அபிசேகம்) செய்கின்றார். கொடிமரத்தைச் சுற்றி நாணற் புற்கள் (தர்ப்பம்) கட்டப் படுகின்றன. அவற்றிற்குமேல் வேட்டி யொன்று கட்டப் படுகின்றது. அக்கொடி மரத்தடியிலேயே ஆராதனை நடைபெறுகின்றது. அரைப்படி அரிசி அளவில் செய்யப் பட்ட தளிகையாம் சர்க்கரைப் பொங்கல நைவேத்தியம் செய்து, குழுவழங்கல் நடக்கிறது. இச்செலவு கோயில் நிருவாகத்தையே சாருகிறது.

> *மூலக் கடவுளருக்குச் செய்யும் அபிசேகம், அலங்காரம், நிவேதனம், அருச்சனை முதலிய அனைத்தும் கொடிமரத்துக்கும் செய்ய வேண்டு மென்பதே முறையென்பர்.[3]*
>
> *பிரமோற்சவத்திற்கு மட்டும், முதல் திருநாளன்று எல்லாக் கோயில்களிலும் கொடி யேற்றப் படுகின்றது. அந்தந்த ஆலயத்திலுள்ள மூர்த்தியின் வாகன உருவத்தை ஒரு கொடியில் எழுதி, அதற்குப் பூசனை செய்து, கொடிமரத்தின் உச்சியில் ஏற்றுவதே கொடியேற்று விழாவாகும்.*

என்ற ஆறுமுக நாவலரின் விளக்கம் இங்கு எண்ணைத் தக்கதாம்.

> *இத்திருவிழாவின் போது, மக்கள் நன்றாக வாழ வேண்டுமென்று வேண்டப் படுகின்றது. இத்திருநாட்களின்போது இறைவனும் அதற்கு ஆயத்தமாகக் காத்திருக்கின்றான் என்பதையே இக்கொடி குறிக்கின்றது.[5]*
>
> *கோயிலில் கொடியேறியது முதல் 'யாக சாலை'யில் யாகம் நடைபெறுகிறது. இஃது இறைவனின் [illegible] ஜோதியைக் குறிக்கின்றது.*

மண்ணெடுத்தல் – முளையிடுதல் – கொடியேற்றுதல் மூன்றுமே, உயிர்த் தொழிலாம் பயிர்த் தொழிலினை உணர்த்தும் ஒன்றோடொன்று தொடர்புடைய நிகழ்ச்சிகள் எனலாம். வெயில், மழை ஆகியன படும்படியாகக் கொடிமரம் அமைக்கப் பட்டிருத்தல் இக்கருத்திற்கு வலுவூட்டல் காணலாம்..

முளையீடு செய்தல் = கொடியேற்றல்




அன்று நண்பகல் 12 மணியளவில், ஆண்டாளுக்கும் மன்னருக்கும் திருவாராதனை செய்தபின், இராமநுசரால் ஆக்கப் பட்ட ஐந்து சுலோகங்களைக் குழுவாகச் சொல்லுகின்ற 'தாடீ பஞ்சக' சேவை நடைபெறுகின்றது. அச் சேவையைப் பாராட்டு முகமாகத் தலைக்கு ஐந்து புதுக் காசுகள் வீதம் மணியக்காரரால் வழங்கப்பெறும், 'பூரி தட்சணை' நடக்கிறது. இதற்காக ரூபாய் இரண்டு வரை செலவாகின்றது. ஏலம், கிராம்பு, ஜாதி பத்திரி, பச்சைக் கற்பூரம், துளசி முதலியவற்றால் தயாரிக்கப் பட்ட தீர்த்தத்துடன், சந்தனமும், மலரும் வழங்கப் படுகின்றன. தலையில் கும்பம் போன்ற வடிவுடைய-கவிழ்த்துவதாகிய இறைவனின் பாதங்களுள்ள ஸ்ரீ சடகோபம் -சடாரி சாற்றுதலுமுண்டு.

பிற்பகல் 1 மணியளவில் ஆண்டாளும் மன்னரும் தங்கத் தோளுக்கினியானில், சேர்த்திப் புறப்பாடாகி, யாக சாலைக்கு எழுந்தருளுகின்றனர். அங்கு 'ஹோமங்கள்' வளர்க்கப் பெற்று, 'ரக்ஷா பந்தனம்' எனப்படும் 'காப்புக் கட்டுதல்' நடைபெறுகின்றது.

*கிரிசைகளை நடத்துகின்ற ஆசிரியனுக்கு இடையூறுகள் வராமற் காத்தற் பொருட்டு, அவன் கையில் மந்திர பூர்வமாகக் கயிறு கட்டுவதே இ:தென்கின்றனர்.*[6]

**கருட சேவை :**

பெரிய திருவடியாம் கருடப் புள்ளில் சுவாமிகள் எழுந்தருளி வந்து, மக்களுக்கு அருள் பாலிப்பதையே 'கருட சேவை' என்கின்றனர். பெரும்பாலும் பெருந்திருவிழாக்களின் ஐந்தாம் திருநாள் இரவு நிகழ்ச்சியாக இஃதமைகின்றது.

ஆனி – பெரியாழ்வார், புரட்டாசி-பெரிய பெருமாள் பெருந்திருவிழாக்களின்போது, அன்ன வாகனத்தில் ஆழ்வாரும், கருடனில் பெருமாளும் எழுந்தருளிவர, இச்சேவை நடைபெறுகின்றது.

ஆடிப்பூரத் திருவிழாவில் ஆண்டாளும், பெரியாழ்வாரும், பெரிய, சிறிய அன்னங்களிலும், ஐந்து கருடன்களில் ஐந்து பெருமாள்களும் எழுந்தருளி வந்து, 'பஞ்ச கருட சேவை' செய்கின்றனர், (இந்நூல், பக். 47-48).

பங்குனி-திருக்கலியாணத் திருவிழாவின்போது, ஆண்டாள் அன்னத்தில் அலங்காரமாக, மன்னுரோ கருடப் புள்ளில் எழுந்தருளி வந்து இச்சேவை சாதிக்கின்றார்.

கொடியேற்றமில்லா மார்கழிப் பெருந்திருவிழாவின் முதல் பகற் பத்துத் திருவிழாவின்போது, கருடனில் எழுந்தருளிய பெருமாள், குடைவர வாசலின் உள்ளிருந்த வண்ணமே, வாசலின் வெளியே வெள்ளை யானையில் எதிர் சேவித்து நிற்கும் பெரியாழ்வாருக்கு மட்டும் இச்சேவை செய்கின்றார். (இந்நூல், பக். 79-81).

கண்ணன் திருவிழாவில் ஏழாம் திருநாள் 'கருட சேவை' நடைபெறுகின்றது.

*காலந்தவறிய பூசைகள், வேத மந்திரக் குறைபாடுகள், பூசனைப் பொருட்கள், நைவேத்தியக் குறை பாடுகள், ஆச்சாரமும் பரிசுத்தமும் இல்லாமல் செய்யப் படுகின்ற கிரிசைகள் முதலியவற்றால் ஏற்படும் பாவங்களை நீக்கும் சர்வ பிராயச் சித்தமாக இ:தமைகின்றது.*[7]

**சூர்ணத் திருவிழா :**

கொடியேற்றத்துடன் கூடிய பெருந்திருவிழாக்களின்

போது, மண்ணெடுத்தலும் முளையிடுதலுமான அங்குரார்ப்பணம் நடைபெறுகின்றது. யாருக்காகத் திருவிழா எடுக்கப் படுகின்றதோ அவரின் உற்சவ மூர்த்திக்கு ஏழாம் திருநாளன்று இரவு முளைப் பாலிகையைச் சாற்றுவதே இத்திருவிழாவாகும். முளைப் பாலிகைக் கும்பத்தை அவ்வுற்சவ மூர்த்தியின் முன்வைக்க, அவர் கடாட்சித் தருளுவதே இதன் செயற் பாடாகும். இம்முறையில்,

*ஆனியில் பெரியாழ்வாருக்கும்,*
*ஆடியில் ஆண்டாளுக்கும்,*
*ஆவணியில் கிருட்டிணனுக்கும்,*
*புரட்டாசியில் பெரிய பெருமாளுக்கும்,*
*பங்குனியில் ஆண்டாள் -மன்னருக்கும்* இத்திருவிழா

எடுக்கப் படுகின்றது.

கொடியேற்றமில்லா மார்கழிப் பெருந்திருவிழாவிலும் ஏனைய சிறு திருவிழாக்களிலும் மண்ணெடுத்தலோ முளையிடுதலோ கிடையா. எனவே, அதுபோழ்து இத்திருவிழா தேவையற்றதாகின்றது.

*உழைப்பின் பயனும் முளைகளின் செழுமையினை உயிரினங்கள் பெற்று மகிழ வேண்டுமென உணர்த்துவதே இவ்விழாவின் நோக்க மெனலாம்.*

## நெல்லளவை :

தமது திருமாளிகையை ஆண்டாள் கோயிலாக்கி, தமது செல்வமனைத்தையும் அக்கோயிலுக்கே அர்ப்பணித்துத் தெய்வத் தொண்டாற்றிய பெரியாழ்வாரே, அக்கோயிலின் முதல் தரும கருத்தாவாக இருத்திருக்கின்றார். அந்நிலையில் அவர், கோயில் வரவு-செலவுக் கணக்கினை ஆண்டாளுக்குச் சமர்ப்பிக்க வேண்டிய கடமை யுடையவ ராகின்றார். அவர், கணக்கு ஒப்படைத்ததை நினைவுகூரும் முகமாகவே இந்நிகழ்ச்சி இன்றும் பெருந்திருவிழாக்களின் ஏழாம் திருநாள் இரவு நிகழ்ச்சியாக இடம் பெற்றிருக்கின்றது.

விழாவிற்குரியவர் யானை மஹாலுக்கு (ஸ்டேட் பேங்-பழைய யானை கட்டும் மண்டபம்) எதிரிலுள்ள மண்டபத்திற்கு எழுந்தருள, ஆழ்வாரின் சார்பாக மேட்டுத் தெரு தேவரினப் பெண்களிருவர் அரைச் சாக்கு அளவினதாக நெல்லைக் குவித்து வைத்துக் கொண்டு, திருவரங்கம் 1, பெரியகோயில்2, எனத் தொடங்கிப் பின்பு கோடிக் கணக்கில் எண்ணிக்கை சொல்லி மரக்காலால் மாறிமாறி அளக்கின்றனர். எப்போதும்

இப்பணியினை இப்பெண்களே ஏற்கின்றனர். இக்கைங்கர்யத்திற்காக, அவ்வப்போது அவர்களுக்கு ஆண்டாளின் பரிவட்டங்கள் பரிசாக வழங்கப் படுகின்றன.

> *ஆனியில், கண்ணன் திருக்கோலத்துடன் கனகதண்டியலில் பவனிவரும் பெரியாழ்வார் முன்னிலையிலும்,*
>
> *ஆடி, பங்குனியில், கண்ணாடிச் சப்பரத்தில் மன்னாரோடு பவனி வருகின்ற ஆண்டாளின் முன்னிலையிலும்,*
>
> *புரட்டாசியில், தோளுக்கினியானில் திருமகள் பூமகளுடன் வருகின்ற பெரிய பெருமாள் முன்னிலையிலும்*

இந்நெல்லளவை நடைபெறுகின்றது.

## தேர்த் திருவிழா :

இழுக்கும்போது சுழலும் சக்கரங்களைக் கொண்ட ஓர் ஊர்தியே தேராகும். இஃது இரதம் என்றும் பெயர் பெறும். இது, சங்க கால, பிற்காலங்களில் மன்னர்க்கும் வீரர்க்கும் போரில் மிகுதியாய்ப் பயன்பட்டது. 'தய-ரதன்' என்ற பெயர், இங்கு நினைவுகூரத் தக்கதாம். இற்றைக் காலத்தில் எழில் மிக்க உயர்ந்த சிறந்த வேலைப் பாடமைந்த அழகிய தேர்களைக் கோயில்களில் மட்டுமே காண்கிறோம். பல்சமய இறை யுருவங்களோடு இக, பரலோக வாழ்வினைச் சித்திரிக்கும் பற்பல சிற்பங்களையும், சிற்றின்பத்தைச் சித்திரிக்கும் சிற்சில பொம்மைகளையும் தேரில் காணலாம். தேரை உடலாகவும், ஏனைய அதன் உறுப்புக்களை உடலுறுப்புக்களாகவும் ஒப்புக் காண்பர். சிறியதொரு கோயில் போன்று தோற்ற மளிக்கின்ற தேரில் தெய்வச் சிலைகளை எழுந்தருளச் செய்து, ஊர்வலம் வருவது மிகப் பழங்காலத்திலிருந்தே நடந்திருக்கின்றது. கடவுள் தம் பரிவாரங்களுடன் தமது (நடமாடும்) கோயிலிலிருந்துகொண்டே ஒவ்வொருவர் வீட்டிற்கும் வந்து, அவர்களை உய்விக்க அருள் பாலிப்பதையே தேர்த் திருவிழா உணர்த்துகின்ற தெனலாம். எனவே, கோயிலுக்குச் சென்று வழிபாடியற்ற வாய்ப்பில்லாதார்க்கு ஒரு வரப் பிரசாதமாகத் தேர்த் திருவிழா அமைகின்ற தென்றறிகிறோம்.

எத்தனை ஊர்திகளில் இறைவன் எழுந்தருளிய போதிலும், தேரூர்தி ஏறி அவர் பவனி வருவதைக் காணவே பக்தர் குழாம் காத்துக் கிடக்கின்றது. எனவே, பெருந்திருவிழாக்களின்

இறுதித் (ஒன்பதாம்) திருநாளைத் தேர்த் திருவிழாவாகப் பெரிய கோயில்கள் ஏற்பாடு செய்கின்றன. இத்திருவிழாவின்போது, விமானம் போன்று கூடாக இருக்கும் தேரின் மேற்பாகம் பல்வண்ணச் சித்திரங்கள் தீட்டப் பெற்ற துணிகளால் மூடப்பட்டு, அழகிய உருவங்கள் கொண்ட ஆல வட்டங்கள், தோரணங்களால் அலங்கரிக்கப் படுகின்றது; உச்சிக் கலசம் பொருத்தப் படுகின்றது.

ஆண்டாள் கோயிலைப் பொருத்தவரை, பெரும்பொருட் செலவினைக் கருத்திற் கொண்டு, ஆடிப் பூர பெருந் திருவிழாவின் ஒன்பதாம் நாள் மட்டுமே பெருந் தேரோட்டம் நடத்தப் பெறுகின்றது. எஞ்சிய பெருந்திருவிழாக்களில், அதே நாளில் 'கோரதம்' என்ற சிறு தேரோட்டம் மட்டும் நடைபெறுகின்றது; மார்கழித் திருவிழாவில் அதுவும் கிடையாது.

## பெருந்தேர்த் திருவிழா :

திருஆடிப்பூரத் திருவிழாவின்போது, ஆண்டாளும் ரெங்க மன்னரும் பெருந் திருத்தேரேறி, வீதிவலம் வந்து, மக்களுக்கு அருள்மழை பொழிவதாய் இத்திருவிழா அமைகின்றது.

எட்டாம் திருநாள் இரவு திருத்தேரைக் கடாட்சித்து வந்த ஆண்டாளும் மன்னரும் மறுநாட் காலைப் பூசனை ஏற்கின்றனர். மதுரை அழகர் கோயில் திருமாலிருஞ் சோலை அருள்மிகு சுந்தர ராசன் சார்பாக, அழகர் கோயில் நம்பிகளாம் ஸ்ரீநிவாச, இராகவ ஐயங்கார்கள் நாலுவீதி சுற்றிக் கொணர்ந்த அக்கோயில் பிரசாதமான மாலை பரிவட்டங்களை ஆண்டாளுக்குச் சாற்றுகின்றனர். காலை 5.10 மணியளவில் தனித்தனி தோளுக்கினியானில் புறப்பாடாகிய ஆண்டாளும் மன்னரும் 5.15மணிக்கு கடக லக்கினத்தில் திருத்தேருக்கு வருகின்றனர். அங்குச் சுத்தம் பண்ணுதலாகிய புண்ணியா வாசனம் நடந்து, 'தச தானம்', 'யாத்ரா தானம்' செய்து, திருத்தேரைப் புரோக்ஷித்து ஊஞ்சலில் அமர்கின்றனர், சுமார் 6 மணிக்குத் திருத்தேரில் எழுந்தருளுகின்றனர். அங்கு, நான்குனேரி வானமாமலை ஜீயர் சுவாமிகளின் மண்டபப்படி நடக்கின்றது.

இந்தியாவிலுள்ள பெருந்தேர்களுள் ஒன்றான ஒன்பது சக்கரங்கள் கொண்ட இப்பெருந்தேரை ஒன்பது வடங்கள் கட்டி, காலை 9 மணியளவில் பக்தர்கள் இழுக்கத் தலைப் படுகின்றனர். வடம் பிடிப்போரின் எண்ணிக்கை

மிகும்பொருட்டு பேருந்துகளிலும் அண்மை நகர்களிலும் தேர்த் திருநாள், நேரம் பற்றிய சுவரொட்டிகளை[8] ஒட்டுவதோடு, அங்குள்ள திரை யரங்குகளில் தேர்த் திருவிழா நாள் குறித்த விளம்பர சிலேடும் போடப் படுகின்றது. அனைவருடைய கவனத்தையும் ஈர்க்கும் வண்ணம், ஆனி - பெரியாழ்வார் திருவிழா முடிந்தவுடனேயே இத்திருவிழாவிற்கான விளம்பரங்கள் செய்யப் படுகின்றன. தேரிழுத்து நிலை சேர்ப்பதென்பது பெருங்காரியம். 'தேரை இழுத்துத் தெருவில் விட்டது போல்' என்ற உவமைப் பழமொழி இதனை உணர்த்துதல் காண்கிறோம்.

சென்னைவாசியான, அட்மினிஸ்ரேட்டர் ஜெனரல், எஸ்டேட் ஆப் எஸ்.வி.சேஷா சார்லு அவர்கள், இத்தேரோட்டச் செலவிற்காகப் பெருந்தொகையை நன்கொடை யாக்கியுள்ளார். அதன் வட்டித் தொகையை இதற்குப் பயன் படுத்துகின்றனர்.[9]

நான்கு ரத வீதிகளும் வலம்வந்த தேர், நிலை வந்து சேர்ந்தவுடன், இக்கோயிலைப் புனரமைத்த காரணத்திற்காகத் திருமலை நாயக்கருக்கு முதல் மரியாதை செய்யப் படுகின்றது.

பின்னர், மேளதாள முழக்கோடு திருவாபரணங்கள் கொண்டு சென்று, ஆண்டாள் மன்னுரை அலங்கரிக்கின்றனர். பெரிய திருமொழி, திருக்குறும், நெடுந்தாண்டகங்கள் சேவையாகின்றன. அரையர் 'வாழி மங்கலம்' சேவிக்கின்றார். தீர்த்தமும் சடாரியும் குழுவழங்கலாகின்றன.

தனித்தனி தோளுக்கினியானில் அலங்காரமாகின்ற அவர்கள், சிங்கம்மாள் குறடு எழுந்தருளுகின்றனர். திருவந்திக் காப்புச் செய்யப்பட்டு, தளிகையமுது படைக்கப் படுகின்றது.

பெரிய பெருமாளுக்குப் பாக்கு, வெற்றிலை, தேங்காய், பழம் நிவேதனம் செய்த எழூர் நாயக்கர்கள், மேளதாள முழக்குடன் ஆண்டாள் சந்நிதி சென்று, வெள்ளிக் கிழமைக் குறட்டின் முன்புள்ள திருமலை நாயக்கருக்கு முதலிலும், அதனை யடுத்து நிருவாகிக்கும் மரியாதை செய்கின்றனர். நிருவாகச் செலவில், சருக்கரைப் பொங்கல் குழுவழங்க லாகின்றது.

மதுரை- டி.வி.எஸ்.குடும்பத்தாரின் உபயமாக ஆண்டாள். மன்னுருக்குச் சிங்கம்மாள் குறட்டிலேயே திருமஞ்சனமும் அலங்காரமும் ஆராதனையும் செய்து, குழுவழங்கலாகின்றது. ஆண்டாளின் அவதாரத் தலமான திருப்பூர நந்தவனத்திற்கு எழுந்தருளிய அவர்களுக்கு

அலங்காரத் திருமஞ்சனமும், மலரலங்காரமும், ஆராதனையும் கோயிற் செலவில் நடத்தப் பெறுகின்றன. ஆண்டாள் பிறந்த திருப்பூரநாள் இஃதென்பதால் 'திருப்பல்லாண்டு, 'திருப்பாவை' 'நாச்சியார் திருமொழி' ஆகியன சேவிக்கப் பெறுகின்றன. ஒன்பதாம் நாளுக்குரிய 'அமல னாதி பிரானும்', திருவாய்மொழி ஒன்பதாம் பத்தும் சேவையாகக் குழுவழுங்கலுக்குப்பின் கருவறை எழுந்தருள்கின்றனர்.

மறுநாள் அதிகாலை 4 மணியளவில், மேளதாள முழக்கில்லாமல் 'மௌன பலி' சாதித்துக் கொடியிறக்கப் படுகின்றது.

## கோரதத் திருவிழா :

துணைத் தேரான இச்சிறுதேர், ஏறத்தாழ இருபது பேர்கள் இழுக்கத் தக்கதாய் உள்ளது. அன்றுடக் காலைப் பூசனைக்குப்பின் நடைபெறுகின்ற இத்தேரோட்டச் செலவனைத்தையும் கோயிலே ஏற்கின்றது. தோளுக்கினியானில் அலங்காரமாகி இத்திருத்தேரில் எழுந்தருளி, இயல் தொடக்கத்துடன் ரத வீதிகளைச் சுற்றி வந்ததும் அரையர் வாழி மங்கலம் சேவிக்க, குழுவினர் பெரிய திருமொழி சேவிக்க, சாற்று முறைக்குப்பின் தீர்த்தம் குழுவழுங்கலாகின்றது. சந்நிதி எழுந்தருளியோர்க்கு வழக்கம்போல் திருமஞ்சனம், திருவாராதனை நடைபெற, அன்றைய நாள்பாட்டான 'அமல னாதி பிரானும்', திருவாய்மொழி' ஒன்பதாம் பத்தும் சேவையாகக் கருவறை சேர்கின்றனர்.

| எண் | திருவிழா | எழுந்தருளுவோர் | எழுந்தருகின்ற நேரம் |
|---|---|---|---|
| 1. | ஆனி-<br>பெரியாழ்வார்<br>பெருந்திருவிழா | பெரியாழ்வார் | காலை 9-10 மணி |
| 2. | புரட்டாசி-<br>பெரிய பெருமாள்<br>பெருந்திருவிழா | பெருமாள்<br>திருமகள், பூமகள் | காலை 9-10 மணி |
| 3. | பங்குனி-<br>திருக்கலியாணப்<br>பெருந்திருவிழா | ஆண்டாள் - மன்னர் | காலை 7.30-9 மணி (மேஷ லக்கினம்.) |

மொத்தத்தில், இத்தேர்த் திருவிழாக்களுக்காக ரூ.15,000/- வரை கோயில் நிருவாகம் செலவு செய்கின்றது.[10]

## முத்துக் குறி:

ஆண்டாள் தொடர்புடைய மூன்று பெருந்திருவிழாக்களின் பத்தாம் திருநாள் மாலை நிகழ்ச்சியாக இச்சேவையை அரையர் சாதிக்கின்றார். பரிவட்ட மரியாதை பெற்ற அரையர் பாசுரம் இசைத்துக் கொண்டே ஆண்டாள் நாச்சியாருக்கு, நல்முத்துக்களைப் பரப்பிக் குறி பார்த்துச் சொல்வதாக இஃதமைகின்றது. கோயிற் செலவிலேயே இச்சேவை நடைபெறுகின்றது.

ஆடிப்பூரப் பத்தாம் திருநாள் மாலை 5 மணிக்கு, மஞ்சனை அலங்காரத்துடன் பழங்காலச் சாயப்புடவை கட்டி, சாய்ந்த கொண்டையிட்டு, திருமடல்கள் இயல் தொடக்கத்துடன் தோளுக்கினியானில் மாட, கந்தாடை வீதிகளைக் கண்டருளிய ஆண்டாள், சிங்கம்மாள் குறடு எழுந்தருளுகின்றார். அங்கு, இரவு 8 மணி வரை அரையரால் முத்துக் குறி சேவை சாதிக்கப் படுகின்றது.

> *ஆடிப்பூரம் ஆண்டாளின் பிறந்த நாளாதலால், குழந்தை ஆண்டாளின் பிறந்தநாள் பலாபலன்களை முத்துக் குறியிட்டுப் பார்ப்பதாகக் கொள்ளலாம்.*

அரையர் இசையுடன் வாழி மங்கலம் சேவிக்க, வெள்ளிக் கிழமைக் குறட்டிலிருக்கும் மன்னருடன் சேர்த்தியாக எழுந்தருளிய ஆண்டாளுக்குச் சேர்த்தித் திருமஞ்சனமும், திருவந்திக் காப்பும் செய்து, தளிகையமுது படைக்கின்றனர். திரை வாங்கியபின், வேதப்பிரான் பட்டர், 'வடமொழிக் கவி'யும் ஸ்தானிகர் 'தமிழ்க் கவி'யும் சேவிக்கின்றனர். ஏகாந்தத் திருமஞ்சனத்திற்குப்பின் குழுவழங்கலாக, இருவரும் கருவறை சேர்கின்றனர்.

> *மார்கழி நீராட்ட நோன்பிற்குப் பின், தை 2ஆம் நாள், ஆண்டாள் சந்நிதி தெற்குப் பிராகாரத்தில், திரு ஆடிப் பூரத்து முத்துக் குறி போலவே நடைபெறும் முத்துக் குறி சேவையை, ரெங்க மன்னரையே மணாளனாக அடைய வேண்டி ஆண்டாள் ஆர்வத்துடன் பார்ப்பதாகக் கருதலாம்.*

பங்குனி-திருக்கலியாணத்திற்குப்பின். பத்தாம் திருநாள் மாலே 5 மணிக்கு ஆண்டாள் மன்னருடன் சேர்த்தியாய்க் கலியாண மண்டபம் எழுந்தருளிக் கேட்கின்ற முத்துக் குறி சேவையை,

*இல்வாழ்வு நல்வாழ்வாக அமையக் கருதிய*
*இருவருமே எதிர்காலப் பலாபலன் காண அவாவி*
*நிற்கும் நிலையைச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.*

*மக்கள் மத்தியில் இன்றும் நின்று நிலவும் நம்பிக்கையான, சோதிடம் - சாதகம், முத்துக் குறி, கோடாங்கி-உடுக்கைக் குறி போன்றன பார்க்கும் தன்மையை உலகியல் வழாத முறையில் ஆண்டாளுக்கும் மன்னருக்கும் ஏற்றி, இச் சேவையை அமைத்துள்ளது எண்ணி மகிழத் தக்கதாம்.*

சப்தா பரணம்:

பெருந் திருவிழாக்களின் பத்தாம் திருநாள் இரவு (முத்துக் குறி சேவைக்குப்பின்) பெரியாழ்வார் வழிவந்த வேதப்பிரான் பட்டர் தல புராணம் படிக்கும் சேவையாக இஃதமைகின்றது. ஆனி-பெரியாழ்வார் பெருந் திருவிழாவின் பத்தாம் திருநாள் அவரின் பிறந்த நாளாதலால், அன்று அவருக்கு மங்களா சாசனம் ஆகின்றது. எனவே, பதினோராம் நாள் மாலேயில் தான் இந்நிகழ்ச்சி இடம் பெறுகின்றது. தோளுக்கினியானில் அலங்காரமாகி, சப்தா பரண/ஊஞ்சல் மண்டபம் எழுந்தருளியோரின் முன்னிலேயில் அவர்களேப் பற்றிய புராணம் விவரிக்கப் படுகின்றது. அதற்குமுன் நாத முனியின் வழி வந்தவர்களான அரையர்களின் நாட்பாட்டும் சேவையாதல் காண்கிறோம். இச்சேவைக்குப்பின் வெட்டிவேர்ச் சப்பரத்தில் அலங்காரமாகி, வீதிவலம் வந்து சந்நிதி சேர்கின்றனர்.

| பெருந்திருவிழா | எழுந்தருளுவோர் | மண்டபம் | அரையரின் நாட் பாட்டு, | வேதப்பிரான் பட்டரின் புராண சேவை |
|---|---|---|---|---|
| 1. ஆனி-பெரியாழ்வார் | பெரியாழ்வார், பெரிய பெருமாள், திருமகள், பூமகள். | சந்நிதித் தெரு சப்தாபரண மண்டபம் ; திருப்பதி ஜீயர் சுவாமி, ரூ. 1000/- | திருப்பல்லாண்டு, திருப்பாவை, | வராக புராணமாம் தல புராணத்தில் ஒரு பகுதியான 'பரத்துவ நிர்ணயம்' எனப்படும் மதுரையம்பதியில் பொற்கிழியறுத்த பெரியாழ்வார் சரித்திரம் (வட மொழியிலுள்ளது). |
| 2. திருஆடிப்பூரம் | ஆண்டாள்-மன்னர். | சந்நிதித் தெரு சப்தாபரண மண்டபம் ; சேஷகிரியார் டிரஸ்டு - திருக்குறுங்குடி ஜீயர் சுவாமி ரூ. 1000/- | கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருவாய்மொழி பத்தாம் பத்து. | ஆண்டாள் வரலாறு. |
| 3. புரட்டாசி - பெரிய பெருமாள் | பெரிய பெருமாள், பெரியாழ்வார். | சக்கரக் குளத் தெரு சப்தாபரண மண்டபம் ; திருவேங்கட ராமாநுசரின் தலைமைப் பொறுப்பிலுள்ள பேயாழ்வார் சேரிட்டி ரூ. 1000/- | திருப்பல்லாண்டு, நாச்சியார் திருமொழி. | பெரிய பெருமாள் வரலாறு. |
| 4. பங்குனி - திருக்கலியாணம் | ஆண்டாள்-மன்னர். | ஊஞ்சல் மண்டபம், கோயில். | கண்ணிநுண் சிறுத்-தாம்பு, திருவாய்மொழி பத்தாம் பத்து. | ஆண்டாள் - ரெங்க மன்னர் திருக்கலியாணம். |

## தீர்த்த வாரி:

இது, பெரும்பாலும் பெருந் திருவிழாக்களின் பதினோராம் நாள் காலை நிகழ்ச்சியாய் அமைகின்றது.

அன்றுடக் காலைப் பூசனைக்குப்பின் 9 மணியளவில், விழாவிற்குரியவர் தோளுக்கினியானில் அலங்காரமாகி, சிறிய, பெரிய திருமடல்களின் இயல் தொடக்கத்துடன் புறப்பாடாகி, மாட, கந்தாடை வீதிகள் சுற்றி, வாழைக் குளத் தெருவிற்கு மேற்புறமுள்ள திருமுக்குளத்தின் கீழ்க்கரைப் பக்கத்திலுள்ள தீர்த்த வாரி மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றார். அங்கு அவருக்கு அலங்காரத் திருமஞ்சன மாகின்றது. சடாரியைக் கையிலெடுத்துக் கொண்ட அருச்சகர்,மேளதாள வாத்திய முழக்கோடும் அரையர் இசையோடும் அக்குளத்தினுள் இறங்கி, அவற்றைத் தீர்த்தத்தினுள் மும்முறை மூழ்க வைத்தெடுக்கின்றார். முன்னர், பாதுகாப்புக்காகக் கட்டிய காப்பினைக் கழற்றி, அத்தீர்த்தத்திலேயே போட்டபின், இசை முழக்கத்தோடு தீர்த்த வாரி மண்டபம் சேர்கின்றார். அலங்காரத் தீபாராதனைக்குப்பின், குழுசேவை நடக்கின்றது. திருநெடுந் தாண்டக இயலுடன் சந்நிதி திரும்புகின்றார்; சாற்று முறைக்குப்பின் கருவறை எழுந்தருளுகின்றார்.

> *விழாவிற்குரியோரின் திருமேனியை இரு அருச்சகர்*
> *கைத்தலமாய்க் கொண்டு சென்று, திருமுக்குளத்*
> *தீர்த்தத்தினுள் மூழ்க வைத்தெடுப்பது முண்டு.*[11]

திருமுக்குளத்துள் தீர்த்தமில்லாத வறட்சிக் காலத்தில், வீதிவலம் வந்த விழாவிற்குரியோரைச் சிங்கம்மாள் குறடு கொணர்கின்றனர். அங்கு, அவர் திருமுன்பு கொப்பரை யொன்றை வைத்துத் தீர்த்தம் நிரப்புகின்றனர். அரையர் இசையோடு, அன்னாரின் சடாரியை எழுந்தருளச் செய்த பட்டாச்சாரியார், அதனை அத்தீர்த்தத்தினுள் மும்முறை மூழ்க வைத்தெடுத்து, அவரின் பக்கத்தே திரும்பவும் எழுந்தருளப் பண்ணுகின்றார்.

இத்தீர்த்தவாரி மண்டபச் செலவாக ரூ.300/- வரை அக்தார் திரு.எஸ்.இராம ஐயங்கார் வகையறாக்களான ஒன்பது பங்காளிகள் உபயமாக அளிக்கின்றார்கள்.

மேற்கூறியவற்றுள் ஏதேனும் ஒரு முறைப்படி, ஆண்டாள், பெருமாள், கண்ணன், ஆண்டாள் - மன்னார்,பெரியாழ்வார் ஆகியோரின் பெருந்திருவிழாக்களில் தீர்த்த வாரி நடைபெறுகின்றது.

சித்திரையில் உடையவருக்கும், வைகாசியில் நம்மாழ்வாருக்கும் நடைபெறும் சிறு திருவிழாக்களில் கூட, இத்தீர்த்த வாரி, சிறப்பு நிகழ்ச்சியாக இடம் பெறுகின்றது.

> *திருவிழாக் கால வீதி யுலாவில். தெரிந்தோ தெரியாமலோ ஏற்படுகின்ற தீட்டுகளினின்றும் உலாவிற் குரியோரின் திருமேனியைச் சுத்தி செய்து, கருவறை சேர்த்திட, இத்தீர்த்த வாரி தேவை யாகின்றது.*[12]

> *பொங்கித் ததும்பிப் பூர்ணமாய் ஒரு வுருவாய்க் கிடக்கும் இறை யின்ப வாரிதியில் ஆன்மாக்கள் முற்றும் ஆழ்ந்து ஆனந்திப்பதை இத்தீர்த்த வாரி குறிக்கின்றது.*[13]

உற்சவ சாந்தி:

இது, பெருந் திருவிழாவின் இறுதிப் பன்னிரண்டாம் நாள் மாலே சந்நிதியிலேயே நடைபெறும் நிகழ்ச்சியாகும்.

புண்ணியா வாசனம் எனப்படும் நித்ய ஹோம சுத்திக்குப் பின், கிடுகு சூழ்ந்து கட்டிக் கொளுத்திக் கோயிலேச் சுற்றியும் பிராகாரங்கள் சுற்றியும், மடைப் பள்ளி யெல்லாம் காட்டியும் வெளியிலே எறிகின்றனர். இதனே 'வாஸ்து சாந்தி' என்றும் வழங்குகின்றனர்.

அதன் பின்னர், சுற்றுக் கோயில்களிலுள்ள துவார பாலகர்கள், விஸ்வக் சேனர், இலட்சுமி நாராயணர், கஜ லட்சுமி, உற்சவ மூர்த்தியாம் ஆண்டாள்-மன்னர் ஆகியோருக்குத் திருமஞ்சனம் செய்கின்றனர்.

பெருமாள், பெரியாழ்வார் பெருந் திருவிழாக்களின்போது, கீழக் கோயிலில் மேற்கூறிய முறையில் இவ் வாஸ்து சாந்தி நிகழ்த்தப் பெறுகின்றது.

> *இ:து, ஆசாரக் குறைபாடுகளால் கோயிற் பணிபுரிவோர்க்கும், விழாக்களில் பங்கேற்போர்க்கும் இடையூறு வராமற் காக்கும் படியும், அசுர சக்திகளின் தொந்தரவு ஏற்படாமல் தடுக்கும்படியும் தேவர்களேப் பூஜித்து வேண்டிக் கொள்ளும் கிரிகைகளில் ஒன்ருகும்.*[14]

இவ்வாறு ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாக்களுக்காக ஆகும் கோயிற் செலவு ரூ40,000/- என்கின்ருர், நிருவாகி.

அடிக்குறிப்புகள் :

1. குடபுலவியனார்; புறநானூறு, பா. 18 ; ப.15.
2. இராச மாணிக்கம் (31) ; அரு.சு; ஸ்ரீவில்., க.ஆ., (20.2.1981).
3. எம்.வெங்கட் ராம பட்டர்(49) ; அரு. சு. ; ஸ்ரீவில்.; க. ஆ., (28.7.1981).
4. கோ.விஷ்ணு சித்தன் (33); வங்கி அலுவலர்; ஸ்ரீவில்.;க.ஆ., (24.10.1980).
5. ஸ்ரீனிவாசாச் சாரியார் (75); அ.சு.; ஸ்ரீவில்.; க. ஆ., (9.11.1980).
6. எம்.வெங்கட் ராம பட்டர் (49); அரு.சு.; ஸ்ரீவில்.; க.ஆ., (7.7.1981).
7. எம்.வெங்கட் ராம பட்டர் (49); அரு.சு.; ஸ்ரீவில்.; க. ஆ., (17.7.1981).
8. பின்னிணைப்பு 12 ; பெருந் தேர்த் திருவிழா – நாள், நேரமறிவிக்கும் சுவரொட்டி.
9. எஸ்.கண்ணன் ஐயங்கார் (49) ; ம.சு; ஸ்ரீவில்., க.ஆ., (23.11.1980).
10. இ.தேனையா (32) ; கோயில் நிருவாகி; ஸ்ரீவில்.; க.ஆ., ( 11.1.1981).
11. எம். வெங்கட் ராம பட்டர் (49) ; அரு.சு; ஸ்ரீவில்., க.ஆ., (17.7.1981).
12. கோவிந்த ராஜ ஐயங்கார் (66) ; வே.பி.ப; ஸ்ரீவில்.;க.ஆ., (7.2.1981).
13. எம். வெங்கட் ராம பட்டர் (49) ; அரு.சு. ; ஸ்ரீவில்., க.ஆ., (7.7.81).
14. எம். வெங்கட் ராம பட்டர் (49) ; அரு.சு. ; ஸ்ரீவில்., க.ஆ., (22.7.1981).

## 6. திருவிழாத் தொடர்புடையோர்

இத்திருக் கோயிலோடு தொடர்புடைய பலரும் கோயில் திருவிழாக்கள் சீரும் சிறப்புமாக நடைபெற உற்ற துணையாகின்றனர். இவ்வகையில் கொடைஞரும்,

குத்தகைதாரரும், பணியாளரும், நிருவாகத்தினரும் பக்தர்களும், பொது மக்களும், ஆற்றும் திருவிழாத் தொண்டுகளை இவண் காண்போம்.

## கொடைஞர் - குத்தகைதாரர் :

*கோயிலுக்கு நன்கொடையாக 94 ஏ. 73 செ. நஞ்சையும், 49 ஏ. 15 செ. புஞ்சையும், 2ஏ. 25 செ. தோட்டமும் கிடைத்துள்ளன. அன்னதான மலர்க் கட்டளைகளாக 19 கட்டளைகள் நடத்தப் பெறுகின்றன. சிலர், சுவாமிகளைச் சொந்த மண்டபங்களில் எழுந்தருளச் செய்து, திருமஞ்சன, அலங்கார, ஆராதனை நடத்தி, நைவேத்தியம் படைத்து குழுவழங்கல் செய்கின்ற 'உபய மண்டபப்படி' நடத்துகின்றனர். சிலர், திருமஞ்சனமில்லா 'விடாயாற்று மண்டபம்' நடத்துகின்றனர். சொந்த மண்டபமில்லாச் சிலர், கோயிலுக்குரிய 'சிங்கம்மாள் குறடு' போன்றவற்றில் 'மண்டபப்படி' நடத்துகின்றனர்.*

*கோயில் நஞ்சை 291 ஏ. 26 செ., புஞ்சை 1796 ஏ. 29 செ., தோப்புக்கள், கடைகள் போன்றவற்றை மண்டபப்படி நடத்தும் பொறுப்பிற்காகவே குத்தகை எடுத்துள்ளோரும், அமுதுபடியாகக் கோயிலிலிருந்து அரிசி பெறுவோரும், கட்டிய நன்கொடைப் பணத்திற்கு வட்டி போன்று அரசுக் கழிவாகப் பணம் பெறுவோரும் 'மண்டபப்படி' நடத்துகின்றனர்.*

*சாதி, மதப் பாகுபாடு, ஏழை, பணக்காரர் வேறுபாடு எதுவுமின்றி, இம்மண்டபதாரர்களுக்கு எழுந்தருளுவோரின் மாலை, பரிவட்டம் சாற்றப்பட்டு, சடாரி சாதிக்கப் படுவதாகிய மரியாதை செய்யப் படுகிறது.*

## பணியாளர் - நிருவாகத்தினர் :

*கடவுளரின் திருமேனியைத் தீண்டி, நீராட்டி, அலங்காரம் செய்து, பூசனை செய்யும் பொறுப்புள்ளவர்களாக - ஆண்டவரின் பிரதிநிதிகளாக உள்ள, அருச்சகர்கள், அஷ்டோத்திர, சகஸ்ர நாம அருச்சனைகள் செய்கின்றனர். மேற்கூறிய அருச்சனைகளுக்கு முறையே 50 காசு, ரூ. 1.25 காசு எனப் பக்தர்கள் தருகின்ற கட்டணத் தொகைகளில், முறையே 22, 25 காசுகள் கோயிற் கட்டணம் போக, எஞ்சிய தொகைகள் அருச்சகர்கள் பங்காகின்றன. இவர்கள் அன்றாடம் செய்கின்ற பூசனைக்கு வேண்டிய அமுதுபடிக்கு ரூ. 17,000/- மும் மளிகைச் சாமான்களுக்கு ரு 50,000/- மும் ஆண்டுச்*

செலவாகின்றது. திருவிழாக் காலங்களில் இவர்களின் சேவை மிகுதியாகின்றது.

> *இவர்கள் செய்கின்ற கிரியைகளுடைய பொதுநோக்கம், மேலுலகங்களிலுள்ள அருட் சக்திகளைப் பூலோகத்திற்கு இறக்கி, அங்குள்ள உயிர்களிடம் அவை எளிதில் சாரக் கூடிய முறையில் அவற்றைப் பக்குவப் படுத்தி உலகிற் பரப்புதலாம்.*[2]

*என்று ஓர் அனுபவ ஞானி கூறியுள்ளார்.*

நாத முனிகளின் வழிவந்த இசை யரசர்களாம் அரையர்கள், திவ்வியப் பிரபந்த சேவையையே முதன்மைப் பணியாய்க் கொண்டவர்கள். அவர்கள், 'நாட்பாட்டு'ச் சேவையின்போது, முதல் பாசுரத்தை இயல் தொடக்கமாக இசையோடு சேவிக்கின்றார்கள். எஞ்சிய பாசுரக் குழு சேவைக்குப்பின், ஓரிரு பாசுரங்களைச் சாற்று முறையாகப் பாடி முடிக்கின்றனர். அத்யயனத் திருவிழாக் காலத்தில் அரையரின் பாசுர வியாக்கியானம் தெய்வீகக் கலையாய்த் திகழ்கின்றது. அவருக்கே யுரிய குல்லா, பரிவட்டம், மாலை அலங்காரத்தோடும், 'சிங்கி' என்ற தாளக் கருவியோடும் கம்பீரமாக நின்று, பாசுர அடிகளின் தொடக்கந்தோறும் காலடி மாற்றி, ஓங்கி உதைத்து, ஓசையூட்டி, அபிநயம் பிடித்து அவராற்றும் விரிவுரை விந்தையானதே!. அச்சேவைக்காக அடியார்கள் வழங்குகின்ற காணிக்கைப் பணத்தினைக் கடவுளின் நாமம் போற்றி ஏற்றருள்கின்றார். நீராட்டக் காலத்திலும் இவரின் பாசுர சேவையுண்டு. கோயில் முதல் மரியாதைக்குரிய இவரே தைலக் காப்புப் பிரசாதம் வழங்குகின்றார்.

திருமஞ்சனக் காலத்திலும் பூசனைச் சமயத்திலும், பிரசாதம் வழங்கும் வேளையிலும் அருச்சகருக்குத் துணை நிற்பவர்களும், பிரசாதம் தயாரிப்போரும், வாகனங்களோடு ரூ. 7,86,428.50 விலை மதிப்புடைய ஆபரணங்களைக் கணக்காகக் கொடுத்து வாங்குவோரும், துளசி, மாலை, கிளி முதலிய பூசைக்கு வேண்டிய பொருட்களைத் தருவோரும், வாகனங்களைத் தூக்கும் கைங்கர்யகாரர்களும், தீபதூபங்களுக்குத் தேவையான சூடம், சாம்பிராணி, ஏலம், கிராம்பு, பச்சைக் கற்பூரம், சந்தனம், குங்குமம் முதலியவற்றையும் சமையலுக்கு வேண்டிய பொருட்களையும் அளவுப்படி எடுத்துக் கொடுத்துக் கணக்கு வைப்போரும், கடவுளருக்குத் தேவையான புடவை, வேட்டிகள் பரிவட்டங்கள், பட்டுப் பீதாம்பரங்கள் போன்றவற்றை எடுத்துக் கொடுத்துக் கணக்குப்படி வாங்கி வைப்பதோடு

தைலங் காய்ச்சும் பொறுப்பேற்றுள்ளோரும் முறையே பரிசாரகர், மடைப் பள்ளிப் பரிசாரகர், கருவூலப் பண்டாரம் (ஸ்ரீபண்டாரம்), பண்டாரி, ஸ்ரீபாதந் தாங்கிகள்,வெஞ்சன அறையினர், பரிவட்ட அறையினர் என்றழைக்கப் படுகின்றனர்.'சாத்தா ஸ்ரீவைஷ்ணவா'வான இவர்களை, 'ஸ்தானீகர்'கள் என்றழைக்கின்றனர். இவர்கள் இக்கோயிலின் இரண்டாம் மாரியாதைக் குரியவராவர்.

பெரியாழ்வார் வழிவந்தவர்களான வேதப்பிரான் பட்டர்கள் நாமாவளி அருச்சனை சொல்லும் தொழிலினராவர். இவர்கள் பூசனை வேளையில் திருமஞ்சனக் கவி, ஊஞ்சல் கவி, வேத விண்ணப்பம் முதலியவற்றை முன்னின்று சேவிக்கின்றனர். திருவிழாக் காலங்களில் - குறிப்பாக சப்தா பரணத்தன்று, புராணங்கள் படிப்பது இவர்களின் தலையாய பணியாகும். வைகாசி வசந்தம் இவர்களின் 'கோதா ஸ்துதி' உற்சவமாக நடைபெறுகின்றது. இவர்கள் இக்கோயிலின் மூன்றும் மரியாதைக் குரியவராவர்.

உள்துறை நிருவாகியாக, திருவிழா நாட்கள் உட்பட அனைத்து நாட்களிலும் பூசனை முறைகள் சரிவர நடைபெறுகின்றனவா எனக் கண்காணிப்பவர் மணியக்காரர் எனப்படுகின்றார். இவர், மேளக்காரர் உட்பட அனைத்துப் பணிபுரிவோரையும் மேற்பார்வை யிடுவோராய்ச் செயல்படுகிறார். ஆண்டாள் மாலைகளை மதுரைக்கள்ளழகர் கோயிலுக்கும் திருப்பதி வெங்கடேசுவரர் கோயிலுக்கும் பரிசாரகர் கொண்டு செல்லும்போது, மணியக்காரரான இவரும் உடன் செல்லுகின்றார்.

பரம்பரையாய்ப் பூசனைக் காலங்களில் நாதசுர மேளம் வாசித்துத் தாளம் தட்டுபவர்கள் "மேளக் காரர்கள்" எனப் படுகின்றனர்.

திருவிழாக் காலங்களில் பந்தல் அலங்காரப் பொறுப்பினை மேற்கொள்ளும் தேவமார்கள், 'கொத்தமார்' எனப்படுவர். தற்போது ஸ்ரீபாதந் தாங்கிகளின் 'வாகன இழுவை' சேவையையும் அவர்களிடம் உரிய தொகை பெற்று, இவர்களே செய்கின்றனர்.

பரம்பரைப் பணிபுரியும் இவர்கள் ஆற்றுகின்ற சேவைகளுக்கு, உரிய கோயில் மரியாதை, 'அருளிப் பாடு' முறையில் வரிசைக் கிரமமாக வழங்கப்படுகின்றது. அவர்கள் காலங் கழித்தற்குத் தேவையான உணவு பெற, கோயில்

நிலங்களும், குடியிருக்க வீடுகளும், உடுக்க சுவாமிகளின் சேலை, வேட்டி, பரிவட்டங்களும் வழங்கப் படுகின்றன.

அலுவலகத் தலைமையர், கணக்கர், எழுத்தர் என 11 பேரும், கோயிலைச் சுத்தம் செய்யும் பணிகளோடு எடுபிடி வேலைகள் செய்யும் உள்துறைச் சிப்பந்திகள் 54 பேரும் மாத ஊதியத்துடன் பணி யாற்றுகின்றனர்.

கோயில் நிருவாகிக்குத் தக்க ஆலோசனை வழங்கிட, அறங் காவலர் குழு ஒன்றுள்ளது. கௌரவப் பணியேற்ற இவர்கள், பொது மக்களின் மரியாதைக் குரியவர்களாய் இருக்கின்றனர்.

அரசின் பிரதி நிதியாக, இக்கோயிலின் அனைத்துப் பணிகளையும் மேற்பார்வையிட்டு, ஆணை செலுத்துபவராக நிருவாகி இருக்கின்றார். ரொக்கம் ரூ.46,681/-, நெல் 776 கோட்டை, வைக்கோல் 434 கட்டு என வருகின்ற 'ஆண்டு வருமானம்' ரூ.3,03,814.25சை ஒழுங்காக வசூலிப்பது; அத்தொகைக்குள் கோயிற் செலவுகளை அமைத்துக் கொள்வது; கொடைஞர்களை அணுகி, திருவிழாக் காலங்களில் சிறப்பான நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்வது; வரவு செலவுக் கணக்குகளைச் செம்மையாக வைத்திருப்பது போன்ற அரும்பெருங் கடமை யுடையவராக அவரிருக்கின்றார்.

## பக்தர்கள் - பொதுமக்கள்:

நாராயணா' எனச் சொல்லாத நாவென்ன நாவே; அவனைக் காணாத கண்ணென்ன கண்ணே; அவன் புகழ் கேளாத செவியென்ன செவியே" என்று ஏற்றுக் கொண்ட தெய்வத்தை ஏற்றிப் போற்றித் தொழுது மகிழ்வதே யன்றி, ஏனைய தெய்வங்களை மனத்தாலும் எண்ணாதவராய் இக்கோயில் பக்தர்கள் உள்ளனர். இக்கொள்கையில் கண்ணும் கருத்துமாய் இருப்போர்கூடத் தங்களுக்குள் வடகலை, தென்கலைப் பிரிவு சொல்லித் திரிகின்றனர். 'எம்மதமும் சம்மதம்' என எண்ணும் பொது மக்கள், இக்கோயிலுக்கும், கோயில் திருவிழாக்களுக்கும் வருகை தந்து, வெற்றிலை, பாக்கு, பழம் சமர்ப்பித்து, மாலை சாற்றித் தொழுகை நடத்தி மகிழ்வதைப் பெரும் பேறாகக் கருதுகின்றனர். சைவ சமயத் தீவிரவாதிகள் தவிர்த்து இந்து மதத்தவர் அனைவருமே இக்கோயிலுக்கு வருகை தந்து சிறப்பிப்பதால், இக்கோயிலும், இக்கோயில் திருவிழாக்களும் போதுமான மக்களாதரவைப் பெற்றிருப்பது புலனாகும்.

அண்மையில் சிங்கப்பூரைச் சேர்ந்த தொழிலதிபர் திரு.இராம கிருட்டிணன் என்பவர் பிரார்த்தனை செய்து, அவர் வேண்டிய குழந்தை வரம் கிடைத்தவுடன் ரூ2. இலட்சம் செலவில் சக்கரத் தாழ்வார் கோயில்முன் பிரசங்க மண்டபம் கட்ட முன்வந்துள்ளார்; கட்டுமானப் பணி தொடங்கப் பட்டுள்ளது.

நாட்பூசனையில் எஞ்சிய தளிகைகள் குறைந்த விலையில் பொது மக்கட்கு விற்பனை செய்யப் படுகின்றன. இக்கோயிலில் நடத்திப் பதிவு செய்யப்பெறும் திருமணக் கட்டணமாக ரூ15/-தான் பெறப்படுகின்றது.[5] திருவிழாக் காலங்களில் மட்டுமின்றி ஏனைய நாட்களிலும் சேவார்த்திகளுக்குத் தேவையான தங்கும் வசதி, தண்ணீர் வசதி, ஒளி வசதி போன்றன செய்து தரப் படுகின்றன். கடிதங்கள் போட அஞ்சற் பெட்டி ஒன்றுள்ளது; இருந்து படிக்கும் வசதிகளோடு கோயில் நூல் நிலையம் ஒன்றுள்ளது. இக்கோயில் திருவிழாக்களின் நாள் நேரத்தை மட்டுமல்லாது, ஏனைய வைணவக் கோயில் திருவிழாக்களையும் குறித்திடும் சுவரொட்டிகள் பல நிருவாக அலுவலக முன்சுவரில் ஒட்டப் பட்டுள்ளன. திருவண்ணா மலைக் கோயிலுக்குச் செல்ல வழிகாட்டும் வண்ணம், அக்கோயில் வரைபடம் ஒன்று முன் பகுதியில் தொங்கவிடப் பட்டுள்ளது. தல புராண ஆங்கில தமிழ்ப் புத்தகங்களோடு, 'திருப்பல்லாண்டு' 'நாச்சியார் – திருமொழி'ப் பாசுரப் புத்தகங்களும், 'ஆண்டாள்-ரெங்க மன்னர்', படங்களும் அலுவலகத்தாரால் குறைந்த விலைக்கு விற்கப் படுகின்றன.[6] வேற்றூர், வேறு மாவட்டம், மாநிலம், நாடுகளிலிருந்து இக்கோயிலுக்கு வருகை தருவோர்க்கு, முடிந்த அளவு அவர்கள் மொழியிலேயே கோயிற் செய்தி யுரைக்கும் கோயில் வழிகாட்டிகள் உள்ளனர்.

மக்களுள் ஒரு பகுதியினரான வணிகர் குழாத்துக்குச் சிறப்பான வருவாய் கிட்டும் காலமாகத் திருவிழாக் காலம் அமைகின்றது. கொட்டகை போடுவோரும், குலை வாழை நடுவோரும், வண்ணத் தாள் ஒட்டுவோரும், சுண்ண வண்ணம் தீட்டுவோரும், துணிப் பந்தல் இடுவோரும், சுவைப் பண்டம் தயாரிப்போரும், புது மணல் பரப்புவோரும், புத்தாடை தைப்போரும் விற்போரும், எண்ணெய் வெண்ணெய்க் கடையினரும், வண்ணப் பூமாலைக் கடையினரும், வெற்றிலை, பாக்கு, தேங்காய், பழம், பத்தி, சூடம், சந்தனம், குங்குமம், பன்னீரென அருச்சனைப் பொருட்கள் விற்போரும், கண்கவர் பொம்மை, கிளி, ஊது குழல், பலூன்களென விளையாட்டுப் பொருட்கள் விலை கூறுவோரும், வளையல்,

ரிப்பன், பாசி, ஊசி, மஞ்சள் தூள் என மகளிரின் மனங்கவர் பொருட்களை விலை பகர்வோரும், அரிசி, பயறு, பருப்பு, சீனி, சருக்கரை, கருப்புக்கட்டி, உப்பு, புளி, வற்றலெனப் பலசரக்குகளை விலையாக்குவோரும், காய்கனி விற்போரும், பரிசுச்சீட்டு விலை பகர்வோரும், சோதிடங்கள் சொல்வோரும், போட்டோ எடுத்துத் தருவோரும், தேநீர், காபி, சர்பத், ஐஸ், இளநீர் என அருந்தும்பொருள் தருவோரும், பால்கோவா விலை கூறுவோரும், ஹோமியோபதி, சித்த மருத்துவ மருந்துகளோடு இங்கிலீஷ் மருந்துகள் விற்போரும், முற்கூறியவற்றை வாங்குவோரும் எனப் பற்பலரும் ஒரு பெரும் பணச் சுழற்சியையே உருவாக்குகின்றனர் எனலாம்.

> *மொத்தத்தில் பொதுமக்களுக்கொரு பல்கலைக் கழகமாக, அறநெறிக் கூடமாக, அன்பு எனும் நற்பண்பின் ஊற்றிடமாக, பொருளாதாரச் சுழற்சி மையமாக, துன்பந் நீக்கி இன்பம் நல்கும் நம்பிக்கைப் பிறப்பிடமாக, ஒற்றுமை யுணர்த்தும் ஒளி விளக்காக, வழிபாட்டுநிலையமாக, தமிழ் வளர்ச்சிக் கூடமாக, சமய நெறிச் சாலையாக, திக்கற்ற ஏழையரின் புகலிடமாக இக்கோயில் அமைந்திருக்கின்ற தெனலாம்.*

இக்கோயிலுக்குச் சுவாமி தரிசனம் செய்ய வடமாநிலங்களிலிருந்து ஏராளமான பேர்கள் வருகை தருவதால், ஸ்ரீவில்லிபுத்தூரைச் சுற்றுலா இடமாக ஆக்குவதோடு, யாத்திரிகர் ஸ்தலமாகவும் ஆக்க அரசுக்குக் கோரிக்கை விடப் பட்டுள்ளது. ஸ்ரீஆண்டாள் பெயரில் மகளிர் கல்லூரி அமைக்க, ஊர்மக்களும், தொகுதி சட்டமன்ற உறுப்பினரும் ஏற்பாடு செய்து வருகின்றனர். இவை நகர் முன்னேற்றங் கருதி உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியனவாம்.

## அடிக்குறிப்புக்கள்:

1. எஸ். கண்ணன் ஐயங்கார் (49); ம.சு.; ஸ்ரீவில்., க.ஆ., (23.11.1980).
2. ஏ. சொக்கலிங்கம் : 'முன்னுரை'; சமயக்கின்டர் கார்டன் அல்லது ஆலயங்களின் உட்பொருள் விளக்கம் II. ப. VI.
3. தினமலர், 20.1.81; மதுரைப் பதிப்பு.

4. பின்னிணைப்பு 13., அரவணைத் தளிகை விற்பனை விபரம்.

5. பின்னிணைப்பு 14., கோயிலில் திருமணம் செய்ய விதிகள்.

6. பின்னிணைப்பு 15., ஸ்ரீ ஆண்டாள் ரெங்க மன்னார் படங்கள் வகையறா விற்பனை விபரம்.

## 7. முடிவுரை

திருவில்லிபுத்தூர் அருள்மிகு ஆண்டாள் கோயில் திருவிழாக்களைக் கண்டறிந்தும், கேட்டறிந்தும், தீர விசாரித்தறிந்தும் கிடைத்த தகவல்கள் இந்நூலின்கண் வெளியிடப் பட்டுள்ளன; திருவிழாக் கிரிசைகளும் நடைமுறைகளும் விளக்கப் பட்டுள்ளன.

தனக்கெனத் தனிச் சந்நிதியில்லா ரெங்க மன்னார், ஆண்டாள் சந்நிதியில் அவரோடும் சேர்த்தியாய்க் குடிகொண்டுள்ளார். பெருமாளுக்கு நிகராக ஆண்டாள் என்னும் ஆண்டாளாழ்வாரும் பக்தர்களால் மதிக்கப் பெறுவதை இது குறிக்கின்றது.

ஆடிப் பூரத்தில் ஆண்டாளின் பிறந்த நாளும், பங்குனியில் ஆண்டாளை மன்னார் மணந்த நாளும், சித்திரை-வைகாசி வசந்த காலத்தில் அவர்களின் தேனிலவு நாட்களும் திருவிழாக்களாக்கப் பட்டிருத்தல் காண்கின்றோம்.

இக்கோயிலில், பெருமாளுக்கு மட்டுமல்லாது, பன்னிரு ஆழ்வார்களுக்கும், ஆசாரியர்களுள் சிலருக்கும் திருவிழாக்கள் எடுக்கப் பெறுகின்றன. வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தமையால், அவர்களை வானுறையும் தெய்வ நிலையுற்றவராக- கண்கண்ட கடவுளராகப் பக்தர்கள் கருதித் தொழுவதையே இவை உணர்த்துகின்றன; ஏனையோரையும் இத்தகு இறைநிலை எய்தத் தூண்டுகின்றன. இவ்வாழ்வார்கட்கும் ஆசாரியர்கட்கும் 'மங்களா சாசனம்' நடைபெறுகின்றது. பெரியாழ்வார் மங்களா சாசனத்தின் பொருட்டு, ஆடியில் 'திருத்தங்கல் அப்பன்' இங்கு வருகை தருவது அறியத் தக்கது. ஆண்டாள், பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், உடையவர் ஆகியோரின் திருவிழாக்களிலும், அத்யயனத் திருவிழாவிலும் நாலாயிரப் பாசுரங்கள் முழுமையாகச் சேவையாகின்றன. பெரியாழ்வாரின் பரத்துவ நிர்ணயமும், நம்மாழ்வாரின் சொர்க்க மீட்சியும், திருமங்கை யாழ்வாரின் திருவேடுபறியும் சிறப்பு நிகழ்ச்சிகளாய்

அவரவர் திருவிழாக்களின்போது இடம் பெறுகின்றன. இத்தலத்திற்குரிய பெரியாழ்வாருக்கு மட்டும் ஆனியில் 'கத்த பொடித் திருவிழா' சிறப்பு நிகழ்ச்சியாய் அமைகின்றது. கருடாழ்வாருக்கு ஆடியில் தனித்திருவிழா நடத்தப் பெறுகின்றது.

வாகனங்களில் கருடனும், சேவையில் கருட சேவையும் பெருமாளுக்கே உரியதாதல் அறிகின்றோம். பெரும்பாலான பெருவிழாக் கருட சேவையின் போது பெரியாழ்வார் உடன் வருதலோ எதிர் சேவித்தலோ செய்வது குறிப்பிடத் தக்கதாம்.

திருக்கோல மாற்றங்கள் பெருமாளுக்கும் பெரியாழ்வாருக்கும் மட்டுமே உரித்தாதல் காண்கிறோம்.

கடவுளர் சயன சேவை, ஊஞ்சற் சேவை முதலியன மேற்கொள்ள, மக்களோ கண்டு கைதொழும் பொதுஜன சேவை செய்கின்றனர். ஏனைய, கோயிற் பணியாளர் மேற்கொள்ளுகின்ற சில சேவைகளுக்கு மக்கள், 'குழு சேவை' (கோஷ்டி சேவை) ஆற்றுகின்றனர். அதற்குக் கைமாறாகக் கடவுளரின் பிரசாதத்தைப் பெற்று மகிழ்கின்றனர்.

வைகானச சூத்திர சேவை, கைத்தல சேவை போன்றவற்றை அருச்சகர்கள் ஆற்றுகின்றனர்.

நாட்பாட்டுச் சேவையின் இயல் தொடக்கம், சாற்று முறை, பாசுர வியாக்கியானம், முத்துக் குறி, வாழி மங்கலம், அமிர்த மதனம் போன்றவற்றைப் பிரபந்தப் பாசுர சேவையோடு அரையர் ஆற்றுகின்றார்.

தமிழில் ஊஞ்சற் பாட்டு, திருவேடு பறி, செய்த விண்ணப்பம் முதலிய சேவைகளை ஸ்தானீகர் செய்கின்றார்.

வடமொழியிலுள்ள திருமஞ்சனக் கவி, ஊஞ்சற் கவி, கோதா ஸ்துதி, யதிராஜ விம்சதி, வேத விண்ணப்பம், புராணம் போன்ற சேவைகளை வேதப்பிரான் பட்டர் செய்கின்றார்.

தை - பஞ்சாங்க சேவையை மணியமும், யுகாதி பண்டிகை - பஞ்சாங்க சேவையைப் பெரிய கோவில் தாஸரும் மேற்கொள்ள, ஸ்தோத்திர பாஷ்ய சேவைகளை முறையே ஆளவந்தாரும் ஸ்ரீபாஷ்யமும் செய்கின்றனர்.

கடவுளரின் பிரதிநிதியாம் அருச்சகர் தவிர்த்து, ஏனையப் பணியாளர்கள், அரையர், பெரியநம்பி, வேதப்பிரான் பட்டர், மிஞ்சுமூர் தெற்குமாட நல்லார், ஜீயர் சுவாமி, என்ற தீர்த்தக் கிரம வரிசையில் அருளிப் பாடாகி மரியாதை பெற்றே

சேவை மேற்கொள்கின்றனர். இவ்வரிசையிலேயே ஊஞ்சல் தீபாவளிக் காணிக்கைப் பணத்தினை அவர்கள் செலுத்துகின்றனர். மண்டபதாரர்க்கும், கோயில் அதிகாரிகளுக்கும் கோயில் மரியாதையுண்டு. ஆழ்வார்கட்கும் ஆசாரியர்கட்கும் அருளிப் பாடாகி, மரியாதை செய்யப்படும். கார்த்திகை-தீபத் திருவிழாவின்போது, நம்மாழ்வார் பாசுர சேவை செய்வதாகக் கருதி, அவர் தொண்டைக்கு எண்ணெய்க் காப்பிடுகின்றனர். பொதுவாக, அரையரே அவர்களின் பிரதிநிதியாக நின்று பாசுர சேவை யாற்றுகின்றார். அடுத்ததாகப் பரிசாரகர்க்கும் குழுவினர்க்கும் இச்சேவையில் பங்குண்டு.

திருக்கலியாணம் போன்ற ஏனைய காரியங்களில் வேதப்பிரான் பட்டர், பெரியாழ்வாரின் பிரதிநிதி யாகின்றார்.

பெரிய பெருமாள் பெருவிழாவின்போது, பெரியாழ்வார் சந்நிதியில் பங்குனியில் நடைபெற்ற ஆண்டாள்-மன்னார் திருக்கலியாணத் திருவிழா நடத்திக் காட்டப் பெறுகின்றது.

வையாளி காணுதல், அம்பு போடுதல், வழுக்குமர மேறுதல், உறி யடித்தல், தேரோட்டம் போன்ற ஆடவரின் வீர விளையாட்டுக்களும், பல்வகை நீராட்டம், ஊஞ்சல், அம்மானை போன்ற மகளிரின் மகிழ்ச்சி விளயாட்டுக்களும் இத்திருவிழாக்களில் இடம்பெறுகின்றன.

பல் துலக்குதல், நாக்கு வழித்தல், நீராடுதல், தாம்பூலம் தரித்தல், ஆடை அணிதல், அணிகலன் பூணுதல், தலை சீவிச் சிங்காரித்தல், கண்ணாடி பார்த்தல், கட்டியங் கூறுதல், படையல் செய்தல், உண்டு களித்தல், பள்ளியறை புகுதல் போன்ற மக்களின் பழக்க வழக்கங்களும், நோன்பேற்றல், ஹோமம் வளர்த்தல், தாலி கட்டுதல், அம்மி மிதித்தல் போன்ற சடங்கு முறைகளும் திருவிழாக்களில் இடம் பெறுகின்றன.

மக்களின் நம்பிக்கைகளான முத்துக் குறி, திருவந்திக் காப்பு, நோன்பு போன்றவை இடம் பெறுகின்றன.

பண்டிதர் உட்பட பல இனத்தவர்க்கும் மண்டபப்படி சேவை யாற்றும் உரிமை தரப் பட்டுள்ளது. ஊரிலுள்ள அனைத்து இனத்தவர் தெருக்களுக்கும் சுவாமிகள் எழுந்தருளும் வண்ணம், இம்மண்டபப்படி சேவை அமைக்கப் பட்டுள்ளது. சமதர்ம சமுதாயம் மலர இது துணை புரியலாம்.

இத்திருவிழாக்களில் பன்னிருவரின் நாலாயிர திவ்வியப்

பிரபந்தச் சேவையோடு, ஆசாரியர்களின் பிரபந்தங்களும், ஊஞ்சல், கப்பல், நாச்சியார் கும்மி போன்ற இலக்கியப் பாடல்களும் சேவை யாகின்றன. எனவே, தமிழ் வளர்ச்சிக்கு இக்கோயில் திருவிழாக்கள் உறுதுணையாதல் உணர்கின்றோம்.

வைணவத் தலத்திற்கே யுரிய நைவேத்தியச் சிறப்பு, முப்பழம், பால் மாங்காய், அமிர்த கலசம் போன்ற உணவு வகைகளால் புலனாகின்றது.

அங்கொன்றும் இங்கொன்றுமாயிருக்கும் வைணவத் தலங்களை ஒருங்கிணைக்கும் அரிய முயற்சியாகவே, மதுரைக்கும் திருப்பதிக்கும் ஆண்டாள் மாலை அனுப்பப்படும் திருவிழா நிகழ்ச்சிகள் அமைகின்றன எனலாம்.

கடவுளின் திருக்கோலம் கண்ணுக்கு விருந்தளிக்க, அவரின் திருநாமம் செவிக்கமிழ்தாக, திருவிழாக் காலத்தில் இடம்பெறும் பல்சுவை நிகழ்ச்சிகள் மக்களுக்குக் காட்சி இன்பத்தையும் கேள்விச் சுவையையும் தருகின்றன. நைவேத்தியப் பொருட்களோடு பல்சுவைப் பண்டங்களையும் வாங்கியோ, பொங்கியோ உண்டு களிக்கின்ற மக்கள், திருத்துழாய் இலை மணத்தையும் பூமணத்தையும், ஏனைய பத்தி சூட வாசனையையும் நுகர்ந்து, இறை யெண்ணம் நெஞ்சிலெழ, உடல் புளகாங்கிதம் அடைந்து, மெய்மயிர் சிலிர்க்க, நெக்கு நெக்குருகி, கண்வழி நீர் சோர, மெய்மறந்து கடவுளைத் தொழுது மகிழ்கின்றனர். எனவே, கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனின்பக் களஞ்சியங்களாய் இக்கோயில் திருவிழாக்கள் அமைந்துள்ளன என்றறிகின்றோம்.

இக்கோயிற் சுவாமிகளும், ஆழ்வார்களும், ஆசாரியர்களும் எழுந்தருளுகின்ற வாகனங்களின் பொருத்தத்தைத் தத்வார்த்த அடிப்படையில் ஆய்வதும், பொழுதுபோக்கு, தத்துவம், சமயம் சார்ந்தவைகளாக இக்கோயில் திருவிழாக்களைப் பகுத்தாய்வதும் பயன்மிக்க ஆய்வுகளாகலாம். இக்கோயில் திருவிழாக்களை ஏனைய வைணவக் கோயில் திருழாக்களோடும், பிறசமயக் கோயில் திருவிழாக்களோடும் - குறிப்பாக சைவ சமயப் பெண்தெய்வத் திருவிழாக்களோடும் ஒப்பிட்டாய்வது, இக்கோயில் திருவிழாக்களின் தனித்தன்மைகளையும், பல்சமயச் சடங்கு சம்பிரதாயங்களின் தாக்கங்கள் - செல்வாக்குகள் ஒன்றோடொன்று ஊடுருவி நின்று அவ்வச்சமயக் கோயில் திருவிழாக்களில் ஏற்படுத்தியுள்ள மாற்றங்களையும் எடுத்தியம்புகின்ற நல்லாய்வாக அமையலாம்.

# பின்னிணைப்புக்கள்

1. நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களின் பட்டியல்.

| வரிசை எண் | பாசுரப் பெயர் | பகுப்பு | பாடியவர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| | திருமொழி : | முதலாயிரம் | | |
| 1. | திருப்பல்லாண்டு | முதலாயிரம் | பெரியாழ்வார் | 12 |
| 2. | பெரியாழ்வார் திருமொழி | முதலாயிரம் | பெரியாழ்வார் | 461 |
| 3. | திருப்பாவை | முதலாயிரம் | ஆண்டாள் | 30 |
| 4. | நாச்சியார் திருமொழி | முதலாயிரம் | ஆண்டாள் | 143 |
| 5. | பெருமாள் திருமொழி | முதலாயிரம் | குலசேகரப் பெருமாள் | 105 |
| 6. | திருச்சந்த விருத்தம் | முதலாயிரம் | திருமழிசைப் பிரான் | 120 |
| 7. | திருமாலை | முதலாயிரம் | தொண்டரடிப்பொடி | 45 |
| 8. | திருப்பள்ளி யெழுச்சி | முதலாயிரம் | தொண்டரடிப்பொடி | 10 |
| 9. | 'அமல ஞதி பிரான்' | முதலாயிரம் | திருப்பாணழ்வார் | 10 |
| 10. | 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' | முதலாயிரம் | மதுரகவி யாழ்வார் | 11 |

....... அடுத்த பக்கம்

| வரிசை எண் | பாசுரப்பெயர் | பகுப்பு | பாடியவர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| | பெரிய திருமொழி | இரண்டாவதாயிரம் | | |
| 1. | பெரிய திருமொழி | இரண்டாவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 1084 |
| 2. | திருக்குறுந் தாண்டகம் | இரண்டாவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 20 |
| 3. | திருநெடுந் தாண்டகம் | இரண்டாவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 30 |
| | இயற்பா : | மூன்ருவதாயிரம் | | |
| 1. | முதல் திருவந்தாதி | மூன்ருவதாயிரம் | பொய்கையார் | 100 |
| 2. | இரண்டாம் திருவந்தாதி | மூன்ருவதாயிரம் | பூதத்தார் | 100 |
| 3. | மூன்ரும் திருவந்தாதி | மூன்ருவதாயிரம் | பேயார் | 100 |
| 4. | நான்முகன் திருவந்தாதி | மூன்ருவதாயிரம் | திருமழிசைப் பிரான் | 96 |
| 5. | திருவிருத்தம் | மூன்ருவதாயிரம் | நம்மாழ்வார் | 100 |
| 6. | திருவாசிரியம் | மூன்ருவதாயிரம் | நம்மாழ்வார் | 7 |
| 7. | பெரிய திருவந்தாதி | மூன்ருவதாயிரம் | நம்மாழ்வார் | 87 |
| 8. | திருவெழுக் கூற்றிருக்கை | மூன்ருவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 1 |
| 9. | சிறிய திருமடல் | மூன்ருவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 1 |
| 10. | பெரிய திருமடல் | மூன்ருவதாயிரம் | திருமங்கை யாழ்வார் | 1 |
| | திருவாய்மொழி: | நான்காவதாயிரம் | நம்மாழ்வார் | 1102 |
| 1. | இராமாநுச நூற்றந்தாதி | ............................ | திருவரங்கத் தமுதனர் | 108 |
| | அநுபந்தம் : | | | |
| 1. | உபதேச ரத்தின மாலை | ............................ | மணவாள மாமுனிகள் | 74 |
| 2. | திருவாய்மொழி நூற்றந்தாதி | ............................ | மணவாள மாமுனிகள் | 100 |

## 2. இரட்டைக் கோயில்கள் - வரைபட விளக்கம்.

### அ. ஸ்ரீ நாச்சியார் (ஆண்டாள்) சந்நிதி.

1. பந்தல் முன்மண்டபம்.
2. சிங்கம்மாள் குறடு.
3. முன்மண்டபம்.
4. கோயிற் கடைகள்.
5. அருச்சகர்கள் வாழுமிடம்.
6. வானமாமலை ஜீயர் சந்நிதி.
7. வேதாந்த தேசிகர் சந்நிதி.
8. மணவாள மாமுனிகள் சந்நிதி.
9. திருக்கலியாண மண்டபம்.
10. கோயில் அலுவலகம்.
11. கருடாழ்வார் சந்நிதி.
12. அருச்சனை டிக்கட் வழங்குமிடம்.
13. கோயில் நூலகம்.
14. யானை கட்டும் மண்டபம்.
15. பசுத் தொழுவம்.
16. குடைவர வாசல்.
17. கொடிமரம்.
18. அஷ்ட லட்சுமி சந்நிதி.
19. திருமடைப் பள்ளி.
20. வாகன அறைகள்.
21. கருங்கல் பளிங்கு மண்டபம்.
22. இராமர் - கிருட்டிணர் சந்நிதி.
23. கொத்தமார் அறை.
24. ஸ்ரீநிவாசன்-சுந்தர ராசன் சந்நிதி.
25. திருமுடி விளாகம்.
26. வெஞ்சன அறை.
27. தைல அறை.
28. சொர்க்க வாசல்.
29. சொர்க்க வாசல் முன்மண்டபம்.
30. உபரி மடைப் பள்ளி.
31. பழைய யானை மகால்.
32. ஏகாதசி மண்டபம்.
33. கண்ணாடியறை.
34. லெட்சுமி-நாராயணர் சந்நிதி.

35. சேனை முதல்வர் சந்நிதி.
36. மாதவிப் பந்தல்.
37. சுக்கிர வாரக் குறடு.
38. திருமஞ்சனக் குறடு.
39. கண்ணாடிக் கிணறு.
40. அருத்த மண்டபம்.
41. கருவறை.
42. திருப்பூர நந்தவனம்.
43. திருப்பூர மண்டபம்.

ஆ. வடபத்ர சயனர் சந்நிதி.

44. கோபுர நுழைவாயில்.
45. கோபுரம்.
46. கொடிமரம்.
47. கூரத் தாழ்வார் சந்நிதி.
48. உடையவர் சந்நிதி.
49. நம்மாழ்வார் சந்நிதி.
50. திருமடைப் பள்ளி.
51. சுவாமி புறப்பாட்டு மண்டபம்.
52. நந்தவனம்.
53. பெரியாழ்வார் சந்நிதி.
54. கிணறு.
55. வில்லிபுத்தூருறைவார் குறடு.
56. சக்கரத் தாழ்வார் சந்நிதி.
57. கோயில் பின்வாசல்.
58. இராப்பத்து மண்டபம்.
59. நரசிம்மர் சந்நிதி (கீழ்த் தளம்).
60. கோபால விலாசம் (மேல் தளம்).
61. வடபத்ர சயனர் சந்நிதி (மேல்தளம்).

## 3. கோயில் நிருவாகி அறிவிப்பு :

அருள்மிகு நாச்சியார் திருக்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர்.

அறிவிப்பு

கோயிலுக்கு வரும் சேவார்த்திகள் தரிசனம் அல்லது அருச்சனை செய்வதில் ஏதாவது குறை பாடுகள் இருந்தால் நிர்வாக அதிகாரியிடம் தெரியப் படுத்தவும்.

– நிர்வாக அதிகாரி.

## 4. ஆடிப்பூரக் கலைநிகழ்ச்சிகள்-நிகழ்ச்சி நிரல்.

*5.8.80 ஆடி 21 செவ்வாய்*

*1-ம் திருநாள்.*

*மாலை 5 மணி*

*தே. கல்லுப்பட்டி புலவர்*
*திரு. சே. பால கிருஷ்ணன்*
*அவர்கள்*
*உபந்நியாசம்-*
*'திருமங்கை யாழ்வார்'*

*இரவு 8 மணி*
*மதுரை குயிலிசை*
*செல்வி எம். ஆண்டாள்*
*இன்னிசை,*
*உபயம் :*
*கே. ஆறுமுகவேல்,*
*மம்சாபுரம்.*

*மாலை 6 மணி*

*தமிழ்மறைக் காவலர்,*
*திருக்குறள் வி. முனுசாமி*
*பி.ஏ., பி.எல்., அவர்கள்*
*சொற்பொழிவு -*
*'அருளாளர் அருளிய*
*அருள்வாக்கு',*

*இரவு 9.30 மணி*
*உலகத்தமிழ் மாநாடு புகழ்*
*சின்ன காருக்குறிச்சி*
*செந்தில் எம்.கே. சின்ன-*
*சுப்பையா அவர்கள்*
*'நாதஸ்வர இன்னிசை'*
*உபயம் : திரு. வீரப்ப பிள்ளை*
*என்ற பெத்தையா பிள்ளை,*
*மம்சாபுரம்.*

*இதுபோன்றே ஏனைய எட்டு நாட்களிலும் பல்வேறு கலைநிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. திருநாள் முழுவதற்கும் இராசபாளையம் சண்முகம் மில்ஸ் உரிமையாளர் மின்சார உபயம் செய்கின்றார்.*

## 5. கோயிற் கரும்பலகை அறிவிப்பு :

*19.4.81 சித்திரை மாதம் 7ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை சித்ரா பௌர்ணமி ஸ்ரீஆண்டாள் சேஷ வாகனத்தில் வர, ஸ்ரீமன்னார் குதிரை வாகனத்தில் காலை 9 மணியளவில் அழகர் - ஆற்றில் இறங்குகிறார். பக்தர்கள் அனைவரும் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.*

*- நிர்வாக அதிகாரி.*

## 6. 17.1.81 தினமலர்ச் செய்தி - ஆண்டாளின் தவம் நீங்களும் பார்க்க வேண்டாமா :

*போர்வைகளை விலக்கியபின் தனது நீண்ட அடர்ந்த கூந்தலை அவிழ்த்து விட்டுக் கொள்கிறாள். அடேயப்பா எத்தனை அடர்ந்த கூந்தல் அது. கூந்தலை இத்தனை பெரிதாகப்*

பார்த்து தமிழக முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம் வியந்து, 'இப்படியுமா ஒரு கூந்தல்' என்று கேட்டதாக அலங்கார பட்டர் கூறியது ஒன்றும் ஆச்சரியம் இல்லை. அத்தனை பெரியது. ரவிவர்மா படத்தில்தான் இதை நாம் பார்த்துள்ளோம்.

இப்போது எண்ணெய் தேய்த்துக் கொள்ளப் போகிறாள். அதற்குள் ஒருதடவை அந்தச் சுட்டிப் பெண் வெற்றிலை போட்டுக் கொண்டு கண்ணாடியைப் பார்த்துக் கொள்கிறாள். அந்தக் கூந்தலை நாலு பாகமாக வகிர்ந்து கொள்கிறாள். (நான்கு வேதங்களை அது நினைவு படுத்துகிறதாம்). (அவளுக்காகவே 16 பச்சிலைகள், 16 வேர்கள், சந்தனம், புனுகு, ஜவ்வாது போன்றவைகளைக் கொண்டு மிகப் பெரும் செலவில். இந்த எண்ணெய் தயாரிக்கிறார்கள். இஃது ஒரு பரம்பரைத் தைலம் தயாரிப்பு முறை).

சுமார் ஒரு மணிநேரம் எண்ணெய்த் தேய்ப்பு நடக்கிறது. ஆண்டாளின் தலைக்கு எண்ணெய் தேய்த்து அஃது அவள் தலைக்குள் நன்றாகத் தட்டி இறக்கப்பட ஒரு மணிநேரம் குறைவுதான். பார்த்தவர்கள் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே யிருக்கிறார்கள். கடைசியாக ஒரு தடவை வெற்றிலை போட்டுக் கொண்டு தங்கக் கிண்ணத்திலே தண்ணீர் வாங்கி வாயைக் கொப்பளித்து விட்டுத் தனது கூந்தலை அள்ளிக் கொண்டை போட்டுக் கொள்கிறாள். ஒரு பூச்சரத்தையும் வைத்துக் கொள்கிறாள். ஆகா ! அதைப் பார்க்க வேண்டும். நாம் அவசர உலகில் வாழ்கிறோம். நமக்கு எதற்குத்தான் நேரம் இருக்கிறது. ஆண்டாளைப்போல வாழ்க்கையை அமைதியாக-அழகாக ரசிக்கத் தெரிந்தால், எத்தனை மன நிம்மதி-நிறைவு வரும் என்றெல்லாம் நம் மனது அலைகிறது.

பின்னர் ஒற்றைப் புடவையைச் சித்தெனக் கட்டிக் கொண்டு குளக்கரைக்கு வந்து நிற்கும் கோலம் அப்பப்பா! சாதாரணப் பெண் உயிர் பெற்று வந்து நிற்பது போலவே காணப் படுகிறாள்.

அங்கு, குடம் குடமாக வாசனைத் தூள் கலந்த தண்ணீர்; நடுவில் பெரிய தங்கக் குடம் (இது பழம்பெரும் நாடகக் கலைஞர் கன்னையா தந்ததாம்). நிம்மதியாகக் குளித்து முடிக்கிறாள். பின்னர் அலங்காரங்கள் செய்து கொண்டு புறப்படுகிறாள்.

## 7. 17.2.81 தினமலர்ச் செய்தி :

ஸ்ரீவில். பிப். 17 – ஸ்ரீவில்லிபுத்தூர் நகரில், மையத்திலுள்ள திரு (முக்) குளத்தில் தெப்பத் தேர் விழா நாளை (18.2.81) துவங்குகின்றது. இது 20.2.81 முடிய மூன்று தினங்கள் நடைபெறும்.

முதல் நாளான நாளை இரவு 9 மணியளவில் நடைபெறும் தெப்ப உற்சவத்தில் ஆண்டாள்-ரெங்கமன்னர் பவனி வருவர்.

ஸ்ரீவில்-பிப். 19- இன்றிரவு 9 மணிக்குத் தெப்பத் தேரில் வடபத்ர சுவாமி, ஸ்ரீபெரியாழ்வார், ஸ்ரீநிவாசப் பெருமாள் ஆகியோர் பவனி வருகின்றனர்.

3வது நாளான நாளை (20.2.81-இறுதி நாளில்) நடைபெறும் தெப்ப உற்சவத்தில் ஸ்ரீராம பிரான், ஸ்ரீகிருஷ்ணன், ஸ்ரீசுந்தர ராசப் பெருமாள் ஆகியோர் பவனி வருவர். வித்வான்கள் மாடசாமி-பாலசுப்பிரமணியம் நாதஸ்வரக் கச்சேரியுண்டு. நேற்று ஆயிரக்கணக்கான மக்கள் தெப்பத் திருவிழாவினைக் கண்டு களித்தனர். ஸ்ரீஆண்டாள் கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் இன்ஜினியர் எஸ். இராஜம், கோயில் நிர்வாக அதிகாரி இ. தேனையா மற்றும் அறங் காவலர் குழு உறுப்பினர்கள் விழா ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தனர்.

ஸ்ரீவில். பிப். 20-

இன்று 3வது நாள் தெப்பத்தில் தெய்வீக - திருவுலாச் சிறப்பு மலர். இத்தெப்பத் திருநாளில் கலந்துகொண்டு ஸ்ரீஆண்டாள், ரெங்க மன்னாரின் அருளுக்குப் பாத்திரமாகுமாறு பக்தர்கள் யாவரும் கேட்டுக் கொள்ளப் படுகின்றார்கள்.

எஸ். இராஜம்
அறங்காவலர் குழுத் தலைவர்
கே. அருணாசலம்.
கே. ராமன். க. இராஜு.
பி. வீர பத்திரன்
அறங்காவலர்கள்.

இ. தேனையா, எம்.ஏ.; பி.எல்.
நிர்வாக அதிகாரி.
ஸ்ரீநாச்சியார்(ஆண்டாள்)
திருக்கோயில்-
ஸ்ரீவில்லிபுத்தூர்.

8. 20.3.81 தினமலர்ச் செய்தி-ஆண்டாள் திருக்கலியாணச் சிறப்புமலர்:

ஸ்ரீவில்லிபுத்தூரில் இன்று ஸ்ரீ ஆண்டாள் திருக்கலியாணம்

தினமலர் சிறப்புமலர்.

## தெய்வீகத் திருமண அழைப்பிதழ்

பேரன்புடையீர்,

நிகழும் ரெளத்திரி வருடம் பங்குனி மாதம் 7ந் தேதி வெள்ளிக் கிழமை உத்திர நட்சத்திரம் அமிர்த யோகம் துலா லக்னத்தில் இரவு 7.30 மணிக்குமேல் 8.15க்குள்

ஸ்ரீவில்லிபுத்தூர் பெரியாழ்வார் அவதார புத்திரி - அருள்மிகு ஆண்டாள் நாச்சியாருக்கும்

ஸ்ரீ ரெங்க நாதன் அருள்மிகு ரெங்க மன்னாருக்கும்

தெய்வீகத் திருமணம்

ஸ்ரீஆண்டாள் சந்நிதியில் அமைந்திருக்கும் அலங்கார மேடையில் நடைபெற இருக்கிறது. அனைவரும் திரளாக வருகை புரிந்து தெய்வீகத் திருமணத்தைக் கண்டு களித்துத் திருவருள் பெற அன்புடன் வேண்டப் படுகிறார்கள்.

எஸ். இராஜம், L.E.E.
அறங்காவலர்
குழுத்தலைவர்.

இ.தேவையாஎம்.ஏ.; பி.எல்.,
நிர்வாக அதிகாரி.

கே. அருணாசலம், கே. இராமன், பி.எஸ்சி.
க. ராஜு. பி. வீர பத்திரன், அறங்காவலர்கள்.
அருள்மிகு நாச்சியார் திருக்கோயில்,
ஸ்ரீவில்லிபுத்தூர்.

## தேவர்கள் நடத்தி வைத்த ஸ்ரீஆண்டாள் திருக்கலியாணம் :

*ஸ்ரீவில்லிபுத்தூர் மார்ச் 19–*

*ஸ்ரீ ரங்கத்திலிருந்து ரெங்க நாதன் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி, பங்குனி உத்திர நன்னாளில் நடந்த திருக்கல்யாணம் அன்று நாம் பிறந்திருந்து, பார்க்கக் கொடுத்து வைக்காதவர்களானோம் என்று வருத்தம் சிறிதுமில்லாதிருக்க நேரில் நடந்தது போல, ஐயாயிரம் ஆண்டுகளாக ஆண்டுதோறும் நடந்த திருக்கல்யாண உத்ஸவத்தினை நம் கண்படைத்த பிரயோசனம் பெறும்படியாகத் தரிசிக்கிறோம் என்றால், முன் காலத்திலுள்ள பெரிய விசாலமான பெரிய மனது படைத்த பெரியோர்களை (பின்னுள்ளவர்க ளிடத்திலுள்ள கருணையுடைய முன்னோர்களை) என்றும் கொண்டாடக் கடமைப் பட்டுள்ளோம்.*

## பூரண கும்ப வரவேற்பு :

*ஸ்ரீரெங்க நாதன் ஸ்ரீ ஆண்டாளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டி வாரண மாயிரம் சூழ வருகிறார். பூரண கும்பங்களால் வரவேற்கப் படுகிறார். பெரியாழ்வாரிடத்தில் பெண் கேட்பதற்காக, சிவன், அயன், இந்திரன் முதலானோர் பெரியாழ்வார் திருமாளிகைக்கு வருகிறார்கள், (தற்போதைய ஸ்ரீ ஆண்டாள் சந்நிதிதான் பெரியாழ்வாரின் திருமாளிகை). இருவருக்கும் பொருத்தமான நாளைப் பார்த்து, "நாளை வதுவை மணமென்று" முடிவு செய்கின்றனர். மிக அழகாக, திருக்கல்யாண மண்டபம் அலங்கரிக்கப் படுகிறது. நான்கு திக்குகளிலிருந்தும் பூர்ண கும்பங்களில் தீர்த்தம் வருகிறது. பிராம்மணோத்தமர்கள் அந்தத் தீர்த்தத்தில் வேத மந்திரங்களை யிட்டு நிறைந்த ஆயுளான நன்மைகள் உண்டாக வேண்டுமென்று தெளித்து, பல்லாண்டு பாடுகிறார்கள். ரெங்க மன்னராகிய அழகிய மணவாளன் பவித்ரமும் கையுமாக, யார் மீதும் படாமல் ஒதுங்கி மிகவும் ஆசாரத்துடன் நடந்து வருகிறார். ஏன் இந்த ஆசாரம் என்றால், சீதைக்கு வில், ருக்கு மணிக்கு எருதுகள், இவளது தகப்பனார் ஆசார சீலர்; ஆகையால் இவளைக் கைப்பிடிக்க ஆசாரம்தான் முக்யம். கதிரொளி தீபம் கலசமுட னேந்திச் சதிரிள மங்கையர் தாம் வந்தெதிர் கொள்ள, மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றூத, முத்துடைத் தாமம் நிறைதாழ்ந்த பந்தற்கீழ், மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து ஸ்ரீ ஆண்டாள் கைத்தலம் பற்றுகிறான், அதன்பின் திருமாங்கல்யதாரணம், தீவலம் வருதல், அம்மி மிதித்தல், பின் அக்கினிக்கு*

முன்னால் இருந்ததால் சுகுமாரமான திருமேனிகளுக்கு வாட்டம் வராமலிருக்க, குங்குமம் அப்பி, குளிர் சாந்தம் மட்டித்து என்று சொல்கிறபடி, திருமஞ்சனம் செய்து ஊர்வலமாக எழுந்தருளுதல் முதலாக தான் கனவிற் கண்டபடியே திருக்கல்யாணம் இம்மாதம் 20.3.81ஆம் தேதி நடைபெறுகிறது.

## 9. கோரத வோட்டம் பற்றிய சுவரொட்டி:

*அருள்மிகு நாச்சியார் திருக்கோயில் : ஸ்ரீ வில்லிபுத்தூர் திருக்கலியாணம்.*

*30.3.80 காலை 9 மணிக்குத் திருத்தேர், இரவு 7–8 மணிக்குத் திருக்கல்யாணம்.*

*பக்தர்கள் அனைவரும் கலந்து ஸ்ரீ ஆண்டாள் அருள்பெற அழைக்கிறேன்.*

இ. தேனையா, எம்.ஏ., பி.எல்.,

*நிர்வாக அதிகாரி.*

## 10. தேரோட்டத் திருவிழா–கலை நிகழ்ச்சிகள்:

*20.3.81 சிறப்பு நிகழ்ச்சிகள்.*

| | |
|---|---|
| *காலை 7.30–9.00* | *திருத்தேர், பால சுப்பிரமணியம்– மாடசாமி மேளம்.* |
| *மாலை 4 – 5* | *நாச்சியார் பட்டி ஸ்ரீராமுலு தேசிகன் உபந்நியாசம் – 'கோதையும் கோவிந்தனும்'.* |
| *மாலை 5 – 6* | *பிரம்மஸ்ரீ ஸ்ரீ சுகப்பிரம்மம் ராமஸ்வாமி சாஸ்திரிகள் உபந்நியாசம் 'ஆண்டாள் திருக்கல்யாணம்'.* |
| *இரவு 6 – 7* | *வித்வான் வி.எஸ். செல்லம் நாராயண ராஜா, பி.லிட். 'ஸ்ரீ ஆண்டாளை ஆண்டாள்'.* |
| *இரவு 7 – 8.30* | *க. சுடலை யாண்டி – மேளக் கச்சேரி, ஸ்பெஷல் தவுல் உண்டு.* |

*இரவு 8.30மணிக்கு மேல் தர்மபுரி மாவட்டம், ஒசூர், செல்வி என். சாயி லட்சுமி – நடனம்.*

## 11. கரும்பலகையில் எழுதப்பட்டுள்ள கோயிலறிவிப்பு :-

*5.4.81 பங்குனி மாதம் 22ஆம் தேதி, ஞாயிற்றுக் கிழமை (யுகாதி பண்டிகை) தெலுங்கு வருஷப் பிறப்பு, இரவு 7.30 மணிக்கு மேல் ஸ்ரீ ஆண்டாள் சந்நிதியில் புதுப் பஞ்சாங்கம் வாசித்தல் நடைபெறும்.*

## 12. பெருந் தேர்த்திருவிழா நாள்-நேரம் அறிவிக்கும் சுவரொட்டி :

*அருள்மிகு நாச்சியார் திருக்கோயில் ஸ்ரீவில்லிபுத்தூர்.*

*ஆண்டாள்.*

*பெரிய திருத்தேர் 13.8.80 காலை 9 மணிக்கு வடம் பிடித்து இழுக்கப் படும்.*

*பக்தர்கள் அனைவரும் திரளாக வந்து வடம் பிடித்து ஸ்ரீ ஆண்டாள் ரெங்க மன்னர் அருள்பெற, பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.*

*அறங்காவலர் குழுத்தலைவர், இ. தேனையா, எம்.ஏ.,பி.எல்.,*
*அறங்காவலர்கள். நிர்வாக அதிகாரி.*

## 13. அரவணைத் தளிகை விற்பனை விபரம் :

| எண் | எஞ்சிய நைவேத்தியப் பொருட்கள் | | ரூ. பை |
|---|---|---|---|
| 1. | திருமால் வடை | 1க்கு | 0.30 |
| 2. | தேங்குழல் | 1க்கு | 0.30 |
| 3. | அப்பம் | 1க்கு | 0.30 |
| 4. | சக்கரைப் பொங்கல் | 1க்கு | 0.50 |
| 5. | வெண் பொங்கல் | 1க்கு | 0.25 |
| 6. | உக்கரை கும்பா | 1க்கு | 0.30 |
| 7. | தோசை | 1க்கு | 0.30 |
| 8. | அரவணை பால் | 1க்கு | 0.50 |
| 9. | உபரி தளிகை | கிலோ 1க்கு | 1.50 |

## 14. கோயிலில் திருமணம் செய்ய விதிகள் :

1. *மாப்பிள்ளைக்கு 21 வயதும் பெண்ணுக்கு 18 வயதும் பூர்த்தியானதற்குப் பள்ளி அல்லது மருத்துவமனைச் சான்றிதழ் தாக்கல் செய்ய வேண்டும்.*

2. பெற்றோர்கள் அல்லது காப்பாளர்கள் திருமணத்தின்போது உடனிருந்து கையொப்பமிட வேண்டும்.

3. முதல் திருமணமா என்பதற்குப் பெற்றோர்கள் அல்லது பிரமுகர்கள் சான்றிதழ் கொடுக்க வேண்டும்.

— செயல் அலுவலர்.

## 15. ஸ்ரீஆண்டாள் ரெங்கமன்னார் படங்கள் வகையரு விற்பனை விபரம்.

| எண் | பொருட்கள் | ரூ. பை |
|---|---|---|
| 1. | ஸ்தல புராணம் (தமிழ்) | 4. 00 |
| 2. | ஸ்தல புராணம் (ஆங்கிலம்) | 4. 00 |
| 3. | நாச்சியார் திருமொழி | 0. 25 |
| 4. | திருப்பல்லாண்டு | 0. 20 |
| 5. | ஆண்டாள்-ரெங்க மன்னார் படம் (பிரிண்ட்) | 0. 30 |
| 6. | 'வாரண மாயிரம்' இசைத் தட்டு செட் 1க்கு | 17. 20 |

## பயன்பட்ட நூல்கள்

1. அருணாசலம், ப.: பக்தி இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், (வி.உ) உரிமைப்பதிவு, சென்னை-5, அக்டோபர், 1973.

2. ஆழ்வார்கள் : நா.தி.பி., வி.என். தேவ நாதன், (ப.ஆ.) 1971.

3. ஆறுமுக நாவலர்,கே.: இந்துமத இணைப்பு விளக்கம், தொண்டன் காரியாலய வெளியீடு, நாகர் கோயில், விஜயதசமி, 27.10.1963.

4. இராகவையங்கார், மு.ஸ்ரீ : ஆழ்வார்கள் - காலநிலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், புதியபதிப்பு 15.8.1981.

5. உரைநடைத் திரட்டு : புகுமுக வகுப்பு, முதற் பகுதி – தமிழ், 1977. மதுரைப் பல்கலைக் கழக மத்திய கூட்டுறவு அங்காடி, பல்கலை நகர், மதுரை – 625 021.

6. ஐயனாரிதனார். : பு. பொ. வெ. மா. கழகம், திருநெல்வேலி-1. சென்னை–1.

7. கலைக்களஞ்சியங்கள்: கலைக்களஞ்சிய அலுவலகம், பல்கலைக் கழகக் கட்டிடம், சென்னை–5., ஜூன், 1959,

8. குழந்தைசாமி,வா.செ. : ஆராய்ச்சி நெறிமுறைகள், (இ.ப.) ச. வே. சுப்பிரமணியன், (ப. ஆ.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை – 600 020. மார்ச், 1977.

9. கோவிந்தராச முதலியார், கா. ர. : ஆழ்வார்கள் வரலாறு, முதற் புத்தகம்; கழகம், திருநெல்வேலி–1 சென்னை–1. ஏப்ரல், 1948.

10. சாமி சிதம்பரனார் : ஆழ்வார்கள் அருள்மொழி, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை – 14. (ஆ.இ.).

11. சுவாமி சித்பவானந்தர்: 'கோயில்', க.க., தொ. 4; த.வ.க., சென்னை –1956.

12. சீநிவாச ராகவன்,அ.: இலக்கிய மலர்கள்; மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயம்புத்தூர்–1; (ஆ.இ.).

13. சுப்பு ரெட்டியார், ந.: பாண்டி நாட்டுத் திருப்பதிகள், வெளியீட்டாளர், எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி -1, சென்னை – 1, மார்ச் 1977

14. சொக்கலிங்கம், ஏ. : சமய கிண்டர் கார்டன் அல்லது ஆலயங்களின் உட்பொருள் விளக்கம், II'ஆலயம் தொழுவது சாலவும் நன்று'. ஏ. சொக்கலிங்கம், இலஞ்சி, 1953.

15. தொல்காப்பியம் : நியூசென்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-600 098, 1981.

16. நடராஜன், எஸ். (நஜன்) : தமிழர் பண்டிகைகளும் பண்பாடும் (இ.ப.) வெளியிடுபவர், என். வலிதாம்பாள், பிரதிபா பிரசுரம், மயிலாப்பூர், சென்னை-600 004, 1978.

17. பாலசுந்தர நாயகர்,கோ: நா.தி.பி:, க.க., தொ. 6., த.வ.க., சென்னை - 1959.

18. புருஷோத்தம நாயுடு பு.ரா. : 'ஆழ்வார்கள்; க.க., தொ. 1; 1954. 'திருமகள்', க.க., தொ.6., 1959. த.வ.க., சென்னை.

19. புறநானூறு, (இ.ப.). : நியூ சென்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-600 098., 1981.

20. பூவராகம் பிள்ளை, ஆ. : 'ஆண்டாள் பிள்ளைத் தமிழ்', க.க.,தொ. 1., த.வ.க., சென்னை-1954.

21. பி. ஸ்ரீ. : ஆண்டாளும் மீராவும், ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை-5; ஜுன், 1977.

22. வெங்கட் ராமையர், டி.எல்., : ''அவதாரம்', க.க., தொ.1., த.வ.க., சென்னை-1954.

23. ஷண்முக நாதன், பெ.க.: ஸ்ரீவில். ஸ்தல மஹாத்மியம், ஸ்ரீநாச்சியார் தேவஸ்தானம். ஸ்ரீவில். 1.6.1958.

24. ஷண்முக நாதன், பெ.க.: ஸ்ரீவில். தலவரலாறு (ஐந்தாம் பதிப்பு) அருள்மிகு நாச்சியார் திருக்கோயில், ஸ்ரீவில். 20.1.1980.

# கலைச்சொல் விளக்கம்-அகரவரிசை.

அக்தார் - உபயதாரர், மண்டபதாரர்.

அங்குரார்ப்பணம் - தொடக்கம்.

அங்குமணி - பல்பொருட்கள்.

அடைக்காய் அமுது - பாக்கு, வெற்றிலை.

அபிஷேகம் - திருமஞ்சனம், நீராட்டு.

அமிர்த கலசம் - கொழுக்கட்டை.

அமிர்த மதனம் - பாற்கடல் கடைதல்.

அருக்கிய பாத்யம் - இறைப் பாதங்களில் மலரிட்டு வார்க்கும் நீர்.

அருளிப் பாடு - அழைப்பு.

அலங்காரத் திருமஞ்சனம் - சுலோகத்துடன் கூடிய நீராட்டு. திருவிழா நாட்களில் சுலோக விரிவுரையுடனும் தூபதீபங்களுடனும் செய்யும் நீராட்டு.

அறங்காவலர் குழு - கோயிலாட்சிக் குழு.

அஷ்டதிக் பந்தனம் - எண் திசைகளோடும் இறைவனை இணைக்கும் கிரிகை.

அஷ்ட பர்வதம் - எண்மலைகள்.

அஷ்டோத்ரம் - நால்வேத, வைகானச சூத்ர, திவ்வியப் பிரபந்த, இதிகாச புராண, யதிராச விம்சதி ஆகிய எண் சேவை.

ஆசீர்வாதம் - வாழ்த்து.

ஆராதனை - வழிபாடு; தொழுகை.

ஆஸ்தானம் - மூல ஸ்தானம் ; கருவறை.

| | | |
|---|---|---|
| இயல் கோஷ்டி | – | பாசுர சேவைக் குழு. |
| இயல் தொடக்கம் | – | பாசுரத் தொடக்கம். |
| உற்சவ சாந்தி | – | வாஸ்து சாந்தி; திருவிழா நிறைவு நாளில், கோயிலினுள் மந்திரம் சொல்லி நடத்தும் திருஷ்டிக் கழிப்பு. |
| உற்சவ மூர்த்தி | – | திருவிழாக் கடவுள். |
| எல்லைக்கரை மண்டபம் | – | இராசபாளையம் வழியில் ஸ்ரீவில். எல்லை காட்டும் மண்டபம். |
| ஏகாந்தத் திருமஞ்சனம் | – | திரையிட்டுச் செய்யும் நீராட்டு. |
| கண்ணன் திருக்கோலம் | – | கிருஷ்ணன் கோவர்த்தன கிரியை ஏந்திய நிலையிலுள்ள கோலம். |
| கந்த பொடி | – | வீதிவலம் வருகின்ற பெரியாழ்வார் மக்களுக்கு வழங்கும் மணம் மிகுந்த தூள். |
| கந்தாடை வீதி | – | கந்தாடை அந்தணர்கள் வாழுகின்ற வீதி. |
| கருடப் பிரதிஷ்டை | – | மந்திரம் சொல்லிப் பூசனை செய்து, கொடிப் பட்டத்தில் கருடாழ்வார் உருவேற்றுதல். |
| காப்புக் கட்டுதல் | – | ரக்ஷா பந்தனம்; கிரிசைகளை நடத்தும் ஆசிரியனுக்கு இடையூறு வராமல் காக்க வேண்டிக் கையில் கயிறு கட்டுதல். |
| குட தீபம் | – | எண்ணெய் வார்த்துத் திரியிட்டு மூடியுள்ள செம்பு மாதிரியான பாத்திர தீபம். |

| | | |
|---|---|---|
| குடைவர வாசல் | – | கோயில் முன்வாசல். |
| கும்ப ஸ்நபனம் | – | குட முழுக்கு; குட நீராட்டு. |
| கேள்வைக்காரர் | – | அடைப்பைக்காரர் ; வெற்றிலை பாக்கு மடித்துத் தருபவர். |
| கோதா ஸ்துதி | – | வேதாந்த தேசிகரால் பாடப்பட்ட 29 வடமொழிச் சுலோகங்கள். |
| கோரதம் | – | துணைத்தேர்; சிறுதேர். |
| கோஷ்டி விநியோகம் | – | ( நைவேத்தியத்தைக் ) குழுவிற்கு வழங்குதல். |
| கைங்கர்யம் | – | திருப்பணி. |
| சகஸ்ரதாரா அபிஷேகம் | – | (ஆயிரங் கண்) சல்லடைத் திருமஞ்சனம். |
| சங்க நிதி, பதும நிதி | – | சங்கு, தாமரை வடிவி லமைந்த பாத்திரங்கள். |
| சங்கற்பம் செய்தல் | – | உறுதி கூறுதல். |
| சங்கு சக்கர தீவட்டி | – | இரும்பினால் சங்கு, சக்கர வடிவிலமைந்த தீவட்டி. |
| சடாரி | – | ஸ்ரீசடகோபம்; இறைவனின் எழிற் பாதங்கள். |
| சாத்துமுறை | – | சாற்றுமுறை; பாசுர சேவை முடிப்பு. |
| சந்நிதி மரியாதை | – | கோயிலில் தரப்படுகின்ற மாலை, பரிவட்டம், சடாரி சாற்றும் மரியாதை. |
| சப்த கலசம் | – | ஏழு கலசம் ; ஏழு குடம். |
| சப்தா பரணம் | – | ஏழரண்களுக்குள் உள்ள இறைவன் கேட்டருள, புராணம் படித்தல். |
| சிங்கம்மாள் குறடு | – | ஆண்டாள் சந்நிதி முன்மண்டபம். |

| | | |
|---|---|---|
| சிருஷ்டி | - | படைப்பு. |
| சுக்கிர வாரக் குறடு | - | வெள்ளிக் கிழமைக் குறடு. |
| சூர்ணம் | - | பாலிகை சாற்றிக் கும்பம் வைத்துக் கடாட்சிப்பது. |
| செய்த விண்ணப்பம் | - | செய்யுளால் (கவிகளால்) விண்ணப்பித்தல். |
| சைத்யோ உபச்சாரம் | - | சந்தனம், மலர் சாற்றுகின்ற உபச்சாரம். |
| சோடஷ உபச்சாரம் | — | 16 வகைக் கிரிசைகள். |
| சோடஹ உபச்சாரம் | - | 108 வகைச் சடங்குகள். |
| ஸ்திதி | - | காப்பாற்றல் தொழில். |
| தச தானம் | - | பத்துக் காசுகள் வீதம் பத்துப் பேருக்குக் கொடுத்தல். |
| ததி யன்னம் | - | தயிர்ச் சோறு. |
| தளிகை | - | அமுது, பிரசாதம். |
| தருப்பப் புல் | - | நாணல் புல். |
| தாடீ பஞ்சக சேவை | - | இராமாநுசரால் செய்யப் பட்ட ஐந்து சுலோக சேவை. |
| திருத்திரை வாங்குதல் | - | திரை நீக்குதல். |
| திருமன் பந்தம் | - | தீவட்டி. |
| திருவந்திக் காப்பு | - | நாட்பூசனை, சிறு திருவிழாக் காலத் திருஷ்டிக் கழிப்பு, சூடத்தைக் கொளுத்திக் காட்டி எறிதல். |
| திருவாராதனை | - | பூசனை. |
| திருவேடுபறி | - | திருவேடர் (திருமங்கை யாழ்வார்) பறி (களவு). |
| தீர்த்தம் | - | ஏலம், கிராம்பு, ஜாதிப் பத்ரி, பச்சைக் கற்பூரம், துளசி முதலியவற்றின் சாறு; துளசிச் சாறு |

| | |
|---|---|
| தீர்த்தக் கோஷ்டி | – தீர்த்தப் பிரசாதம் பெறுகின்ற குழு. |
| தீர்த்த வாரி | – திருவிழாக் காலத் திருஷ்டிக் கழிப்பு நீராட்டு. |
| தேவ ஸ்தானம் | – கோயில் நிருவாகம் (அலுவலகம்). |
| தோளுக்கினியான் | – சாதாப் பல்லக்கு. |
| தைலக் காப்பு | – ரோஜா, மலங்காட்டுப் பச்சிலை, செண்பக மொட்டுக்கள் போன்றவற்றி லிருந்து எடுக்கப்பட்ட எண்ணெய். |
| நவ கலசம் | – ஒன்பது குடம். |
| நாட்பாட்டு | – அன்றாடச் சேவைப் பாசுரங்கள். |
| நாரண தீபம் | – துணியில் பொரி வைத்துக் கட்டி, நெய்யில் முக்கிச் செய்யும் தீபாராதனை. |
| நித்ய சந்தான கோஷ்டி | – நாட்பாட்டுச் சேவைக் குழு. |
| நேர்த்திக் கடன் | – கைமாற்றுச் சேவை; அர்ப்பணம். |
| நைவேத்தியம் | – நிவேதனம்; வழிபாட்டிற்குரி யோர்க்கு வைக்கும் படையல். |
| பச்ச வடம் | – புது ஜவுளி, புத்தாடை. |
| பச்சை பரப்பல் | – காய், கரும்பு, பழ வகைகளைப் பரப்பி வைத்தல். |
| பஞ்ச பாத்திரம் | – ஐந்து பாத்திரம். |
| பட்டாச்சாரியார் | – கொடியேற்றும் அருச்சகர் (பட்டர்). |
| படிகளைதல் | – நீக்குதல். |

| | | |
|---|---|---|
| படிக்கம் | - | தீர்த்தம். |
| படியேற்று சேவை | - | வீதிவலம் வருவோர், கோயில், மேடை ஏறும் போது, அரையர் ஆற்றுகின்ற பாசுர சேவை. |
| பரங்கி நாற்காலி | - | தந்தம் (அல்லது). வெள்ளை நாற்காலி. |
| பரம பதம் | - | இறை யடி. |
| பரமபத வாசல் | - | சொர்க்க வாசல். |
| பரிசாரகர் | - | கோயில் திருப்பணி புரியும் ஸ்தானீகர். |
| பலி சாதித்தல் | - | வெளி சாதித்தல்; மலரிட்டு நீர் வார்க்கும் மலர்ப் பலி. |
| பால யோகம் | - | காலைச் சிற்றுண்டி. |
| பானகம் | - | வெல்லப் பாகு. |
| பிராகாரம் | - | திருச்சுற்று. |
| பிரசாதம் | - | நைவேத்தியம், சாதம். |
| பிரமோற்சவம் | - | பெருந்திருவிழா; பெரு விழா. |
| பிரதக்ஷம் | - | சுற்றுதல். |
| புண்யா வாசனம்,(அல்லது) புரோக்ஷித்தல். | - | (மாவிலையால் பூர்ண கும்ப நீர் தெளித்து) சுத்தி செய்தல். |
| பூரி தட்சணை | - | ஐந்து காசுக் கொடை |
| ஸ்ரீபாஷ்யம் | - | பாஷ்யக்காரராம் இராமாநுசர் வழிவந்தவர்கள். |
| மங்களா சாசனம் | - | மங்களக் காட்சிதர எழுந்தருளுவோர்க்கு, மங்களமாகப் பாசுர சேவை செய்தல். |
| மடைப்பள்ளி | - | சமையலறை. |

| | | |
|---|---|---|
| மண்டபம் | - | வீதிவலம் வருவோர் எழுந்தருளும் இடம். |
| மணி மண்டபம் | - | முகப்பு மண்டபம். |
| மரியாதை | - | துளசி, மலர் தருதல். |
| மாட வீதிகள் | - | கோயிலைச் சுற்றியுள்ள தெருக்கள். |
| மிருத் சங்கிரகணம் | - | மண்ணெடுத்தல், முளையிடுதல். |
| முத்தங்கி சேவை | - | முத்துக்கள் பதித்த ஆடை அணிவித்தல். |
| முத்துக்குறி சேவை | - | முத்துக்களைப் பரப்பிக் குறி பார்த்தல். |
| மௌன பலி | - | மேளதாள வாத்தியமில்லாப் பலி சாதிப்பு. |
| வராக புராணம் | - | ஸ்ரீவில். தல புராணம். |
| வாகனம் | - | எழுந்தருளுவோர் அலங்காரமாகின்ற ஊர்தி. |
| விடாய்ப் பருப்பு | - | நீரில் நனைந்த பாசிப்பருப்புடன் உப்புக் கலந்து செய்வதாகிய நைவேத்தியம். (விடாய் நீக்கும் சிற்றுண்டி). |
| விடாயாற்று மண்டபம் | - | களைப்பாற்றும் மண்டபம். |
| விண்ணப்பம் கேட்டல் | - | உத்தரவு பெறுதல். |
| விஸ்வக் சேனர் | - | சேனாபதி, சேனாதிபதிசேனை முதல்வர். |
| வேத விண்ணப்பம் | - | நால்வேத சேவை. |
| வையாளி சேவை | - | குதிரை யேற்றம். |
| யதிராஜ விம்சதி | - | உடையவர்மேல் பாடப்பட்ட 20 வடமொழிக் கவி. |

